ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருப்பாவைச் செல்வம்


டாக்டர் மதி. சீனிவாசன்

பேராசிரியர், மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் (Retd.)

து.கோ. வைணவக் கல்லூரி, சென்னை - 106.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆண்டாள் திருவடிகளே சரணம்

# திருப்பாவைச் செல்வம்

**டாக்டர் மதி. சீனிவாசன்**

பேராசிரியர், மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்

(Retd)

து.கோ. வைணவக் கல்லூரி, சென்னை-106

**மாறன் அருள்நெறி வெளியீடு**

A2, சாந்தி வசந்தா அடுக்ககம்

எண். 4, தெள்ளிய சிங்கப்பெருமாள் கோவில் 2வது சந்து

திருவல்லிக்கேணி, சென்னை 600 005.

முதற் பதிப்பு : டிசம்பர், 1994 (சுடர் வெளியீடு : 7)
இரண்டாம் பதிப்பு : நவம்பர், 2008
**விலை : ரூ. 50-00**

## டாக்டர் மதி சீனிவாசனின் வேறு நூல்கள்

1. **கொல்லி காவலன்**
   (பெருமாள் திருமொழி விளக்கம்)
2. **சடகோபர் கண்ட சமயம்** (திருவாய் மொழி பற்றியது)
   தமிழக அரசின் முதற்பரிசு பெற்ற நூ
3. **இதயப் பூக்கள்**
   கவிதைத் தொகுதி
4. **திருவாய் மொழி- தெளிவுரை**
   (பகுதி - 1 & 2)
5. **திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி - தெளிவுரை**
6. **நாலாயிர திவ்யப்பிரபந்தம் - தெளிவுரை**
   (நான்கு பகுதிகள்)
7. **ஸ்ரீமத் பாகவதம் (செவ்வைச்சூடுவார் மூலத்தின் தெளிவுரை)** (ஆறு பகுதிகள்)

புத்தகத் தயாரிப்பு : ஆர்என்ஆர் பிரிண்டர்ஸ்
நெ.19, தாண்டவராயன் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
☎ 2844 7071

Sri:



Srimathe Ramanujaya Nama:

# SRI VANAMAMALAI MUTT

## NANGUNERI - 627 108.

Place : Nanguneri

Date : 23.06.2008



## மங்களாசாஸனம்; மதிப்புரை

பேரன்புக்குரிய வைணவப் பெரியோர்களே, ஆத்திகச் சான்றோர்களே, இதோ நமது ஆன்மீக நண்பர் டாக்டர் ஸ்ரீமதுபயவே, மதி.ஸ்ரீநிவாஸன் ஒரு அத்புதமான புதையற் செல்வத்தை நமக்கெல்லாம் வாரி வழங்கியுள்ளார். இதுவே "திருப்பாவைச் செல்வம்" எனும் சீரிய அருட்செல்வம்; குன்றாத, வற்றாத பெருஞ்செல்வம். ஆழ்வார்கள் அனைவரது தீந்தமிழருளிச் செயல்களாம் திவ்வியப் பிரபந்தங்கள் யாவுமே சகல வேத சாரங்களாய் மிளிரா நிற்கும் நிலையார் பாடல்கள். அத்தனை திவ்வியப் பிரபந்தங்களிலும் தன்னிகரற்ற பேரொளி பரப்பிச் சுடர்விடும் வைரமாய்த் திகழ்வது சூடிக்கொடுத்த

சுடர்க்கொடியின் முப்பதே பாசுரங்கள் கொண்ட "திருப்பாவை". பாதகங்கள் தீர்த்து, பரமனது திருவடித் தாமரையிணையினையே நமக்குக் காட்டவல்ல, வேதமனைத்துக்கும் வித்தாய் விளங்கிடும் திறன் ஒப்பற்ற உயர்வினை உணர்ந்துள்ள வைணவ உலகம், நித்தமும் இத்திவ்வியப் பிரபந்தத்தை திவ்விய தேசங்களனைத்திலும், திருக்கோவில்களெல்லாவற்றிலும் தப்பாமல் ஓதி உய்வுபெற்று வருகின்றது. அர்த்த பஞ்சகத்தையும் உள்ளடக்கி போதித்து, இறைப் பேரன்பின் முதிர்ந்த அனுபவத்தையே பக்தப் பெருமக்களது திருவுள்ளங்களிலே பெறுவிக்க வல்லதாயிலங்கும் இந்த "திருப்பாவை"யை ஸ்ரீஸ்வாமி எம்பெருமானார் தமது நித்யாநுஸந்தானமாகக் கொண்டு ஒழுகிவந்தார். இதன் காரணமாகவே எம்பெருமானாரை வைணவவுலகம் "திருப்பாவை ஜீயர்" என்று வழங்கிப் போற்றுகின்றது.

மாதங்களிற் சிறந்த மார்கழி வந்துவிடின் "திருப்பாவை" ஒலிக்காத திருக்கோவிலே இல்லை; இதன் சொற்பொழிவுகள் செவியுறாத சபைகளே இல்லை – என்ற பெற்றி வாய்ந்து விளங்கா நிற்கும், பக்தியமுதச் சுவை சொட்டச்சொட்டத் தித்திக்கும் அருங்காப்பியமிது. இந்தப் பேரின்பச் சுவைப்பெருக்கில் இழியும் ஆத்மாக்களை எங்கோவோர் நாரணனெனும் கருணைக்கடல் மூழ்கடிக்கும் இதனை ஒரு அனுபவ சாத்திரம் எனப் பகர்வர் பெரியோர்.

இந்த வற்றாத சுவையூற்றில் தாமும் திளைத்து, கேட்போரையும் திளைப்பித்துவரும் நமதன்பர் பேராசிரியர் முனைவர் மதி.சீனிவாசன் அவர்கள் சற்றே புதிய, தமக்குரிய

கண்ணோட்டத்தை வெளியிட்டு ‘‘**திருப்பாவைச் செல்வத்தை**’’ நமக்கு அள்ளித் தருகின்றார் இப்போது. திருப்பாவையின் முதற்பாசுரத்தின் முதல் வரியிலேயே ‘‘**மதிநிறைந்த நன்னாள்**’’ தோன்றி மனநிறைவைத் தருகின்றதல்லவா. இப்பேராசியரும் ‘மதிநிறைந்த’ – அறிஞர் பெருமகனார்; இது மிகப் பொருத்தமாய்த் தானே விளங்குகின்றது ? இந்நூலாசிரியர் எமது மாவட்டத்தைச் சார்ந்த – ‘மன்னார் கோவில்’ எனும் திவ்விய தேசத்தில் விளங்கா நின்ற, பேரும் புகழும் பெற்ற “**ஸ்ரீ உ.வே. திருமலை ஐயங்கார்**’’ ஸ்வாமியின் இளையதிருக்குமாரர். இதனையே மிகப் பொருந்தும் வகையில் இவர் ‘‘மதி’’ எனச் சுருக்கி தமது திருப்பெயருடன் இணைத்துக் கொண்டுள்ளார். ‘‘**திருமால்**’’ எனும் சிறந்த மாதவிதழின் ஆசிரியராயுமிருந்து தமிழினத்திற்கும், வைணவ சமுதாயத்திற்கும் சீரிய தொண்டு பூண்டொழுகும் இப்பெரியவர் திவ்விய தம்பதியரது திருவருளால் நோய்நொடியற்ற நீண்ட ஆயுள் பெற்று, இவ்வாறான இறைப்பணியைத் தொடர்ந்து புரிந்திலங்கிடுக என நாம் மனமார்ந்த மங்களாசாஸனம் செய்த மகிழ்கின்றோம்.

ஸ்ரீவானமாமலைத் திருப்பதியில்
‘ஜ்யேஷ்டாபிஷேக’ நன்னாள்.
ஆனி – 9.

**ஸ்ரீராமாநுஜன்**

# முன்னுரை

(முதற்பதிப்பில் வெளிவந்தது)

ஆண்டாள் தான் சூடிக் கொடுத்த மலர் மாலையால் கண்ணனைப் பிணைத்தாள். நாம் அவன் அருளைப் பெற நமக்காக அவள் பாடிக் கொடுத்த பாமாலை திருப்பாவை ஆகும். உண்மை, நன்மை, அழகு என்னும் முக்கூட்டுக் கலவையிலே முகிழ்த்தது இப்பாவை நூல்.

ஆய்ச்சியாகவே மாறிய ஆண்டாளின் பாவனை முதிர்ச்சியே திருப்பாவையின் உயிர் நிலை ஆகும். இறைவனுடன் உறவு கொண்டு ஆளாகி அவனுக்கே பணி செய்வதுதான் ஆண்டாள் மேற்கொண்ட நோன்பின் நோக்கம். பறை வேண்டுதல், நீராடுதல் இவை இரண்டும் வெறும் குறியீடுகளே. இறைவனுக்கு உறவாகித் தொண்டு புரிய விழைவதைப் 'பறைவேண்டுதல்' குறிப்பிடுகிறது. 'நீராடுதல்' அவன் குணங்களில் மண்டிக் கிடப்பதைச் சுட்டுகிறது.

திருப்பாவையிலே காணக் கிடக்கும் விழுமிய பொருள்கள் பலப்பல ஆவன. கடவுள் உணர்விலே கனிந்து வெளிப்படும் மெய்ப்பொருள் சிந்தனை ஒரு புறம்; கவிதை உணர்ச்சியில் மலர்ந்து தனிப்படும் அழகுக் காட்சிகள் மறுபுறம்; கண்ணாடி போல, சமுதாய மலர்ச்சியைப் பிரதிபலிப்பது இன்னொரு புறம் - ஆக இப்படி, இத் திருப்பாவை பட்டை தீட்டப்பட்ட வைரம் போல ஒளிவிடுகிறது.

இருபது ஆண்டுகளுக்கும் மேலாக மார்கழி மாதந்தோறும் அடியேன் திருப்பாவைத் தொடர்சொற்பொழிவுகள் ஆற்றி வந்துள்ளேன். வெறும் நூல் பயிற்சிக்கும் மேலான இந்த அனுபவம், அடியேனுக்கு இப்புத்தகம் எழுத மிகவும் துணை நின்றது.

என் கெழுதகை நண்பர் டாக்டர் பூவண்ணன் அவர்கள் அடியேனை இப்பணியில் தூண்டி ஆதரவு நல்கினார்; அச்சு வடிவில் இது வெளிவர அவரே காரணம் ஆவார். அடியேன் நன்றியும் கடப்பாடும் அவர்க்கு என்றும் உரியன.

இப்புத்தகத்தை வெளியிடும் 'சுடர்' அமைப்பினர்க்கும், குறைந்த காலத்தில் சீரிய முறையில் அச்சிட்டு உதவிய துர்க்கை அச்சகத்தார்க்கும் அடியேன் பணிவன்பான நன்றி.

அன்பன் அடியேன்,

**மதி சீனிவாசன்**

ஸ்ரீ:

# அடியேன் விண்ணப்பம்

(இரண்டாவது பதிப்புக்கு)

காரேய் கருணை இராமாநுஜர் உகந்த நூல்களில் முதன்மை ஆனது திருப்பாவை ஆகும். சூடிக்கொடுத்த சுடர்க் கொடியான ஆண்டாள் அருளிய **திருப்பாவை** ஸ்ரீவைஷ்ணவர்களின் அன்றாட அநுஸந்தானத்தில் இடம் பெற்றுள்ள மேன்மை கொண்டது. ஆத்மாவின் உய்வுக்கான அர்த்த பஞ்சகத்தை வெளியிடும் இத்திருப்பாவையின் உள்ளார்ந்த தத்துவங்களை நம் பூர்வாச்சாரியர்கள், பல்வேறு படிகளில் பரக்க அருளியுள்ளார்கள். ஆசை பற்றி இதில் ஆழங்காற்பட்ட அடியேனைத் தமிழ் ஆர்வல அன்பர்கள் தூண்டியதால், **1994**ல் **'திருப்பாவைச் செல்வம்'** என்னும் இந்நூல் முதற்பதிப்பாக, **சுடர்வெளியீடு** அமைப்பின் ஆதரவில் வெளிவந்தது. பதினான்கு ஆண்டுகள் கடந்த பின்னர் இதன் இரண்டாவது, பதிப்பு வெளிவர ஆண்டாள் நாச்சியார் அருள்பாலிக்கிறார்.

இப்பதிப்புக்கு முகப்பு அணிசெய்யும் மங்களாசாசன மதிப்புரை நல்கி அருளிய **ஸ்ரீமத் பரமஹம்ஸ ஜகத்குரு வானமாமலை ஸ்ரீகலியன் ராமானுஜ ஜீயர் ஸ்வாமி**க்கு அடியேன் தயை அன்பால் கைம்மாறிலேன். சிறியேன் ஆகிய அடியேன்பால் அன்னான் கொண்டுள்ள பரிவுக்கும் முழுமையான அருள் பார்வைக்கும் என்றும் கடப்பாடுடையேன். இந்நூல் மறுபடியும், இரண்டாவது பதிப்பாகி வெளிவர ஊக்கமுடன் உதவிய ஸ்ரீமான் கிடாம்பி நாராயணனுக்கு வாழ்த்துப்பொருந்திய நன்றி. இந்நூலை அழகுறவும், அருமையாகவும், அச்சிட்டு உதவிய RNR அச்சகத்தாருக்கும் அதன் உரிமையாளர் ஸ்ரீமான் ராஜனுக்கும் அடியேனுடைய மனமார்ந்த நன்றி உரியது.

தொண்டர் தொண்டன் அன்பன்,

**மதி. ஸ்ரீநிவாஸன்**

ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை

## ஆண்டாள் தனியன்கள்

### ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது

நீளாதுங்க ஸ்தநகிரி தடீ ஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ச்ருதி சத சிரஸ் ஸித்தமத்யாபயந்தீ
ஸ்வோச் சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:

### உய்யக்கொண்டார் அருளிச் செய்தவை

அன்னவயல் புதுவை யாண்டாள்★ அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்★ - இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை★ பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே!★ தொல்பாவை
பாடியருள வல்ல பல்வளையாய்! - நாடிநீ
வேங்கடவற்கு கென்னைவிதியென்ற இம்மாற்றம்★
நாம் கடவாவண்ணமே நல்கு.

# நூல்

††மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்★
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்★
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!★
கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரன்★
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்★
நாராயணனே நமக்கே பறை தருவான்★
பாரோர் புகழப் படிந்தேலோரெம்பாவாய். ... 1

வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம்பாவைக்கு★
செய்யும் கிரிசைகள் கேளீரோ★ பாற்கடலுள்
பையத் துயின்ற பரமடின்அடி பாடி★
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி★
மையிட்டெ ழுதோம் மலரிட்டு நாம் முடியோம்★
செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்★
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி★
உய்யுமாறெண்ணி உகந்தேலோரெம்பாவாய். ... 2

††ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி★
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்★
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து★
ஓங்கு பெருஞ்செந்நெலூடு கயலுகள★

பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப★
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்கக்★ குடம் நிறைக்கும் வள்ளல்பெரும்பசுக்கள்★
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரெம்பாவாய். ... 3

ஆழி மழைக்கண்ணா ஒன்று நீ கைகரவேல்★
ஆழியுள்புக்கு முகந்து கொடு ஆர்த்தேறி★
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்து★
பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில்★
ஆழிபோல்மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து★
தாழாதே சார்ங்கமு தைத்த சரமழைபோல்★
வாழஉலகினில் பெய்திடாய்★ நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய். ... 4

மாயனை மன்னுவடமதுரை மைந்தனை★
தூயபெருநீர் யமுனைத்துறைவனை★
ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை★
தாயைக்குடல்விளக்கம் செய்த தாமோதரனை★
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித் தொழுது★
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க★
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்★
தீயினில் தூசாகும் செப்பேலோரெம்பாவாய். ... 5

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயில்★
வெள்ளைவிளிசங்கின் பேரரவம்கேட்டிலையோ?★
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு★
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி★
வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை★
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்★
மெள்ளஎழுந்து அரியென்றபேரரவம்★
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். ... 6

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத்தன்★ கலந்து
பேசினபேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே★
காசும்பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து★
வாசநறுங்குழலாய்ச்சியர்★ மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ?★
நாயகப்பெண்பிள்ளாய்! நாராயணன்மூர்த்தி★
கேசவனைப்பாடவும் நீ கேட்டேகிடத்தியோ?★
தேசமுடையாய்! திறவேலோரெம்பாவாய். ... 7

கீழ்வானம்வெள்ளென்று எருமை சிறுவீடு★
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்★
போவான் போகின்றாரைப் போகாமல்காத்து★ உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம்★ கோதுகலமுடைய

பாவாய்! எழுந்திராய் பாடிப்பறைகொண்டு★
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய★
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால்★
ஆவாவென்றாராய்ந் தருளேலோரெம்பாவாய். ... 8

தூமணிமாடத்துச் சுற்றும் விளக்கெரிய★
தூபம்கமழத் துயிலணைமேல் கண்வளரும்★
மாமான்மகளே! மணிக்கதவம்தாள்திறவாய்★
மாமீர்! அவளைஎழுப்பீரோ?★ உன் மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?★
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ?★
மாமாயன் மாதவன் வைகுந்தனென்றென்று★
நாமம்பலவும் நவின்றேலோ ரெம்பாவாய். ... 9

நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றஅம்மனாய்!★
மாற்றமும்தாராரோ? வாசல்திறவாதார்★
நாற்றத்துழாய்முடி நாராயணன்★ நம்மால்
போற்றப்பறைதரும் புண்ணியனால்★ பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகரணனும்★
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான்தந்தானோ?★
ஆற்றஅனந்தலுடையாய்! அருங்கலமே!★
தேற்றமாய்வந்து திறவேலோரெம்பாவாய். ... 10

கற்றுக்கறவைக் கணங்கள் பலகறந்து★
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும்★
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே!★
புற்றரவல்குல் புனமயிலே! போதராய்★
சுற்றத்துத்தோழிமார் எல்லாரும் வந்து★ நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன் பேர்பாட★
சிற்றாதேபேசாதே செல்வப்பெண்டாட்டி!★ நீ
எற்றுக்கு உறங்கும் பொருளேலோரெம்பாவாய். ... 11

கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி★
நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர★
நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!★
பனித்தலைவீழ நின்வாசற்கடைபற்றி★
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற★
மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய்திறவாய்★
இனித்தானெழுந்திராய் ஈதென்னபேருறக்கம்?★
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோரெம்பாவாய். ... 12

புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லா அரக்கனை★
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய்★
பிள்ளைகள் எல்லாரும் பாவைக்களம்புக்கார்★
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று★

புள்ளும்சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய்!★
குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே★
பள்ளிக்கிடத்தியோ? பாவாய் நீநன்னாளால்★
கள்ளம்தவிர்ந்து கலந்தேலோரெம்பாவாய். ... 13

உங்கள்புழைக்கடைத் தோட்டத்துவாவியுள்★
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பினகாண்★
செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர்★
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்★
எங்களைமுன்னம் எழுப்புவான்வாய்பேசும்★
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!★
சங்கொடுசக்கரம் ஏந்தும் தடக்கையன்★
பங்கயக்கண்ணானைப் பாடேலோரெம்பாவாய். ... 14

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?★
சில்லென்றழையேன்மின்! நங்கைமீர்! போதர்கின்றேன்★
வல்லைஉன்கட்டுரைகள் பண்டேஉன்வாயறிதும்★
வல்லீர்கள் நீங்களே நானேதான்ஆயிடுக★
ஒல்லை நீபோதாய் உனக்கென்ன வேறுடையை?★
எல்லாரும் போந்தாரோ? போந்தார்
போந்தெண்ணிக்கொள்★
வல்லானைகொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை★ மாயனைப் பாடேலோரெம்பாவாய். ... 15

நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே!★ கொடித்தோன்றும் தோரண
வாயில் காப்பானே!★ மணிக்கதவம் தாள் திறவாய்
ஆயர்சிறுமியரோமுக்கு★ அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான்★
தூயோமாய்வந்தோம் துயிலெழப்பாடுவான்★
வாயால்முன்னம்முன்னம் மாற்றாதேஅம்மா!★ நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய் ... 16

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்★
எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்★
கொம்பனார்க்கெல்லாம்! கொழுந்தே! குலவிளக்கே!★
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறாய்★
அம்பரமூடறுத் தோங்கி உலகளந்த★
உம்பர்கோமானே! உறங்காதெழுந்திராய்★
செம்பொற்கழலடிச் செல்வா! பலதேவா★
உம்பியும்நீயும் உறங்கேலோரெம்பாவாய். ... 17

†† உந்து மதகளிற்றன் ஓடாததோள்வலியன்★
நந்தகோபாலன் மருமகளே! நப்பின்னாய்★
கந்தங்கமழும்குழலீ! கடைதிறவாய்★
வந்தெங்கும் கோழிஅழைத்தனகாண்★ மாதவிப்

பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்★
பந்தார்விரலி! உன்மைத்துனன் பேர்பாட★
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப★
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய். ... 18

குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால்கட்டில்மேல்★
மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலேறி★
கொத்தலர்பூங்குழல் நப்பின்னைகொங்கைமேல்★
வைத்துக்கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்★
மைத்தடங்கண்ணினாய்! நீ உன் மணாளனை★
எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண்★
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்★
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய். ... 19

முப்பத்துமூவர் அமரர்க்கு முன்சென்று★
கப்பம்தவிர்க்கும்கலியே! துயிலெழாய்★
செப்பமுடையாய் திறலுடையாய்!★ செற்றார்க்கு
வெப்பம்கொடுக்கும் விமலா! துயிலெழாய்★
செப்பன்னமென்முலைச் செவ்வாய்ச்சிறுமருங்குல்★
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்★
உக்கமும் தட்டொளியும் தந்துன்மணாளனை★
இப்போதே எம்மை நீராட்டேலோரெம்பாவாய். ... 20

ஏற்றகலங்கள் எதிர்பொங்கிமீதளிப்ப★
மாற்றாதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள்★
ஆற்றப்படைத்தான்மகனே! அறிவுறாய்★
ஊற்றமுடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய்நின்ற சுடரே துயிலெழாய்★
மாற்றார் உனக்கு வலிதொலைந்து உன்வாசற்கண்★
ஆற்றாதுவந்து உன்அடிபணியுமாபோலே★
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய். ... 21

அங்கண்மாஞாலத்தரசர்★ அபிமான
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டிற்கீழே★
சங்கம்இருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம்★
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே★
செங்கண்சிறுச்சிறிதே எம்மேல்விழியாவோ?★
திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்★
அங்கண்ணிரண்டும்கொண்டு
எங்கள்மேல்நேக்குதியேல்★
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோரெம்பாவாய். ... 22

†† மாரிமலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்★
சீரியசிங்கம் அறிவுற்றுத்தீவிழித்து★
வேரிமயிர்பொங்க எப்பாடும்பேர்ந்துதறி★
மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு★

போதருமோபோலே நீபூவைப்பூவண்ணா! உன்
கோயில் நின்று இங்ஙனேபோந்தருளி★ கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து★ யாம்வந்த
காரியம் ஆராய்ந்தருளேலோரெம்பாவாய். ... 23

†† அன்று இவ்வுலகம்அளந்தாய்! அடிபோற்றி!★
சென்றங்குத் தென்னிலங்கைசெற்றாய்! திறல்போற்றி★
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ் போற்றி★
கன்றுகுணிலா எறிந்தாய்! கழல் போற்றி★
குன்று குடையாஎடுத்தாய்! குணம்போற்றி★
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி★
என்றென்று உன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்★
இன்று யாம் வந்தோம் இரங்கேலோரெம்பாவாய். ... 24

ஒருத்திமகனாய்ப்பிறந்து★ ஓரிரவில்
ஒருத்திமகனாய் ஒளித்துவளர★
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த★
கருத்தைப்பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்★
நெருப்பென்னநின்ற நெடுமாலே!★ உன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில்★
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி★
வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய். ... 25

மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்★
மேலையார்செய்வனகள் வேண்டுவனகேட்டியேல்★
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன★
பாலன்ன வண்ணத்து உன்பாஞ்சசன்னியமே★
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே★
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே★
கோலவிளக்கே கொடியே விதானமே★
ஆலினிலையாய்! அருளேலோரெம்பாவாய். ... 26

†† கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா!★ உன்தன்னைப்
பாடிப்பறைகொண்டு யாம்பெறு சம்மானம்★
நாடு புகழும் பரிசினால் நன்றாக★
சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப்பூவே★
பாடகமே, யென்றனைய பல்கலனும் யாமணிவோம்★
ஆடையுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு★
மூடநெய்பெய்து முழங்கைவழிவார★
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். ... 27

†† கறவைகள்பின்சென்று கானம் சேர்ந்துண்போம்★
அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து★ உன்தன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்★
குறைவொன்றுமில்லாத கோவிந்தா!★ உன்தன்னோடு

உறவேல் நமக்கு இங்கு ஒழிக்கஒழியாது★
அறியாதபிள்ளைகளோம் அன்பினால்★ உன்தன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே★
இறைவா! நீ தாராய் பறையேலோரெம்பாவாய். ... 28

★ சிற்றஞ்சிறுகாலே வந்துஉன்னைச்சேவித்து★ உன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய்★
பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து★ நீ
குற்றேவல்எங்களைக் கொள்ளாமற்போகாது★
இற்றைப்பறைகொள்வானன்று காண்கோவிந்தா!★
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்★ உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம்ஆட்செய்வோம்★
மற்றைநம்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய். ... 29

★ வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனை★
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி★
அங்கப்பறைகொண்ட வாற்றை★ அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான்கோதை சொன்ன★
சங்கத்தமிழ்மாலை முப்பதும் தப்பாமே★
இங்கிப்பரிசுரைப்பார் ஈரிரண்டுமால்வரைத்தோள்★
செங்கண்திருமுகத்துச் செல்வத்திருமாலால்★
எங்கும் திருவருள்பெற்று இன்புறுவரெம்பாவாய். ... 30

ஆண்டாள் திருவடிகளே சரணம்.
திருப்பாவை முற்றும்.

# ஸ்ரீ ஆண்டாள்

கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந்தோன்றுமூர் நீதியால்
நல்ல பக்தர் வாழுமூர் நான்மறைகளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோனூர்

பாதகங்கள் தீர்க்கும் பரமனடிகாட்டும்
வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதைதமிழ்
ஐயைந்துமைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

திருவாடிப் பூரத்திற் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கர்க்கே கண்ணி யுகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

# பொருளடக்கம்

# 1. தோரண வீதி

**காதல் மாளிகை**

கற்பனைக் தேரில் ஏறிக் கால எல்லையையும் தூர எல்லையையும் கடந்து பறந்து போகலாம் வாருங்கள்! அதோ! பின்னோக்கிப் பயணம் செய்து பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு வந்து விட்டோம்! ஆமாம்; தமிழக மண்ணில் பாண்டிய நாட்டு வில்லிபுத்தூரில், ஒரு நந்த கோகுலம் தெரிகிறது! தான் நடந்து, வாழ்ந்து வந்த வில்லிபுத்தூரை நந்தகோகுலமாக மாற்றத் தெரிந்து கொண்ட அந்த மங்கையின் கற்பனை உலகம் நம் கண்முன்னே தெரிகிறதல்லவா? வடபத்திரசாயி கோயில் அல்ல அது; நந்தகோபன் திருமாளிகை ஆகிவிட்டது. விண் முட்டும் மதிற் சுவர்கள், அவற்றுக்குள்ளே வானளாவும் அரண்மனைக் கட்டிடம், வெளிவாசல் காப்பான், உள்ளே சென்றால் உள் வாசல் காப்பான்; இன்னும் உள்ளே நுழைகிற பொழுது, திருவோலக்க மண்டபம் - இவை எல்லாம் கண் முன்னே தெரிகின்றன. இவற்றையும் தாண்டிச் சென்றால் அங்கங்கே மக்களுக்கு ஆடைகளையும், அருந்தும் பானங்களையும், உணவையும் அள்ளி அள்ளி வழங்கும் வெவ்வேறு அறச்சாலைகள் தென்படுகின்றன.

இன்னும் சற்று உள்ளே புகுந்தால் அந்த நந்தகோகுல அரசன் நந்தகோபன் தன் குடும்பத்துடன் வாழும் அந்தரங்க அந்தப்புரம் தென்படுகிறது. அங்கே, அவரவர்க்குப் படுக்கைப் பாங்குகள், கண் கவர்வனவாய் மிளிர்கின்றன. முதற்கட்டில் நந்தகோபன் படுக்கை, நடுக்கட்டில் யசோதையின் படுக்கை, அதற்குப் பின்னே

அவர்கள் செல்வங்கள் பலராமன், கண்ணன் படுக்கைகள் - இவையாவும் முறையாக அமைந்துள்ளன. அந்தப் படுக்கைக் கட்டில்களின் அமைப்பு, தாயன்பு எப்படி இருக்க வேண்டும் என்பதை உலகத்தவர்க்கு விளக்குவதாக உள்ளது. தந்தைக்கும் குழந்தைக்கும் நடுவே தாய். ஆம்; யசோதை, நந்தகோபன் அழைத்தால் வந்து பேசவும், குழந்தை கண்ணன் எழுந்தால் அரவணைக்கவும் ஏற்ற பாங்கிலே இருவர்க்கும் நடுவே தன் படுக்கையை அமைத்துக் கொண்டிருக்கிறாள். கணவனின் கட்டிலுக்கும் குழந்தையின் தொட்டிலுக்கும் மலர்ச் சங்கிலி அமைக்கும் மாண்பன்றோ மாதாவின் தன்மை!

இவை எல்லாவற்றையும் தன் கற்பனை வளத்திலே கண்டு கால எல்லையையும் இட எல்லையையும் தாண்டிக் காதல் மாளிகை கட்டுகிறாள் அந்தப் பெண்! ஆம்; கண்ணன் என்னும் கருந்தெய்வத்தின் காட்சியைப் பழகிப் பழகி, அவன் செய்த சாகசச் செயலில் உள்ளம் இழந்து இழந்து நெஞ்சக் கோவிலிலே அவனை நிறுத்தி வழிபட்டு விட்டாள். ஆகவே அவனை அன்றி வேறு எவனையும் கணவனாக ஏற்பதில்லை என்று முடிவு கொண்டு அதற்காக நோன்பிருந்து, தன் வளர்ப்புத் தந்தையாலே முடிவிலே அவனையே பெற்று அவனுடன் ஒன்றினாள் அவள்! ஆமாம்; அவள்தான் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி கோதை என்கிற ஆண்டாள்.

**எண்ணமெல்லாம் கண்ணன்**

திருத்துழாய்ச் செடிக்கு அங்கமெல்லாம் நறுமணம் திகழும்; அதன் வேரிலும் சரி, இதழிலும் சரி, அன்றி மேல் தோன்றி மலர்கின்ற பொழுதும் சரி - எங்கும் நறுமணம் வீசும். அது போலவே திருத்துழாய்ச் செடிக்குக் கீழே கண்டெடுக்கப்பட்ட

அந்தப் பெண் குழந்தை கோதையின் நெஞ்சம் எல்லாம், குழந்தைப் பருவம் தொடங்கியே 'கண்ணன்' என்னும் பூவண்ணன் நறுமணம் படர்ந்து விட்டது.

இயல்பாகவே தன் உள்ளத்தைத் தான் வழிபடும் தெய்வமான நாராயணனிடத்தே இழந்தாள் அந்தச் சிறுமி! தன்னை வளர்த்த தந்தை விஷ்ணு சித்தர் அன்றாடம் கூறி வந்த கண்ணன் கதைகளிலே மேலும் மேலும் தன் இதயத்தை இழந்தாள். ஓங்கி உலகளந்த உத்தமனான திருமால், ஒருத்திக்கு மகனாகப் பிறந்து, மற்றோர் இடத்தே வளர்ந்த கதையைக் கேட்டாள். நந்தகோபன் குமரனாய், யசோதை சிங்கமாய் வளர்ந்த அவன் வடமதுரை மைந்தனாய்ப் பல மாயங்கள் செய்தான். 'தூய பெருநீர் யமுனைத் துறையில் ஆயர் குலமணி விளக்காக விளங்கிய அவன், தன் தாயை உலகுக்கு எடுத்துக் காட்ட எண்ணித்தான், வயிற்றிலே கயிற்றுத் தழும்பை ஏற்றானோ?' என்று எண்ணுகிறது அச்சிறுமி ஆண்டாளின் பிஞ்சு நெஞ்சம்!

'உலகம் எங்கே தன்னை வளர்த்த யசோதையைத் தாய் என்று அழைக்காமல் ஒதுக்கி விடுமோ? ஒருக்காலும் இவ்வாறு நடக்க விடேன். நான்தான் யசோதையின் பிள்ளை. இதோ அவள் என்னைக் கயிற்றினால் கட்டிப் போட்டு அடக்கி வளர்த்த விதத்தை உங்களுக்கு அடையாளமாகக் காட்டுகிறேன். என் வயிற்றைப் பாருங்கள்! உரலோடு என்னைப் பிணைத்து என் வயிற்றில் கயிற்றுக் தழும்பு என்றும் நின்று நிலவும்படி செய்த அவள் அல்லவா என் தாய்!' என்று உலகோர்க்கு அறைகூவல் விடும் கண்ணன் திருநாமம் தாமோதரன் அல்லவா!

இவ்வாறெல்லாம் கண்ணனின் விளையாட்டை எண்ணிக் கதிந்துருகும் ஆண்டாளின் இதயம் அவனையே கணவனாக

அடைய எண்ணியது. கன்று மேய்த்துக் குன்றெடுத்த சரிதம், புள்ளின் வாய் கீண்ட விள்ளரிய சாகசம், சகடம், உதைத்த அவன் திருவடித்திறல், கன்றாய் வந்த அசுரனைக் கொல்ல விளாமரம் பற்றி எடுத்து வீசிய வீரம் ஆகிய பலவற்றை நினைந்து நினைந்து மயங்கினாள். 'எவ்வாறேனும் இந்தக் கண்ணனையே கைப்பிடிப்பேன். வேறு எந்த மனிதனுக்கும் மாலை போடேன், என்ற மேலான மன உறுதியை வளர்த்துக் கொண்டுவிட்டாள் அவள் !

"மானிடர்க்கு என்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்கிற தீர்ந்த முடிவு அவள் உள்ளத்தில் வேர் ஊன்றி விட்டது.

தான் வாழும் காலத்தை மறந்தாள்; தான் வாழும் இடத்தை மறந்தாள் ; தன் வளர்ப்புத் தந்தையை மறந்தாள். கற்பனை மாயத்திலே தன்னைக் கரைத்துக் கொண்ட அந்தக் கோதை என்னும் காரிகை கண்ணன் திருவிளையாடல்களிலும் சரிதங்களிலும் ஈடுபட்டுத் தன்னையும் மறந்தாள். நாணும் பணிவும் தவிர்த்தாள்.

'நாயகன் கண்ணன் எங்கே?' என்று நாடித்தேட விழைந்தாள். 'பட்டி மேய்ந்த காரேறே! பலதேவன் தம்பியே!' என்று பதைபதைத்துக் குயிலைக் கூவி விடுத்துக் கோவிந்தனிடம் தூது விடுத்தாள். "அழுதேன்! தொழுதேன்; ஆனாலும் அவன் உருவத்தை ஒளித்து விளையாடுகிறானே! அந்த விமலன் வெளிப்பட்டுத் தோன்றி என்னை ஏற்றுக்கொள்ளானோ! எப்பொழுதும் என்னைச் சுற்றிச் சுற்றிச் சுழன்று வருகிறானே! அவனை எங்ஙனம் மறப்பேன்?" என்று ஓலமிடுகிறாள்.

"அழிலும் தொழிலும் உருக்காட்டான் அஞ்சேல் என்னான் அவன் ஒருவன் தழுவி முழுசிப் புகுந்து சுற்றிச் சுழன்று போகானால்."

கண்ணன் மீதான காதல் நெருப்பு மூண்டெழுந்து அவளைச் சுடுகிறது. அவளது ஆன்மாவின் தாபம் கண்ணன் மீதான காதலாகக் கொழுந்து விடுகிறது ; எரிமலையாக உருவெடுக்கிறது. அப்பாலுக்கு அப்பாலாய் அகண்டிதமான பரந்த பொருளான அந்தத் தத்துவம் அணுவுக்குள்ளே அணுப் போலே அவள் ஆத்மாவுக்குள் புகுந்து அலைக்கழித்தது. என் செய்வாள் பாவம்!

அந்தக் கண்ணனுடன் உறவாடப் பெற்ற பொருள்களை எண்ணி ஆதங்கம் கொள்கிறாள். அவன் வாய்ப்பட்ட சங்கைப் பார்த்ததும் அவளது காதல் தீ மேலும் படர்ந்து வளர்கிறது! 'என்ன பேறு இந்தச் சங்கிற்கு! என் இதய காதலன் வாயில் அமர்கிற பெரும் பாக்கியம் ஏற்பட்டு விட்டதே! என்றாவது ஒரு நாள் நானும் அவன் அதரச் சுவை அறியும்படி தொடர்பு உண்டாகாதோ!' என்கிற ஆசை மேலிடுகிறது. 'சங்கே! என் காதலன் அதரத்தில் அமர்ந்தாயே ; அவன் உதடென்னும் இதழ்களின் சுவையை நுகர்ந்தாயோ! அவை பவளங்கள் அல்லவா? அவற்றின் இனிமையை எடுத்துக் கூறாய்? அவன் உதட்டுச் சுவையை நுகர்கிற சங்கே! அவன் வாய்ச் சுவையையும் சேர்ந்தே அனுபவிக்கிறாய். கற்பூரமா அவை! அல்லது தாமரைப் பூக்களா! என் விருப்பத்தை நீயாவது உணரலாகாதா! உன்னைப் போல் நானும் இந்தச் சுவைகளை நுகரும் வாய்ப்புக் கிட்டுமா?" என்று அவள் கண்ண பெருமானின் பாஞ்ச சன்னியத்தைக் கேட்கிறாள்.

*கருப்பூரம் நாறுமோ கமலப் பூ நாறுமோ*
*திருப்பவளச் செவ்வாய்தான் தித்திக் திருக்குமோ!*
*மருப்பொசித்த மாதவன்தன்வாய்ச் சுவையும் நாற்றமும்*
*விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண் சங்கே!"*

அந்தப் பெண்ணின் காதல் தாபம் இவ்வாறு அழியாத நிலையான கவி ஓவியமாக உருப் பெற்று விடுகிறது.

தன்னுணர்வுக் கவிதைகளில் மிக உயர்ந்த எடுத்துக்காட்டாக இக்கவிதை ஒளிவிடுகிறது. உள்ள நெகிழ்ச்சி, ஆத்மதாபம் - இவ்விரண்டையும் குழைக்கும் இந்தக் கவி ஓவியம் என்றும் இலக்கிய உலகில் நிலைபெற்று நிற்பது.

கண்ணன் மீது தான் கொண்ட காதலை வளர்த்துக் கொண்டே தானும் வளர்ந்து பெரியவள் ஆனாள் இந்தக் கோதை ஆண்டாள். தன்னைப் போலவே கண்ணனைக் காதலித்து மனம் இழந்த பெண்கள்தான் உண்டோ என்று தன் தந்தை பெரியாழ்வாரை வினவிய பொழுது ஆய்ச்சிகள் திருவாய்ப்பாடியில் கண்ணனுடன் அளவளாவிய கதையைக் கேள்வியுற்றாள்.

உள்ளத்தை மறுபடியும் இழந்தாள். 'தந்தை கூறும் கதை என்றோ நடந்ததே ; கண்ணன் ஆய்ப்பாடியில் வாழ்ந்த சரிதம் காலம் கடந்தது அல்லவா ! இன்று நான் எவ்வாறு அந்தக் கண்ணனைப் பெற முடியும்! ஐயோ! என் செய்வேன்? கண்ணனின் அவதார காலத்தில் நான் வாழப் பெறவில்லையே!' என்று ஆண்டாளின் உள்ளம் கலங்கிச் சோர்ந்தது.

## திருப்பாவை மலர்ந்தது

'கண்ணன் நடமாடிய யமுனைக்கரைகள், அலைந்து திரிந்து பசு மேய்த்த நந்தகோகுலக் காடுகள், கோவர்த்தன மலை, இவற்றை எங்கே என்னால் காண இயலும்? நான் வாழ்கின்ற இந்த வில்லிபுத்தூர் தமிழ்நாட்டு மண்ணின் தென்கோடி அல்லவா! என்னால் எங்கே பிருந்தாவனத்துக்கும் யமுனைக் கரைக்கும் போக முடியும்?' என்கிற சோக உணர்வு மேலிட்டது. அவள் நெஞ்சத் தாபம் வளர்ந்து கொழுந்துவிட்டு ஓங்கவும் பல படியாய் எண்ண வலைகள் பின்னலிட்டன.

தந்தையின் வேள்விச் சாலை வில்லை வைத்து போட்டி நடத்தி, அதை ஒரு காரணமாகக் கொண்டு, சீதை இராமனை அடைந்தாள்.

நந்தகோகுலத்துக் கும்பர் மக்கள் நப்பின்னை ஏழு எருதுகளை முன் வைத்து வீர விளையாட்டைப் போட்டியாகக் கொண்டு கண்ணன் கைப் பிடித்தாள். இவர்களைப் போலே போட்டிகள் நடத்திச் சுயம்வரம் நிகழ்த்த எவ்வாறு தன்னால் இயலும் என்று நிலை தடுமாறினாள் ஆண்டாள்.

இவ்வாறு அவள் காதல் நோயில் கவிழ்ந்து கலங்கிச் சோகத்தில் உருக் குலைந்தாள். கண்ணன் நினைவாகவே வாழும் தான், எவ்வாறாவது அவனைப் பெற்று மகிழும் பேற்றை அடைய முடியாதா என்று துடித்தாள்.

நந்தகோகுலச் செய்திகளுள் ஆய்ச்சியர் கண்ணனுடன் குரவை கோத்தாடியது பற்றியும் கேள்விப்பட நேர்ந்தது. இடைப் பெண்கள் கண்ணனுடன் குரவை ஆடிய பின் அவனைப் பிரிந்தனர். அவர்கள் தங்கள் பிரிவின் ஆற்றாமையாலே கண்ணனாகவே தங்களை எண்ணிக் கற்பனை செய்து கொண்டு அந்தக் கற்பனையில்தான் உயிர் தரித்தார்கள். இந்த அற்புதமான செய்தியைக் கேள்விப்பட்ட ஆண்டாள் தானும் அவ்வாறே கற்பனை முதிர்வில் தன் காதல்தாபத்துக்கு வடிகால் காண முனைந்தாள். அந்தக் காதல் தாப வடிகாலின் வடிவம்தான் முப்பது கவிதைகளாய் மலர்ந்துள்ள 'திருப்பாவை' என்னும் ஒப்பரிய பாவைப் பிரபந்தம் ஆகும்.

ஆண்டாளின் கற்பனை முதிர்ச்சி அவளை வில்லிபுத்தூரிலேயே திருவாய்ப்பாடியைக் காணச் செய்தது. வில்லிபுத்தூர் திருவாய்ப்பாடியாய் மாறிற்று; அவள் தோழிப் பெண்கள் ஆய்ப் பெண்களாக மாறினார்கள்; தானும் அவர்களிலே ஓர் ஆய்ப் பெண் ஆனாள்; வட பெருங் கோவில் நந்தகோபர் திருமாளிகை ஆயிற்று. வட பெருங் கோவிலுடையான் கண்ணன் ஆனான். இடைப் பெண்களின் நோன்பைத் தான் நோற்க மேலிட்ட விழைவே 'திருப்பாவை'க் கவிதை ஆயிற்று.

கற்பனையின் கனிந்த முதிர்ச்சியாலே அந்தணப் பெரியாழ்வாரால் வளர்க்கப்பட்ட பார்ப்பனிக்கு இடை நடையும், இடைப் பேச்சும், முடை நாற்றமும் இயல்பாகி விட்டன. இந்த அற்புதமான மாயத்தைத் திருப்பாவை என்னும் ஓவியத்தில் கண்டு மகிழ்கிறோம்.

**நோன்பும் பறையும்**

ஆய்ப்பாடியில் இடைப் பெண்கள் கண்ணனை அடைய நோற்ற நோன்பு பற்றி அறிந்த ஆண்டாள் தானும் அவ்வாறே நோன்பு நோற்க விழைந்தாள். அந்த விழைவே திருப்பாவை வடிவம் ஆயிற்று.

கண்ணனையும் ஆய்ப் பெண்களையும் பிரித்து வைத்து ஆயர்கள் மழை இல்லாமல் வறட்சி ஏற்பட்ட காலத்தே மழையை வேண்டி விரும்பினார்கள். தக்கோர்கள் அறிவுரையால் அவ்வாயர்கள் மனம் மாறிக் கண்ணனையே தலைவனாய்க் கொண்டு இடைப் பெண்கள் நோன்பு நோற்க இசைவைத் தெரிவித்தனர். அவ்வாறே ஆய்ப் பெண்கள் கண்ணனைத் தலைவனாகக் கொண்டு நோன்பு நோற்கத் தொடங்கினார்கள்.

வைகறைக் காலத்தில் ஆய்ப் பெண்கள் ஒருவர்க்கொருவர் துயில் எழுப்பி அழைத்துக் கொண்டு அனைவரும் ஒன்றுபட்டுத் திரண்டு இறுதியில் கண்ணன் திருமாளிகை அடைந்து அவனையும் அவன் மனைவி நப்பின்னையையும் அழைத்து ஒரு சேரக் கண்டு மகிழ்ந்தனர். அவன் திருவோலக்கத்தில் நின்று தாங்கள் நோன்பு நோற்க விழைந்தது அவனை அடைவதற்கே; அவனே தாங்கள் விரும்பி வேண்டுகின்ற பறை; அதாவது, அவனுக்கு ஆட்பட்டு அவனன்றி வேறின்றி அவனுக்கே தொண்டு செய்வது என்பதை அறிவித்தார்கள்.

இக்கருத்தினைத் தன் நூலின் பாடு பொருளாக ஆண்டாள் திருப்பாவையில் அமைத்துக் கொண்டாள்.

*"வங்கக்கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்*
*திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி*
*அங்கு அப்பறை கொண்ட ஆற்றை"*

என்று தான் தேர்ந்தெடுத்த பாடு பொருள் இன்னது என்பதைத் தெளிவாக ஆண்டாள் குறிப்பிடுகிறாள்.

இத்திருப்பாவை முழுதும் ஆய்ச்சி பேச்சான புறநிலை அமைப்பாக உள்ளது (இதனை வடமொழியில் அன்யாபதேசம் என்பது). ஆனால் ஆண்டாள் அருளியுள்ள மற்றொரு நூலான நாச்சயார் திருமொழியோ, தன்னுணர்வு வெளியீடாகவே உள்ளது. இரண்டு நூல்களிலும் மெய்ப்பொருள் தத்துவ வெளியீடும் அழகு வழிபாட்டு இறை உணர்வு நுகர்ச்சியும் இழையோடிக் கலந்து கவிதைப் பிழம்புகளாய் வடிவெடுத்துள்ளன. திருப்பாவையின் ஏற்றமும் பொலிவும் ஆழ்வார்களின் மற்றைய அருளிச் செயல்களினின்றும் வேறுபட்டுத் தனித்துவத்தில் ஒளிர்வதை இராமாநுசரும் ஆச்சாரியர்களும் கண்டு கொண்டனர். ஆகவேதான், இத்திருப்பாவை முப்பதையும் வைணவ உலகின் அன்றாட, இன்றியமையாத வழிபாட்டு நூலாக அமைத்தனர் போலும் !

**சத்துருக்கனன் படி**

உலகியலில் ஈடுபட்டு வாழ்க்கை நடத்தும் சாமானிய மக்கள் உடலுக்கும் ஆத்மாவுக்கும் இடையே உள்ள வேறுபாடு அறியாமல் உடலையே ஆத்மாவாக எண்ணி மயங்குவார்கள். இவர்களுக்கும், ஆத்மாவை உள்ளபடி அறிந்தவர்களான முனிவர்களுக்கும் வேறுபாடு உண்டு. முனிவர்களோ தங்கள் சுய முயற்சியாலும்

ஞான நிறைவாலும் இறுதியான உறுதிப்பொருளை அடைகிறார்கள். இத்தகைய முனிவர்களை விடவும் ஆழ்வார்களுக்கு ஏற்றம் உண்டு. ஏனெனில் ஆழ்வார்கள் இறைவனின் எல்லையற்ற அருளால் தங்கள் மயர்வு நீங்கும்படியாக மதி நலம் பெற்றவர்கள். இவ்வாழ்வார்கள் இறை உணர்வு நுகர்வையே விரும்பி விழைந்தனர். அவர்களில் பெரியாழ்வார் தமக்கென்ற தனித்தன்மை கொண்ட காரணம், தாம் பெறும் பகவான் அனுபவத்திலும் பெரிதாக, அவன் வாழ்ச்சியையும் ஏற்றத்தையும் வாழ்த்திப் பல்லாண்டு பாடியதே ஆகும். ஆயின் அவர் திருமகளாரான ஆண்டாளோ இறைவனுக்கு ஆட்பட்டு அற்றுத் தீர்ந்த அடியார்களின் பெருமையைப் பேசி அவ்வடியார்க்கு அடிச்சியாக இருக்க விரும்பினாள். மற்றைய ஆழ்வார்கள் இறைவனான திருமாலாலே மயர்வற மதிநலம் அருளப் பெற்றார்கள். ஆனால் ஆண்டாளோ எம்பெருமானுக்கே உபதேசம் செய்வது போலத்தான் அடிமைத்தன்மையை அறிவித்தாள்.

பகவானின் அனுபவத்தை ஆசைப்பட்ட ஆழ்வார்கள் இளைய பெருமாளான இலக்குவனைப் போன்றவர்கள். அவர்களில் பெரியாழ்வார் பரதாழ்வானுக்கு ஒப்பாக திருமாலின் வாழ்ச்சியையும் மேன்மையையுமே விரும்பினார். ஆனால் ஆண்டாளோ, சத்துருக்கனன் போலே, அடியார்கள், அடிமைத் திறத்தில் நின்றாள். பரதனுக்குத் தொண்டு செய்வதையே மேன்மையாகக் கொண்டதால் இராமனைக் கண்ணெடுத்தும் பாராது, இராமன் அடியவன் ஆன பரதன் அடியவனாகவே சத்துருக்கனன் விளங்கினான். அவனைப் போலவே ஆண்டாளும் அடியார் அடிமைத்திறத்திலேயே நின்றாள்.

**பள்ளமடை :**

ஆழ்வார்கள் இறைக் காதலில் தங்களைப் பெண்களாகக் கற்பனை செய்து கொண்டு தலைவி-தாய்ப்பாசுரங்களில் தங்கள்

பக்தியை வெளியிட்டனர். இவ்வாறு அவர்கள் வெளியிட்ட அகத்திணை அடிப்படை இறைக் காதல் பாசுரங்கள் அவர்களுடைய பாவனா முதிர்ச்சியில் வெளிவந்தவை. இயல்பாக ஆண்கள் ஆதலால் ஆழ்வார்கள் தங்களைப் பெண்களாகக் கற்பனை செய்து கொண்டே 'நாயகி-நாயக' பாவத்தில் பாட வேண்டியதாயிற்று. ஆனால் ஆண்டாளுக்கோ இந்தக் கட்டாய பாவனை நிலை தேவையில்லை. இயல்பாகவே அவள் பெண் ஆதலால், ஆண்டாளுக்கு இது வந்தேறி அன்று, உடலோடு ஒன்றிய இயல்பே. ஆகவேதான் ஆண்டாளின் காதல் நிறைந்த பக்தியை ஆசாரியர்கள் 'பள்ளமடை' என்றனர். பள்ளம் நோக்கி ஓடும் தண்ணீர் இயல்பாகவே இழுப்பும் வேகமும் உடையது போல ஆண்டாளாகிய மங்கையின் பக்திக் காதல் இயற்கையோடு ஒன்றியது. 'பதின்மர்களாகிய ஆழ்வார்களின் ஞானம் அனைத்தும் இவள் பக்கலிலே பெண் சொத்துச் சேர்ந்து போலக் குடிகொண்டு விட்டது என்று ஜனன்யாச்சாரியார் என்னும் ஆசாரியர் அருள்கிறார்.

உடையவரான இராமாநுசருக்குத் திருப்பாவை மீது அளவு கடந்த ஈடுபாடு இருந்தது; தம்மை அவர் இந்தப் பிரபந்தத்தில் இழந்து போனார். இராமாநுசரைத் 'திருப்பாவை சீயர்' என்று அழைக்கும் அளவிற்கு அவருக்கு இந்நூலில் ஈடுபாடு பெரிதாக இருந்ததாம். சிலர் எம்பெருமானாரை அணுகி, 'நீங்கள் திருப்பாவை உரை வெளியிட்டருள வேண்டும்' என்று கேட்டபொழுது அவர் மறுத்தார். 'திருப்பல்லாண்டுக்கு ஆள் கிடைத்தாலும் திருப்பாவைக்கு ஆள் கிடையாது. மோவாய் எழுந்த முரடர்களான ஆண்கள் திருப்பாவை உரை கேட்டு உணர அருகதை அற்றவர்கள்; முலை எழுந்தார்களாகிய பெண்கள் கேட்க வேண்டும். அவர்களிலும் ஆண்டாள் ஒருத்தியே தானே கூறித் தானே கேட்கும்படியான அளவு மிகஉயர்ந்த 'பிரபந்தம் இது!' என்று இராமாநுசர் உரைத்ததாகக் கூறப்படுகிறது.

**நீயே பறை :**

இடைப் பெண்கள் நோற்ற நோன்பினைத் தானும் நோற்பதாகப் பாவனை செய்து கொண்டாள் ஆண்டாள். ஆய்ப்பாடியும் இடைப் பெண்களும் நந்தகோபனும் யசோதையும் நப்பின்னையும் கண்ணனும் அவள் கண் முன்னே தோன்றி விடுகின்றனர். பாவனை ஆய்ப்பாடி தோன்றவும், அந்தக் கற்பனை முதிர்ந்த முதிர்ச்சியில் நோன்பு நோற்பதாகத் தொடங்கி விடுகிறாள்.

மார்கழி மாதம் பிறந்து விடுகிறது; மதி நிறைந்த நன்னாளும் வந்து விட்டது. நோன்பு நோற்க, முதற்கண் உரியதான நீராட்டம் தேவைப்படுகிறது. தோழியர்களை நீராட அழைப்பதாகவும், அவர்கள் நோன்புக் களம் வருவதற்கு, முன் இரவில் உறங்கி எழுந்தவர்கள் வைகறையில் மற்றையோரைத் துயில் எழுப்ப வருவதாகவும் பாவனை சேர்ந்து விடுகிறது.

பாவைக்களம் போய்க் கண்ணனை மையமாகக் கொண்டு நோற்கப் போகும் பாவை நோன்புக்குத் தேவையானவற்றைக் கண்ணனிடம் வேண்டிப் பெறுவதற்கு விழைகிறது, கோதையின் நெஞ்சம். அப்பொருள்களுக்கெல்லாம் தலைமையாய் இருக்கும் கருவி, கொட்டுகிற பறை ஆகும். 'பறை வேண்டி வருகிறோம்', 'பறை தருவாய்', 'இற்றைப்பறை' - என்னும் பல்லவி திருப்பாவையில் ஒவ்வொரு பாசுரத்திலும் இடம் பெறுகிறது. கொட்டுகிற பறையிலே தொடங்கிய கொஞ்சல் கலந்த செல்லப்பேச்சு, முடிவிலே கண்ணனையே அடைவதன்றி வேறு பறையில்லை என்று அறுதி ஆகி விடுகிறது. "உன்னை அல்லவா பாட வந்தோம்! உன்னை அல்லவா கேட்க வந்தோம்? நீ அன்றி எங்களுக்கு உறவில்லை. உன் நிறை எங்கே? எங்கள் குறை எங்கே? உன் நிறைவில் அல்லவா எங்கள் குறை ஒடுங்கவேண்டும்! உன் தன்னோடு

அன்றி வேறு உற்றோம் அல்லோம். மற்றைய எங்கள் ஆசைகளையும் நீயே போக்கு!" என்று ஆண்டாள் கடைசியில் கண்ணன் உரிமைக் காதலியாக, அவனுக்கே ஆட்பட்டுத் தொண்டு புரியும் அடியாளாக ஆகிவிடுகிறாள்.

**தோழிகள் பதின்மர்**

பாவை நோன்பு என்ற காரணத்தைக் கொண்டு ஆண்டாள் தன் காதல் தாபம் கரைய ஓர் உத்தி கண்டாள். ஆயினும், நாட்டாருக்காகவும் அது பயன் தருகிறது. பெண்கள் நோன்பு நோற்றால் மழை பெய்யும் என்னும் நம்பிக்கை வேர் ஊன்றி இருந்த காலம் அது! நாடு செழிக்க, ஊரெங்கும் பால்வளம் மல்க வேண்டிப் பசுக்கள் வாழ, 'மழை' என்னும் அமுதம் இன்றியமையாதது அன்றோ? ஆகவே மழை வேண்டி மழை அருள்வோனாகிய வருணனை அழைத்து - அந்த அழைப்புக்குள்ளே தன் மனக் காதலனையும் அழைத்து - ஆண்டாள் ஒரு கோலம் இழைத்து விடுகிறாள். பெண்களை வைகறையில் துயில் எழுப்புதல், நீராட அழைத்தல், பாவைக்களம் செல்லப் பவனி ஆகியவை நோன்புக்கு முதற்பகுதி ஆகும். அந்தப் பவனியிலே பங்கு கொள்ளும் தன் தோழியர்களை நமக்குக் காட்ட விழையும் ஆண்டாள் எல்லா இடைப் பெண்களுக்கு எடுத்துக்காட்டாகப் பத்துத் தோழியர் பாங்குகளை ஓவியமாகத் தீட்டிக் காட்டுகிறாள்.

நோன்புக்குப் புதியவளாய்ச் சேர்ந்துள்ளவளை நமக்கு முதலில் அறிமுகம் செய்கிறாள் ஆண்டாள். அந்தப் பெண் பிள்ளைக்குப் பின் நாயகப் பெண் பிள்ளையை அழைக்கிறாள் கோதை. இதன் பின்னே கோதுகலம் உடைய பாவைப்பெண், பிறகு மாமன் மகள், அருங்கலமாய் ஒருத்தி, கோவலர் பொற்கொடியாகிய ஒருத்தி, இடைச்செல்வன் தங்கை, போதரிக்கண் அழகு கொண்டவள்.

ஆக இத்தனை பேரையும் அழைத்தாயிற்று. ஒன்பதாக வாய் பேசும் நங்கையைச் சேர்த்துக் கொண்ட பின் கடைசியாகப் பத்தாவது ஆய்ப்பெண்ணான இளங்கிளியையும் கூட்டிக்கொண்டு பாவைக்களம் செல்லப் பவனியைத் தொடர்கிறாள்.

**ஆத்ம யாத்திரை**

பாவை நோன்பின் நாயகன் கண்ணன் ஆயிற்றே! அவன் தந்தை நந்தகோபன் திருமாளிகையைத் தன் தோழியருடன் அடைகின்ற ஆண்டாள், முறையாக வாயிற் காவலர்களை அழைக்கிறாள். அவர்கள் இசைவைப் பெற்ற பின் நந்தகோபனையும் யசோதையையும் அழைத்துக் கண்ணனைத் தருமாறு வேண்டுகிறாள். பலராமனையும் முன்னிலைப் படுத்தி வேண்டிப் பின்பு கண்ணனின் மனையாள் நப்பின்னைப் பிராட்டியை வேண்டி நிற்கின்றனர் ஆண்டாள் குழுவினர். கண்ணனையும் நப்பின்னையையும் சேர்த்தே அழைக்கிற கோதை அவள் இசைவுடனே கண்ணனை அழைத்துத் திருவோலக்கத்துக்கு நடந்து வர வேண்டுகிறாள்.

கண்ணனின் சிங்க நடையைக் காண விரும்பும் ஆண்டாளின் காதல் இதயம், அவன் நடந்து வந்து அமர்ந்ததும், அவன் கால்கள் பட்ட துன்பத்தை எண்ணி நொந்து போகிறது. 'ஐயோ! உன் கால்கள் பட்ட துன்பம் என்னே!' என்று மனம் இரங்கிப் பல்லாண்டு பாடுகிறாள். நின்றகால், நடந்தகால், உதைக்க முழுதும் வளைந்தகால், பாதிவளைந்த கால், என்றிவ்வாறெல்லாம் பாதத்தின் சீர்மை பாடுகிறாள்.

கண்ணனும் ஆண்டாள் பேச்சைக் கேட்ட பின், 'நீங்கள் வந்த காரியம் யாது? வேண்டுவன யாவை?" எனக் கேட்கிறான். சங்கங்கள், பறை, விளக்கு, கொடி' விதானம், விசிறி

ஆகியவற்றைக் கேட்கிற ஆண்டாளுக்குப் பரிசில்களைக் கொடுக்க முன் வருகிறான் கோவிந்தன். 'சூடகம், தோள்வளை, தோடு, செவிப்பூ, பாடகம் என்று பல கலன்களை அணிந்து, பின் ஆடை உடுத்து, அதன் பின்னே பாற்சோறு நெய்முடப் பெய்து முழங்கை வழிய உண்போம்' என்கிறாள். கண்ணனும், 'அப்படியே ஆகட்டும் ; தந்தேன்!' என்று யாவற்றையும் தந்து விடுகிறான்.

ஆனால்.... ... ...

ஆண்டாள் இவற்றை எல்லாம் ஏற்றுக் கொண்டதோடு நிறைவாகச் சென்று விட்டாளா! இடம் விட்டு நகர்ந்தாளா?

இல்லவே இல்லை ; இவற்றைப் பெற்றது போலப் பிரமை கொள்ளும் அளவிற்குப் பேசி இருக்கிறாளே ஒழிய, இவற்றிலா மனம் அமைதிப்படும்? இவையா அந்தக் கோதையின் ஆத்மா வேண்டுகிற பரிசில்கள்? இதுவா பறை? இல்லவே இல்லை. அவள் வேண்டுவது இவற்றுக்கெல்லாம் மேலான - இவற்றைத் தரவல்ல - அவன்! அவனுடன் கூடிக்குலவும் உறவு! அந்த உறவிலே கூட, அவனுக்கே அன்றி வேறு யாருக்கும் ஆட்படாத, தனக்கே உரித்தான, கொள்ள மாளாத இன்ப வெள்ளமாக இருக்கிற ஓர் இணைப்பு! ஆமாம் ; அவனுடன் கூடிய அந்த உறவிலே, அவனுக்கே செய்யக்கூடிய தொண்டுகள், அவை கூட அந்தரங்கம் மிகுந்த சின்னச் சின்னக் குற்றேவல்கள் ; இவற்றையே தன் வேண்டுகோளாக வைக்கிறாள்.

அவன் அவளை ஏவிக் காரியம் கொள்ள வேண்டும். அந்த ஏவலும் குற்றேவலாகக்கூட இருக்க வேண்டும். அவன் ஏவுவதும் இவள் அந்த ஏவலை மேற்கொண்டு தொண்டு செய்வதும் அவன் உகப்புக்கே அன்றித் தன் உகப்புக்கல்ல. அவன் மகிழ்ச்சியில்

தன் மகிழ்ச்சி கரைந்து வேறு எந்த மகிழ்ச்சிக்கும் இடமில்லாதபடியான ஏழேழு ஜன்ம உறவல்லவா ஆண்டாள் இறுதியிலே வேண்டுகிறாள்!

*"குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது"*
*"மற்றை நம் காமங்கள் மாற்று"*

என்று கண்ணன் கால்களைப் பிடித்தே தன் காதல்தாபம் தீர்ந்தவளாய், அவன் கைப்பிடிக்கும் மனைவியாக மாறியதன்றி அவன் அருகேயே என்றும் அமரும் பேறும் பெற்று விடுகிறாள்.

உடையவன் உடைமையைப் பெற்று விடுகிறான்;
நாயகன் நாயகியை அடைந்து விடுகிறான்;
கண்ணன் ஆண்டாளை ஏற்றுக் கொள்கிறான்.

தணியாத தாபம் உடைய ஆன்மா. தன் ஜீவ யாத்திரையின் முடிவில், தாபமும், தான் என்னும் மோகமும் கரைந்து மறைந்து, அந்தப் பேரானந்தக் காதல் எல்லையிலே, இனம் காண இயலாத தத்துவ ஒளியிலே கலந்து விடுகிறது! ஆண்டாளின் திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் விடுக்கும் செய்தி, ஆத்மாவின் புனித யாத்திரை பற்றியதே ஆகும்.

## நூல் வடிவம்

முப்பது பாசுரங்கள் கொண்ட இந்த நூலின் ஒவ்வொரு பாசுரமும் எட்டு அடிகள் கொண்டது! 'ஏல் ஓர் எம்பாவாய்!' என்று முடியப் பெறுவது. "எம் பிள்ளாய்! இதைக் கேட்டு நினைப்பாயாக!' என்னும் பொருளில் முடிவதாகும்.

எம் பாவாய்! - எம் பெண்ணே! ஏல் - கேள்; ஓர் - நினைப்பாயாக.

இவ்வாறின்றி 'ஏல்', 'ஓர்' என்பவற்றைக் கடைசியில் வரும் அசைச் சொற்களாகக் கொண்டு 'எம்பாவாய்' என்பதற்கு 'எங்கள் நோன்பு இது' என்றும் பொருள் கொள்ளலாம்.

முப்பது பாசுரங்களைக் கொண்ட இந்நூல் திருப்பல்லாண்டு போலச் சுருங்கி இராமலும், திருவாய் மொழி போல விரித்திராமலும் உள்ளது. ஆன்ம இறை இயல்புகளையும், ஆன்மா இறைவனை அடையும் நெறியையும், உறுதிப் பொருள் ஆகிய கைங்கரியம் என்னும் தொண்டையும் எளிதில் தெளிவு படுத்துகிறது. விலையற்ற மணிகளால் ஆன மாலை ஒன்றிலே ஒரு மணி குறைந்தாலும் மாலையின் அழகு குறைவது போலே இம்முப்பது பாசுரங்களிலும் ஒரு பாசுரம் குறைந்தாலும் அது பேரிழப்பாகவே இருக்கும்.

முதல் ஐந்து பாசுரங்கள் இறை நிலை பற்றியதாகவும், நோன்புச் செய்தி குறித்தும் பொதுப்பட அமைந்துள்ளன. அடுத்த பத்துப் பாசுரங்கள் பத்துப் பெண்களை நோன்பிற் கலந்து கொள்ளத் துயில் எழுப்புவதாய் அமைவன. இறை நுகர்வுக்கேற்ற பக்தி, காலம், இசைவு இவை வாய்க்கப் பெற்றும், ஆண்டாள், தான் ஒருத்தியே தனியே இறை அனுபவத்தில் திளைக்கலாகாது என்ற கொள்கை உடையவள் ; ஆதலால் தன்னை ஒத்த மற்றவர்களையும் துணை தேடினாள். பகவானைப்பற்றிய அனுபவமோ, 'காலாழும்; நெஞ்சழியும்; கண் சுழலும்' என்றபடி, தனியே அனுபவிக்க ஒண்ணாதது. ஆகவே, அடியார்கள் கூட்டத்தை நாடும் விருப்பால், இப்பத்துப் பாசுரங்களிலும் அவர்களை விளித்து அழைப்பதைக் குறிப்பால் உணர்த்துகிறாள். இறைவன் அடியார்களை முன்னிட்டே இறைவனை அணுகுதல் முறை என்பதை ஆண்டாள் இங்குப் பின்பற்றுகிறாள்.

அடியார்களுடன் இணைந்த ஆண்டாள், நந்தகோபன் திருமாளிகை சென்று நந்தகோபன், யசோதை, பலராமன், நப்பின்னை ஆகியோரை முன்னிட்டுக் கொண்டு கண்ணனை

எழுப்பின படியைப் பின்வரும் ஏழு பாசுரங்கள் தெரிவிக்கின்றன. கண்ணன் எழுந்து வரவும், அவனுக்குப் பல்லாண்டு பாடித் தங்கள் வேண்டுகோளை விண்ணப்பம் செய்து, பறையாகிற தொண்டுரிமையைக் கேட்டு அடைந்த விதத்தை இறுதி எட்டுப் பாசுரங்களும் தெரிவிக்கின்றன.

வேதம் அனைத்துக்கும் வித்தாக உள்ள இத்திருப்பாவை, 'பயின்றோர்க்குப் பாதகங்கள் தீர்க்கும்; பரமன் அடிகாட்டும்' சிறப்புடையது. இறைவன் அனுபவமே வீட்டின்பம் என்பதைப் புலப்படுத்துகிறது. இந்நூல், பிறர் பொருட்டுச் செய்யும் தொண்டே இறுதியான உறுதிப் பொருள் என்பதை எடுத்தோதுகிறது. செம்பொருள்களான, இறைநிலை, உயிர்நிலை, நெறிநிலை, தடைநிலை, உறுதிப் பொருள் ஆகிய ஐந்தையும் தெளிவாக விளக்குகிறது. இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள உறவு எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் அடிமை உறவே என்பதை ஆண்டாள் நிலை நிறுத்துகிறாள்.

நோன்பு என்று ஒரு பெயரிட்டு, இறைவன் அடியார்களை முன்னிட்டு, அவர்களால் இறைவியான திருமகள் உடன்பாட்டைக் கொண்டு, இறைவனை எழுப்பினாள், ஆண்டாள். "உனக்கே ஆட்பட்டோம்; என்றும் எக்காலத்தும் உன் தொண்டையே செய்து, நாங்கள் உயர்வடைய நீ அருள வேண்டும்!" என்று வேண்டினாள்.

இதுவே திருப்பாவை ஆயிற்று.

இத்திருப்பாவைக்கு உரை அருளியுள்ள ஆசாரியர்கள் பெரிய வாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஜனன்யாச்சாரியார் என்னும் ஆய், ஆகிய மூவரே ஆவர். சுத்த சத்துவம் தொட்டாச்சாரியரும் வானமாமலை மடத்து முதல் ஜீயரான பொன்னடிக்கால் ஜீயரும் ஸ்வாபதேச வியாக்கியானம் அருளி உள்ளார்.

# 2. கோபுர வாசல்

---

## நீராட வாருங்கள்

**க**ற்பனை ஆய்ப்பாடியில் காரிகை ஆண்டாளுக்குப் பாவை நோன்பு நோற்கக் காலம் புலர்ந்து விட்டது. ஆம்; பயிர்கள் விளைந்து பயன் தரக்கூடிய காலம் அல்லவா மார்கழி மாதம்! ‘வாருங்கள்! நீராட வாருங்கள்! பனி நீராடப் பாங்கான மார்கழி மாதம் பிறந்து விட்டது!’ என்று ஆண்டாள் தோழிப் பெண்களைக் கூவி அழைக்கிறாள். மாதம் வாய்த்தது போலவே சந்திரனின் ஒளி நிறைந்து பரவும் முழுமதி நாளும் வாய்த்து விட்டதாம்! மங்கல காரியங்களுக்கு ஏற்ற வளர்பிறைக் காலம் நிறை அல்லவா! ‘மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள் வந்து விட்டது! நீராட விருப்பம் உள்ளவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து வாருங்கள்!’ என்று அழைக்கிறாள் கோதை. ஒருவரை ஒருவர் முகம் கண்டு மகிழ்வதற்கு ஏற்ற முழுமதி நாளில் எல்லோரும் கூடிக் கண்ணனைத் துயில் எழுப்புவோம்! அவன் அன்பில் நீராடி ஆனந்தம் எய்துவோம்! வாருங்கள்!’ என்னும் அழைப்பு முதல் முன்னமே விடுக்கப்படுகிறது.

‘நீராடப் போதுவீர்!’ என்பதன் உட்பொருள். ‘கண்ணன் கலவியில் திளைத்து மகிழ’ என்பதாகும். ‘கண்ணன் ஆகிய தடாகத்திலே தோய்ந்து பிரிவுத் துன்பமாகிய வெம்மைத் தாபத்தைப் போக்குவோம்! என்பதாம். சுனை நீராடல் என்னும் உத்தி தமிழ்அகத்திணை இலக்கியத்தில் சுட்டுகிற பொருளையே இங்கு ஆண்டாள் கையாளுகிறாள்.

தலைவனைத் தனி இடத்தில் கண்டு காதலித்துத் தன்னை இழந்த தலைவி, அவனுடன் கலந்து மகிழ்ந்து, பின் தன் தோழியிடம் வரும் பொழுது, 'சுனை நீராடி வந்தேன்,' என்று குறிப்பாகக் கூறும் மரபைத் தமிழ் அகத்திணை இலக்கியத்தில் காணலாம். ஆதலால் 'சுனை நீராடல்' அதாவது மலையிலுள்ள நீர் நிலையில் நீராடல் என்பது கலவியைக் குறிக்கும் தொடராகும்.

கண்ணனும் சுனை போலவே அன்பின் நீர் நிலை அன்றோ! அகத்திணை குறிப்பிடும் சுனை நீராடலை ஆண்டாள் தமிழ் மரபு வழி மாண்பு தோன்ற 'நீராடப் போதுவீர்!' என்று குறிக்கிறாள் என்பர் உரை வேந்தர் பெரிய வாச்சான் பிள்ளை.

ஆன்மாவாகிய உயிர் இறைவனான திருமாலை அடைந்து, அவன் அருளில் திளைப்பதை 'நீராடல்' குறிக்கிறது என்பது மெய்ப்பொருள் தத்துவம் ஆகும்.

'வருகிறவர்கள் எல்லாம் வாருங்கள்! உங்களுக்கு நீராட விருப்பம் மட்டும் இருந்தால் போதுமானது; எங்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள்' என்ற எக்காளம் இடும் அழைப்புக் கேட்கிறது, 'போதுவீர் போதுமினோ!' என்னும் குரலிலே. அந்தப் பெண்கள் என்ன சாமானியமானவர்களா! அழகு மிகுந்த அணிகலன்கள் அணிந்த செல்வச் சிறுமியர்கள் அல்லவா! அதுவும் நந்த கோகுல இடைப் பெண்கள் என்றால் சீர்மையின் முழுமையை அல்லவா பிரதிபலிக்கிறார்கள்! 'சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!' என்பதில்தான் எத்தனைப் பொருள் ஆழம்! ஆய்ப்பாடியிலே உள்ள சிறுமியர் வெறும் சிறுமியர் மட்டும் அல்லர்; செல்வம் வாய்க்கப் பெற்ற சிறுமியர் என்பதாம், என்ன செல்வம் தெரியுமா? செல்வத்தை வெளிக்காட்டும் அணிகலன்கள் அணியப் பெற்றவர்கள் மட்டும் அல்லர்; உண்மைச் செல்வமான ஞானம்,

பக்தி, நோன்பு நோற்க மனம் ஆகியவை வாய்க்கப்பெற்ற செல்விகள் ஆவர் அவர்கள்.

அவர்கள் மட்டுமா இத்தகைய செல்வம் உடையவர்கள்! அவர்களுடைய ஆய்ப்பாடியே சீர்மல்கும் செல்வச் சிறப்புடையதாகும். இடைக் குலச் செல்வம் என்றால் அது பால், தயிர், வெண்ணெய்ச் செல்வத்தையே சிறப்பாகக் குறிப்பிடும். பால் வளம் நிறைந்த நந்தகோகுலம் என்பதல்லவா இந்தச் சீர்மையின் முழுமை! நாழிப் பாலிலே நாழி நெய் எடுக்கும் சீர்மை என்று பாலின் மேன்மையை உயர்வு நவிற்சி படக் காட்டுவார் உரை வேந்தர் பெரிய வாச்சான் பிள்ளை அவர்கள்.

இத்தகைய சீர்மல்கும் ஆய்ப்பாடியிலே ஒரு குமரன் சிங்காரமாகத் திகழ்கிறானாம். தந்தையான நந்தகோபனுக்கு அடங்கியவன் ஆகையாலே குமரனாகப் பணிவுடன் தோன்றுகிறான். தந்தை முன்னே கை கட்டி வாய் புதைத்து நிற்கும் அந்தக் குமரனாகிய கண்ணன், தன் தாய் யசோதை முன்போ அப்படி அல்லவாம்! பின் எப்படி நிற்பான் என்கிறீர்களா? தாயைக் கண்டதும், சிங்கம் போல் மேல் நாணிப்புத் தோன்ற மிடுக்குடன் தன் ஆளுமையை வெளிப்படுத்துவானாம். 'கூர்வேல் தாங்கிய நந்தகோபனுக்குக் குமரனாகக் கட்டுப்படுபவன், யசோதைக்குக் கட்டுப்பட மாட்டானோ?' என்றா கேட்கிறீர்கள்? ஆமாம்; பாசம் மிகுந்த அந்தத் தாயின் கண் பார்வைக்குள்ளே கட்டுப்பட்டு விடுவான். தந் கண்ணிலே மை இட்டுக் கொண்டது போக, அழகு மிகுந்த அந்தக் கண் இமைகளுக்குள்ளேயே, இந்தக் குழந்தை கண்ணனைக் கட்டுப்படுத்திக்கொள்ளும் தகுதி அவளுக்கு இருந்ததாம். இளஞ்சிங்கம்தான் இந்தக் கண்ணன் என்றாலும், ஏர் ஆர்ந்த கண்ணி யசோதையின் இளங்சிங்கம் அல்லவா! அவளுக்குக் கண்ணழகு வந்ததுகூட, இந்தச்

சிங்கத்தைப் பார்த்துப் பார்த்துத் தன்னை இழந்ததாலே இவன் அழகு அவள் கண்களுக்கும் வந்து விட்டதாம். ஆகவே ஏரார்ந்த கண்ணி யசோதை ஆகிவிட்டாள்!

'கண்ணன் என்பவன் யார் தெரியுமா? அவன் எப்படி இருப்பான் தெரியுமா?' என்று கேட்கும் ஆண்டாள் மேலே அவள் திருமேனி திருவடிவ அழகைத் தன் கவிதை ஓவியத்தில் தீட்டிக் காட்டுகிறாள்.

'கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்'

மேகம் போன்ற திருமேனி அழகுடைய கண்ணன். ஆய்ச்சியாகிய ஆண்டாளின் தாபத்தை அணைத்து ஆற்றுவது போன்ற மேகமாம் அந்தத் திருமேனி அழகு! மழை முகம் காணும் பயிர் தழைப்பது போல இவர்கள் தாபம் கண்ணனின் கார் நிற மேனியைக் கண்டதும் தணிந்து விடுமாம். அவனுடைய கரிய திருமேனிக்கு எடுப்பான முரண் மிகுந்த செங்கண்கள் ஒளியும் குளிர்ச்சியும் கொண்டவை. ஒளியை உமிழும் கதிரவனாக ஒரு கண்ணும் குளிர்ச்சியை வெளிவிடும். சந்திரனாக மற்றொரு கண்ணும் காண்பதற்கரிய காட்சி அல்லவா! குளிர நோக்கும் அக்கண்கள் தாயன்பை வெளிப்படுத்துவனவாய் அவனுடைய வாத்ஸல்ய குணத்தைக் குறிப்பிடுகின்றனவாம்.

இத்தகைய கண்ணனிடத்தே சென்று பாவை நோன்புக்குத் தேவையான, கொட்டுகிற கருவி பறையைக் கேட்க விழைவதே இவர்கள் நோக்கமாகும். பறை வாத்தியத்தைப் பெற்றுக் கொண்டு நோன்பு நோற்போம் என்றல்லவா ஆண்டாளும் அவள் தோழியரும் புறப்பட்டிருக்கிறார்கள்! அவர்களுக்குத் தாம் வாழும் ஆய்ப்பாடிதான் பேருலகம்! அங்கே தங்களுடன் கூடி வாழும் கண்ணன்தான், அவர்கள் கண்ட முழு உலகம். உலகநாதனான

அந்தக் கண்ணனின் அன்பும் நட்பும் அவர்களை வாழ்விக்கின்ற அமுதம் ஆகும். அவர்கள் நோக்கமெல்லாம் தங்கள் கோகுல நாயகன் கண்ணனுடன் உறவுகொண்டு, நட்புற்று, அவனுக்கே ஆட்படுதல் ஒன்றுதான்.

'அந்தக் கண்ணன்தான் நாராயணன் ஆவான்' என்பதை ஆண்டாள் தானான தன்மையிலே வெளியிடுகிறாள்.

'நாராயணனே நமக்கே பறை தருவான்!'

இடைச்சியான ஆண்டாளுக்குக் கண்ணன் தோன்றினான்; பெரியாழ்வார் பெண் ஆன ஆண்டாளுக்கு நாராயணன் தோன்றினான். 'கண்ணனே நாராயணன்!' என்பதைச் காட்டிக் கொடுத்தஇடம் கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்துப் பிடித்ததே அன்றோ! இடைச்சிகளுக்கும்கூட அவனுடைய அந்த அற்புதச் செயல் நாராயண தத்துவத்தை வெளிக் காட்டியதாம்.

அந்த நாராயணனே நமக்கே பறை தருவான் என்கிறது ஆண்டாளின் முதற்பாசுரம். ஆய்ச்சிகளுக்கு மட்டுமல்ல அந்தப் பறை; மானிடர்களாகிய நமக்கெல்லாம் அந்தப் பறையே வேண்டியது. இறைவனுக்கு ஆட்பட்டு அவன் குணங்களிலே இழிந்து அவன் அடியார் திறத்தே ஈடுபட்டு அவற்றின் மூலம் உலகத்தொண்டு புரிதலே நாம் வேண்டுகின்ற பறை! இதோ, ஆண்டாளின் அந்த இனிய இசைக் குரலைக் கேளுங்கள் :

*"மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்*
*நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர்*
*சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !*
*கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்*
*ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்*

*கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்*
*நாரயணனே நமக்கே பறை தருவான்*
*பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்!"*

## செய்யாதன செய்யோம்

ஆண்டாள் விடுத்த அழைப்பை ஏற்று வந்து விட்டார்கள் தோழிப் பெண்கள். பாவை நோன்பு நோற்க வந்த ஆய்ச் சிறுமிகளை அழைத்துக் கொண்டதும், ஆண்டாள் அந்த நோன்பில் செய்யத் தக்கவை, விலக்கத் தக்கவை ஆகியவற்றை விளக்க நேர்ந்தது. உயர்வடைய உகந்து மேற்கொள்ள வேண்டிய நியமங்கள் சில உண்டல்லவா !

எந்தக் காரியத்தை நாம் மேற்கொண்டாலும், இன்ன செய்யலாம், இன்ன செய்யலாகாது என்று முடிவு எடுப்போம் அல்லவா! பழக்கவழக்கங்கள் என்று கூறுகிறோமே, அவை நம்மைப் பற்றிக் கொண்ட மரபுச் சங்கிலிகள் ஆகும். 'தக்கது தகாதது உணரும் ஆற்றலே அறிவு' என்னும் பேருண்மையை வெளியிட இந்த நோன்பு ஒரு கருவி ஆகிறது.

இந்த இடைப்பெண்கள் அடிப்படையாகக் கொள்ளும் நோன்பின் விரதம் எதுவென்றால், பரமனான இறைவன் திருவடிப் புகழ்ச்சி பாடுதலே ஆகும். வைகுந்தத்தில் வீற்றிருந்த அந்தத் திருமால் உலகத்தவர்களுக்காகக் கீழே இறங்கிப் பாற்கடலில் பையத் துயின்றான்.

'பையத்துயின்ற பரமன் அடிபாடுவோம்; இதுவே நமது குறிக்கோள்!' என்று ஆண்டாள் தன் தோழிகளிடத்தே பேசுகிறாள். அவள் அவர்களை அழைக்கிற பொழுது, அவள் கொண்டுள்ள வாழ்க்கை உறுதிப்பாடு மிகத் தெளிவாகத் தெரிகிறது. எடுத்த எடுப்பிலேயே "வையத்து வாழ்வீர்காள்!" என்றழைக்கிறாள். "வாழும்

முறை தெரிந்து அந்த வகையிலே வாழ்கின்றவர்களே!" என்று கூப்பிடுகிறபொழுது, அவர்கள் வாழ்க்கைப்பேறு பெற்றவர்கள் என்பதைத் தெரிவிக்கிறது.

'நாம் வாழ்கிற இந்த மண்ணிலேயே விண்ணுலகைக் கொண்டுவரத் தெரிந்த வாழ்வல்லவா நம்முடையது! மண்ணிலே விண்ணைக் காணும் வாழ்ச்சி மானிடர்களாகிய நமக்கல்லவா உண்டு?" என்கிறாள் அவள். 'அப்பாலுக்கப்பாலாய் எங்கோ பரமபதத்தில் இருக்கும் அந்தப் பெருந் தத்துவமாகிய திருமால் இங்கே ஆய்ப்பாடிக்கு இறங்கி வந்து கட்டவும் அடிக்கவும் படியாய்க் கட்டுப்பட்டுக் கலந்து உறவாடும் கண்ணன் ஆனானே!' என்று ஆண்டாள் மனம் உருகுவது இங்கே புலனாகிறது. 'வையம்' என்பது இடைச்சியாக மாறி இருக்கிற ஆண்டாளுக்குக் கோகுலம்தான். எனவே கோகுலம் வாழ, கோகுலத்தை வாழ்விக்க வந்த கண்ணன் கூடவே வாழும் பேறு பெற்றதல்லவா வாழ்வின் நிறை! 'ஆய்ச்சியர்களான நீங்கள் அல்லவா உலகிலே வாழ்ச்சி பெற்றவர்கள்!' என்கிற தொனி இங்கே கேட்கிறது. ஆகவே, ஆண்டாள், 'வையத்து வாழ்வீர்காள்!' என்று பெருமிதம் வெளிப்பட அவர்களை அழைக்கிறாள்.

தோழிப் பெண்கள், 'ஆண்டாளே! நோன்புக்கு நாம் செய்யும் செயல்கள் யாவை?' என்று கேட்கிறார்கள். 'பரமன் அடி பாடுதலே நம் முதற்செயல். ஆயினும் அதற்குமுன்னே அதிகாலையிலே நீராடுதல் நமது நாள் கடன் ஆகும்' என்று பதிலளிக்கிறாள் ஆண்டாள். 'இறைவன் அடி பாடுவோம் ; அவனைப் பற்றிய பக்தியில் நீராடுவோம். இறைவன் திருநாமம் பாடுதல் அகத்தூய்மை தருவது ; நாள் காலையில் நீராடுதல் புறத்தூய்மை கொடுப்பது; ஆக, இரண்டு தூய்மைகளுடன் தானதருமங்களைச் செய்வோம்!' என்கிறாள். "தான தருமங்கள்தான் உய்வு

பெறுவதற்கு வழியாகையால், நாம் அவற்றை விரும்பிச் செய்வோம். 'ஆம்தனையும் கைகாட்டி உய்யுமாறு எண்ணி உகந்து" என்கிறாள் கோதை. ஆம்தனையும் என்பது கொடுக்கும் கொடை விரும்பிப் பெறுபவர்கள் போதும் போதும் என்கிற வரைக்கும் கொடுப்பது என்று பொருள்படுகிறது.

இவ்வாறு நோன்புக்குச் செய்ய வேண்டியவற்றை விரும்புகிறபொழுது, அறிவு பூர்வமாகப் பார்த்தால், வேண்டாத சிலவற்றை விலக்க வேண்டாமா? ஆமாம் ; தள்ளத் தகுந்தவை எவை எவை என ஆண்டாள் பட்டியல் போட்டுத் தருகிறாள்.

*"மையிட்டெழுதோம் ; மலரிட்டு நாம் முடியோம்*
*செய்யாதன செய்யோம் ; தீக்குறளைச் சென்றோதோம்"*

என்பன அவை.

கண்ணனைப் பிரிந்திருக்கிற இடைப் பெண்களுக்குக் கண்ணிலே மை இட்டுக் கொள்வதும், கூந்தலுக்கு மலர் இட்டு முடித்துக் கொள்வதும் மிகவும் வெறுக்கத் தக்கனவாம். "நோன்பு முடியும்வரை நாங்கள் நெய்யும் பாலும் உண்பதில்லை!' என்று முடிவு செய்துள்ள இப் பெண்களுக்குக் கண்மையும் கூந்தல் மலரும் விருப்பமாகாதே! ஆகவேதான், அலங்காரங்கள் தங்களுக்குத் தேவையில்லை என்கிறார்கள். வெறும் புறத்தே மேற்கொள்ளும் அலங்காரம் மட்டுமா தேவையில்லை? உள்ளத்தை மாசுபடும் படியாக வைத்துக் கொள்ளவும் கூடாதே! பிறருக்குக் கெடுதல் உண்டாகும்படியான கோள் கூறும் அவலச் சொற்களைக் கூறவே மாட்டோம் என்கிறார்கள்.

'தீக்குறளைச் சென்றோதோம்' என்று அறிவிக்கிறார்கள்.

'குறளை' என்பது கோள் சொல் என்று பொருள்படும். 'தீயவற்றை விளைவிக்கும் கோள்கூறல் எங்களுக்குக் கூடவே

கூடாது,' 'இவை மட்டும் அல்ல; இன்னும் என்னென்ன செய்யத் தகாதவையோ அவற்றை நாங்கள் செய்யமாட்டோம்!' என்றும் முடிவு செய்கிறார்கள். இதோ, இவ்வாறு பேசும் ஆண்டாள் பாடலைக் கேட்போமா?

*"வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம் பாவைக்குச்*
*செய்யும் கிரிசைகள் கேளீரோ! பாற்கடலுள்*
*பையத்துயின்ற பரமன் அடி பாடி*
*நெய் உண்ணோம்; பால் உண்ணோம்; நாட்காலே நீராடி*
*மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்*
*செய்யாதன செய்யோம்; தீக்குறளைச் சென்றோதோம்*
*ஐயமும் பிச்சையும் ஆம்தனையும் கைகாட்டி*
*உய்யுமாறு எண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்!"*

**நீங்காத செல்வம்**

நோன்பு நோற்க விரதம் மேற்கொண்ட ஆய்ப் பெண்கள் இறைவன் திருநாமம் பாடித் திளைப்பதையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டார்கள். முதற் பாடலிலேயே ஆண்டாள் அந்தப் பேரிறைவன் நாராயணன் என்று எடுத்த எடுப்பிலேயே தெளிவாகக் குறிப்பிட்டாள். நித்தியமாக நிலைக்கும் உயிர்கள், அறிவற்ற பொருள்கள் ஆகியவை திரண்ட உலகியற் கூட்டத்துள் என்றும் எங்கும் கலந்தும், கடந்தும் அவற்றை இயக்கியும் அவற்றுள்ளே இயங்கியும் உள்ள ஒருபெரும் தத்துவம் எதுவோ அதனையே 'நாராயணன்' என்னும் சொல்லால் ஆண்டாள் குறிப்பிட்டாள். அந்தப் பரம்பொருள் மனிதக் கண்களுக்குப் புலனாகிற பொழுது மேகம் போன்ற திருமேனியும், சந்திர சூரியனை ஒத்த கண்களுடன் திருவடிவமும் கொண்ட அழகனாகக் காட்சி தருகிறான். அந்தப் பரம்பொருளின் முடிந்த நிலையாகிய பரந்த வடிவத்தை முதல் பாசுரத்தில் ஆண்டாள் குறிப்பிட்டாள்.

இரண்டாவது பாசுரத்தில், அத்தெய்வமான திருமால் கீழிறங்கி வந்து உலகை உண்டாக்கத் தீர்மானிக்கும் இடமான திருப்பாற்கடலைக் கூறினாள். 'பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்' என்று அவன் வியூக நிலையைப் பேசினாள்.

மேலே கோதையின் மனம், திருமால் உலகளந்த மாயத்தைப் பற்றி எண்ணுகிறது. மாவலிச் சக்கரவர்த்தியின் கேள்விச் சாலைக்கு வந்த அந்தக் குள்ளன், பிரமசாரி, தன்னை எவ்வளவு குறுக்கிக்கொண்டான்! தன்னைப் பணிந்து அபயம் என்ற இந்திரன் துன்பம் காதிற்பட்டதும், கூனிக்குறுகிக் குள்ளவடிவான 'வாமனன்' ஆகிவிட்டான். தனக்கு ஆட்பட்ட இந்திரனைக் காப்பாற்றுவதற்குத் தன்னையும் குலைத்துக் கொண்டு தன் மேலான நிலையையும் தியாகம் செய்தவாறு, கையேந்திப் பிச்சை ஏற்க வந்து விட்டான்! மாவலியின் வேள்விச் சாலையில் சென்று யாசித்ததும், அந்தப் பேரசுரன் கை வழியாய் விட்ட நீர், தன் அங்கையில் பட்டதும், குள்ளமான வாமனன் உலகளக்கும் நிலையில் திரிவிக்கிரமனாகப் பெரிய வடிவம் கொண்டான். இந்திரனின் சிறுமை இறைவனைக் குள்ளனாக்கிற்று; மாவலியின் கொடைப் பெருமை அதே குள்ளமான இறைவனைத் திரிவிக்கிரமனாகப் பெரிய வடிவம் ஆக்கிற்று. என்னே மாவலியின் கொடைத் தன்மை! ஓங்கி வளர்ந்த உத்தமனாக, உலகத்தையே தன் திருவடியால் அளந்தான். இந்த நிகழ்ச்சியை எண்ணிப் பார்க்கிறாள் ஆண்டாள். 'ஆகா! உத்தமன் என்றால் இவன் அல்லவோ!' என்று உள்ளம் ஓங்கி உலகளந்த திருமாலை எண்ணிப் பெருமிதம் அடைகிறது.

தனக்கு மட்டுமே எல்லாம் என்று தன்னலமே வாழ்வாகக் கொண்டவன் கடைநிலையினன் ஆவான். தனக்கும் வாழ்வு ; அதுபோல பிறர்க்கும் உண்டு என்று தன்னலத்துடன் பிறர் நலத்துக்கு இடையூறில்லாமல் வாழ்பவன் இடைப்பட்ட

நிலையினன். தன்னைப் பேணாமல், பிறர் நலம் பேணுவதே தன் வாழ்வின் குறிக்கோள் ; தன்னைக் குலைத்துக் கொண்டாலும் பிறர் வாழ்வின் நலமே தன் மகிழ்ச்சி என்று வாழ்பவனே உயர்ந்த நிலையினன் ஆவான். உத்தமன் என்பவன் இவனே! ஆகவேதான், தன் மேன்மையைக் குலைத்துக் கொண்டு, தாழ்ந்த நிலையிலே இழிந்து, இந்திரனுக்கு உதவ வந்த அந்தப் பெருமான் உத்தமன் ஆகின்றான்.

இவ்வாறு ஓங்கி உலகளந்த உத்தமனை எண்ணுகிற ஆண்டாள் அவன் பெயர் பாடி நோன்பு நோற்றால் உண்டாகும் பயனை மேலே பேசுகிறாள்.

*"தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்யும்"*

நெற்பயிர் வளரத் தேவையான மழை மாதம் மூன்று தடவைகள் பொழியுமாம். அதாவது, மழை வேண்டுங் காலத்துப்பெய்தும், வேண்டாத காலத்தே பெய்யாமலும், முறையாகப் பொழிந்து, பயிர்வளர உதவுமாம். மாதத்தில் ஒரு நாள் மழை பெய்து ஏழு நாட்கள் பெய்யாமல், மறுபடி இடையிலே ஒரு நாள் பெய்து, ஆக இவ்வாறு மாதம் மும்மாரி பெய்வது, நெல்லும் கரும்பும் தழைத்து ஓங்கி வளர உதவும் அல்லவா!

ஆண்டாள் காணும் அந்த வயல்வெளிகளில் செந்நெற் பயிர்களும், கரும்புக் கூட்டங்களும் தழைத்துக் காணப்படுகின்றன. அந்த நெற்பயிர்களுக்கு இடையே நீர் நிரம்பி இருப்பதால், கயல் மீன்கள் துள்ளிப் புரள்கின்றன. வயல் வரப்புகளிலோ குவளைப் பூக்கள் மலர்ந்து காணப்படுகின்றன.

அதோ! அந்தக் குவளைப் பூவில் வந்து உட்கார ஒரு வண்டு பறந்து வருகிறது. மேலெல்லாம் பொறிகள் தென்படும் அந்த

வண்டு, நேரே குவளைப் பூவின் மீது அமர்ந்து, அதிலுள்ள தேனைப் பருகி ஆயிற்று ; களைப்பு மேலிடவும் அந்தக் குவளைப் பூவின் இதழ்களையே படுக்கையாகக் கொண்டு, பொறிவண்டு உறங்கி விட்டதாம். வயல் நீரில் கயல் மீன்கள் புரளுவதாலே செந்நெல் கூட்டங்களுடன் குவளைச் செடிகளும் அசைகின்றன. இவ்வாறு குவளைச் செடி அசையவும், பொறிவண்டு தங்கியுள்ள அந்தப் பூவும் அசைவது வண்டுக் குழந்தைக்கு ஊஞ்சல் ஆட்டுவது போல் உள்ளதாம். அரசிளங் குமரர்கள் மது அருந்திய பிறகு தங்கள் அரண்மனையில் தொங்குகிற ஊஞ்சல் படுக்கையில் படுத்து உறங்குவது போலே அமைந்துள்ளது இக்காட்சி என்கிறார் உரைகாரர் பெரியவாச்சான் பிள்ளை.

மழை வளத்தால் பயிர்களும் குவளையும் வளர்ந்ததோடு, இன்னும் என்னென்ன நல்ல விளைவுகள் உண்டாயின தெரியுமா?

பசுமாடுகள், வயிறு புடைக்கப் புல்வெளியில் மேய்ந்து உண்டு வளர்ந்துள்ளதால், தங்கள் மடுக்களின் வழியே, பாலைச் சொரிகின்றன. அவை என்ன சாதாரணப் பசுக்களா? வள்ளல்கள் அல்லவா !

பசுவின் கீழே அமர்ந்து பால் கறக்கும் இடையன், குடம் குடமாக மாற்றி மாற்றி வைக்கவும் கறந்து கொண்டே அவற்றை நிறைக்கிறானாம். ஒரு குடமா இரு குடமா? பல குடங்களை வாங்கி வாங்கி மாற்றவும் இடைவிடாது பால் சொரியும் மடுக்களை உடையவை அந்தப் பசுக்கள். ஆகவே, அவை வள்ளல்கள்தாம்!

'வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்' என்கிறாள் ஆண்டாள்.

மேற்கண்டவாறு வயல் வளமும் பால்வளமும் நிறைந்துள்ள கோகுலம் செல்வம் நிறைந்ததுதானே! செல்வம் நீங்காத நிறைநாடு

அந்த ஆய்ப்பாடி. 'நீங்காத செல்வம் நிறைந்தது' என்பது இதன் முத்தாய்ப்பு. நீராட்டமும் நோன்பும் இறைவன் திருநாமமும் நீங்காத செல்வம் நிறையும்படி செய்து விடுகின்றனவாம். இதோ பாசுரம்

*"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி*
*நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்*
*தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரிபெய்து*
*ஓங்குபெருஞ் செந்நெல் ஊடு கயலுகளப்*
*பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்*
*தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி*
*வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்*
*நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரொம்பாவாய்!"*

**மழையே வா!**

பாவைப் பாடல்களின் குறிக்கோள்களுள் மழைவேண்டிப் பாடுவதும் ஒன்றாக அமைவதைத் தமிழ் இலக்கிய வானில் காண்கிறோம். விண்ணை நோக்கிய ஆண்டாள் முன், மழைக் கடவுள் வந்து நின்று கொண்டு, "கோதையே! நீ மேற்கொண்டுள்ள நோன்பிற்கு நானும் உதவ விரும்புகிறேன். ஏற்றுப் பணி கொள்வாயா?" என்று வேண்டுவது போலத் தோன்றுகிறதோ என்னவோ? இவள் அவனை வேண்டாத நிலையிலே, தானே அவளுக்கு உதவ மழைக் கடவுள் முன்வந்து விட்டான். "கடலிலே புகுந்து மேகத்தை எடுத்துவரும் மழைக்கடவுளே! நீ மழை பொழிவதானால், உனக்கென்று கொஞ்சம்கூடச் சேமித்து வைத்துக் கொள்ளாமல், கள்ளம் கபடமின்றி எங்களுக்காகப் பெய்து பொழியவேண்டும்!" என்று கேட்கிறாள்.

'உங்களுக்கு மழை பொழிய நான் எங்கிருந்து தண்ணீர் கொண்டு வரலாம்?' என்று கேட்ட வருணனிடத்தே, 'நீ கடலுக்குள்

புகுந்து தண்ணீர் மொண்டு கொண்டு விண்ணுக்கு ஏறிப் பொழியலாமே!' என்றாள் ஆண்டாள். "நீ அவ்வாறு கடலினின்று தண்ணீர் முகந்து மேலே ஏறும்பொழுது முழங்கிக் கொண்டே வா! மௌனம் தேவையில்லை. எங்கள் நாதன் எம்பெருமான் கையிற் பிடித்துள்ள சக்கரம்போலே ஒளிக்கிளர்ந்து மின்னலுடன் வா; அவனது வலம்புரிச் சங்கின் முழக்கம் போல அதிர்ந்து வா; கொஞ்சம் கூடத் தாழாதே மேலே விண்ணிலே ஏறிப் பூமித்தாய்க்கு உன் மழைத் தாரைகளைக் கொட்டித் தீர்ப்பாயாக. திருமால் கையில் ஏந்திய சார்ங்கம் விடுக்கும் அம்புகளைப் போல மழையைக் கொட்டி, எங்களை மகிழ்விக்க வேண்டும்!' என்று பேசினாள் ஆண்டாள்.

'உன்னுடைய கருமை நிறத்தைப் பார்த்தால் எங்கள் கண்ணனின் நிறமல்லவா தெரிகிறது! ஊழி முதல்வனான அவன் உருவம்போலக் கறுத்து வா மேகமே!' என்று கேட்கிறாள் அவள்.

'மழை நீரைப் பொழிவது எனக்கு இயல்பான செயல்; இறைவன் இட்ட கட்டளை அது; ஆகவே, உங்களுக்குத் தொண்டு செய்து உதவுவதற்காக என்பது எப்படிப் பொருந்தும்?' என்று கேட்டான் மழைக் கடவுள். 'நாங்கள் மார்கழி நீராட விழைந்துள்ளோம். நீயும் எங்களுக்குத் தொண்டு செய்து சிறப்புப் பெறலாம். நாங்களும் கண்ணனும் நீ மழையாகப் பொழிவதால் மகிழ்ச்சி அடைவோம். நீ மழை பொழிவது கண்ணனை எங்களுடன் கூட்டுவிக்க உதவும்!" என்றாள் ஆண்டாள்.

இப்பாசுரத்தில் 'முற்றுவமை' அணி பயிலப்பட்டுள்ளது மிகச் சிறப்பாகும்.

*"ஆழிமழைக் கண்ணா! ஒன்று நீ கை கரவேல்*
*ஆழியுட் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி*
*ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்*
*பாழிஅம் தோளுடைப் பற்ப நாபன் கையில்*
*ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
*தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்*
*வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்*
*மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்!"*

**தீயினில் தூசு :**

ஆண்டாளும் அவள் தோழியரும் இவ்வாறு நோன்பு நோற்கத் தங்களுக்குள் பேசித் திட்டம் இட்டுக் கொண்டு கிளம்ப இருக்கிற நேரம். அந்தக் கன்னியருள் ஒருத்திக்குத் திடீரென்று நோன்பு பற்றிய ஐயம் தோன்றி விட்டது. 'நாம் பல நாள்களாகப் புரிந்துள்ள தவறுகளும் பாவங்களும் இன்று செய்யத் தொடங்கியுள்ள நோன்பிற்கு இடையூறாக நிற்குமே! நம் நோன்பு முடியப் பெறுமா? இறைவனை அடைவோமா?" என்று கேட்டாள் அவள். அங்கே இன்னொருத்தி இடத்தே இதற்கான விடை பிறந்து விடுகிறது. எத்தகைய தவறுகளையும் பாவங்களையும் மிக எளிதாகப் போக்கவல்ல வழி ஒன்று உள்ளது என்கிறாள் அவள். பகவானுடைய திருநாம சங்கீர்த்தனமே அவள் கூறிய அந்த வழியாகும்.

"பாலைப் பருகுபவர்களுக்கு அது உணவாக அமைவதோடு, மருந்தாகவும் உள்ளது ; சுவையாக இருப்பதுடன் குடிப்பவர் பித்தத்தையும் பால் நீக்குகிறது. அதுபோலவே பகவானுடைய திருநாம சங்கீர்த்தனம் ஆத்மாவுக்கு உய்வு தருவதோடு, பாவங்களையும் வேருடன் தொலைத்து விடுகிறது. எத்தனை பாவங்கள் இருந்தாலும், அவை தீயிலிட்ட பஞ்சாகத் தொலைந்து

விடும். நாம சங்கீர்த்தன சக்தி சாதாரணமானதல்ல; இறைவன் நேரே வந்து செய்கிற காரியத்தை அவன் திருநாமம் ஓதுதல் செய்து விடுமாம். ஆபத்திலே திரௌபதிக்குப் புடவை சுரந்த காரணம் கண்ணன் திருநாம பலனே என்பர். பச்சை மரங்களையும் சாம்பலாக்கும் காட்டுத் தீ போல, இறைவன் திருநாம சங்கீர்த்தனம் வலிமை உடையதாகும். விருப்பத்துடன் தொட்டாலும் சரி, விருப்பம் இல்லாமல் தொட்டாலும் சரி, நெருப்பு அதனைத் தொட்ட எவனையும் உடனே சுட்டு விடுகிறதல்லவா!' அது போலவே திருமால் திருநாமம், கூறப்பட்ட உடனேயே, கூறியவன் பாவங்களைத் தொலைத்து விடும்."

இவ்வாறு கூறிய தோழியின் அறிவுரையை ஏற்ற பெண்கள் இறைவனான திருமாலின் பெயர்களை இட்டு அழைக்கத் தொடங்கி விடுகின்றனர்.

எடுத்த எடுப்பிலேயே அவனுடைய மகிமை பெரிய மாயமாகத் தெரிவதைக் குறிப்பிட்டு, 'மாயனே'! என்று அழைக்கிறார்கள். அயர்வறும் அமரர்களுக்கு அதிபதியாகப் பரமபதத்திலே என்றும் நிலவும் நிலையான செல்வக் கோமானாக வீற்றிருக்கும் இறைவன் இருப்பு அவனது மாயத்தன்மையை வெளியிடுகிறது. பாற்கடலைக் கடைந்த அந்தப் பெருந்தெய்வம் தன் தலைமையையும் ஆளுமையையும் விடுத்து, இடைச்சிகளுக்காக ஆய்க்குலம் வந்து, அவர்களுடன் தயிரைக் கடைந்த எளிமை இருக்கிறதே, 'இது எத்திறம்!' என்று எண்ணி உருகுகிற பொழுது, 'மாயனே!' என்றழைக்கத் தோன்றுகிறது. பரமபதத் திரு நாட்டுக்குத் தன்னைக் கொடுத்த அவன், தன் இறைமையைத் தியாகம் செய்துவிட்டு, நந்த கோகுலம் வந்து ஓர் ஊருக்காகத் தன்னைக் கொடுத்த எளிமை அல்லவா 'மாயனை' என்றழைக்கக் காரணம் ஆயிற்று!

எந்த ஊருக்கு இப்படித் தன்னைக் கொடுத்தான் அவன் என்றால், வட மதுரைக்கென்றே வந்து பிறந்தான் அன்றோ!

ஆகவே 'வட மதுரை மைந்தனை' என்கிறாள், ஆண்டாள். இறைவன் தொடர்பு மாறாத இடம் அல்லவா அது! 'தந்தை காலில் பெரு விலங்குதான் அவிழ வந்த ஊர்.'

அந்த ஊரில் ஓடும் ஆற்றின் புனிதத் தன்மை அவன் வந்து பிறந்து பழகியதாலே மேலே மேலே வளர்ந்தது. கண்ணன் பிறந்த மிடுக்கின் பயன் தந்தையின் கை கால் விலங்குகள் முறிந்து போனதோடு மட்டுமல்ல ; யமுனை ஆறே வழி கொடுத்து நள்ளிருளிலே வசுதேவரையும் அவர் மைந்தன் கண்ணனையும் அக்கரை போகச் செய்தது. அந்த நதியின் தூய்மைக்குக் காரணம், கண்ணன் தன் வாயாலே அந்த நீரைக் கொப்புளித்ததாலே! 'இத்தகைய 'யமுனைத் துறைவனை' அவன் திருநாமம் கொண்டு துதிப்போம்' என்கிறாள் ஆண்டாள்.

இப்படி எல்லாம் 'மாயன்', 'மன்னு வட மதுரை மைந்தன்', 'தூயபெரு நீர் யமுனைத் துறைவன்' என்று அழைத்ததாலே ஆண்டாள் மனம் நிறைவு கொள்ளவில்லை. முற்ற முழுக்க, அவள் ஆய்க்குல மடந்தை ஆக அல்லவா மாறி இருக்கிறாள்! அந்த இடைக் குலத்தோடு ஒன்றிக் கலந்து இடைப் பேச்சும் முடை நாற்றமும் அவளுடன் கூடி உறவாட வேண்டாமா? தன்னுடையகுலம் வேயர் குலம் என்பதை மறந்தாள் ; ஆயர் குலம் என்று தெளிந்தாள். அந்த ஆயர் குலத்துக்கு விளக்காக வந்து பிறந்த விடிவெள்ளியாகக் கண்ணனைக் குறிப்பிடுகிறாள். ஆகவே, 'ஆயர்குலத்தின் அணிவிளக்கு' என்றழைக்கிறாள். மறை ஓதுபவர்களும் காண இயலாதபடி மறைந்துள்ள அந்தத் திருமாலை மாடுகளை மேய்க்கும் ஆயர்கள் கண்டார்கள். வேதத்தின் முன்னே செல்லும் அந்த விமலன் சாதுவான பசுக்களின் பின்னே சென்று மேய்த்தான். இந்த அவனுடைய எளிவந்த நீர்மைக் குணத்தை வெளியிடும் அருமையான சொல் தொடர் 'ஆயர் குலத்தின் அணிவிளக்கு' ஆகும்.

ஆண்டாள் இன்னும் ஒரு படி மேலே சென்று எம்பெருமானின் எளிமைக் குணத்தை எடுத்துக் கூற விழைகிறாள். 'தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை' என்பது பாசுரத் தொடர்.

கயிற்றுத் தழும்பை வயிற்றிலே உடையவன் என்பது 'தாமோதரன்' என்பதன் பொருள் ஆகும். பெற்ற தாய் தேவகிக்கு இல்லாத பெருமையைத் தன்னை வளர்த்த தாய் யசோதைக்குக் கொடுத்து, உலகத்தார்களிடத்தே, 'என் தாய் யசோதை' என்பதை மூதலித்துக் காட்ட இறைவன் தன் வயிற்றிலே கயிற்றுத் தழும்பைக் கொண்டானாம். சின்னச் சின்னக் குறும்புகள் செய்த கண்ணனை உரலுடன் கட்டிப் போட்ட யசோதை அவ்வாறு அவன் வயிற்றுடன் சேர்த்துக் கட்டிய கயிறு என்றும் நின்று நிலைத்தபடி தழும்பாயிற்று, கண்ணனின் வயிற்றுத் தழும்பைப் பார்க்கிறவர்கள் எவரும், 'இவனுடைய தாயார் யசோதை அல்லவா இவ்வாறு தழும்பு உண்டாக்கியவள்!' என்று கூறும் பொழுது, அவளுக்கும் இவனுக்கும் இடையே இருந்த குடல் தொடக்குத் தொடர்பைக் காட்டி விடுகிறதல்லவா! அந்தக் குடல் தொடக்கின் விளக்கமாக அமைகிறது இந்தத் தழும்பு! எனவே 'தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரன்' என்கிறாள்.

தேவகி வயிற்றிலே தங்கிப் பிறந்ததாலே அவளுக்குப் பெருமை சேர்த்தான். அது போலவே கயிற்றுத் தழும்பை வயிற்றில் ஏற்று யசோதையையும் தாய் ஆக்கினான். இப்படி ஒருத்திக்குப் பிறந்து மற்றொருத்தியாலே வளர்க்கப்பட்ட சிறப்பை உலகுக்கு எடுத்துக் கூறி விளக்கும் தொடர் 'தாயைக்குடல் விளக்கம் செய்த தாமோதரன்' என்பதாம்.

இவ்வாறு இறைவன் திருநாம சங்கீர்த்தனம் செய்யும் கோதையின் குழுவினர் 'தூய்மையாய் நாங்கள் வந்துள்ளோம்; தூய்மையான மலர்களைத் தூவி, இறைவனைத் தொழுது வாயால் பாடி மனத்தால் சிந்தித்து வழிபடுவோம். நம் பாவங்கள் அனைத்தும் தொலையும். செய்த பிழை, செய்கின்ற பிழை, செய்யப்

போகிற பிழை ஆகிய மூன்றுமே தீயிற்பட்ட தூசு போலத் தொலையும்' என்று தங்கள் பேச்சை முடிக்கின்றனர்.

நாம சங்கீர்த்தனம் செய்யும் பொழுது ஏற்படும் சாதாரண அனுபவத்தை இங்கு ஆண்டாள் அருமையாகக் குறிப்பிடுகிறாள். மனம் இறைவனைச் சிந்திக்க, வாய் பாடக் கை தொழும் பொழுது ஏற்படும் தூய்மை இருக்கிறதே, அது எந்தப் பாவத்தையும் நெருப்பில் இட்ட பஞ்சு போலத் தொலைந்து விடும்.

*'போய பிழையும் புகுதருவான் நின்றனவும்*
*தீயினில் தூசாகும்'*

போய பிழை என்பது சென்ற காலப் பிழைகள், அதாவது 'பிராரப்தம்' என்று குறிப்பிடப்படும். முன் செய்த வினைகளால் விளைந்த பாவங்கள் இவை. 'புகுதருவான்' என்பது தன்னை அறியாமல் வரக்கூடிய வருங்காலப் பிழைகள். இவை இரண்டையும் குறிப்பதாலே, நிகழ்காலப் பாவங்களும் இவற்றுள்ளே அடங்குகின்றன. ஆகப் 'பிராப்தம்', ஆகாமியம், சஞ்சிதம் என்னும் மூவகையான, சென்ற, செய்கிற, செய்யப் போகிற பாவங்களும் இறைவன் திருநாம பலத்தால் தொலையும் என்பது இப்பாசுரப் பிண்டப் பொருள் ஆகிறது. 'நிச்சயம் பாவம் தொலையும்; உறுதியாய்ச் சொல்' என்பதை ஆண்டாள் 'செப்பு' எனத் தெளிவுபடக் கூறுகிறாள்.

*"மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்*
*தூயபெரு நீர் யமுனைத் துறைவனை*
*ஆயர் குலத்தினில் தோன்றுமணி விளக்கைத்*
*தாயைக் குடல் விளக்கம்செய்த தாமோதரனைத்*
*தூயோமோய் வந்துநாம் தூமலர்த் தூவித்தொழுது*
*வாயினாற் பாடி மனத்தினால் சிந்திக்கப்*
*போய பிழையும் புகுதருவான் நின்றனவும்*
*தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்!"*

# 3. கொடிக் கம்பம்

## முதல் ஐந்தில்

திருப்பாவையின் கோபுர வாசலாகத் திகழும் முதல் ஐந்து பாசுரங்களில் கூறப்படுவனவற்றை ஒருவாறு அறிந்து கொண்டோம். நோன்பைக் காரணமாகக் கொண்டு, கண்ணனுடன் கலந்து பழகி அவனுக்குத் தொண்டு செய்ய விரும்பிய ஆண்டாள் முதற் பாசுரத்தில் அடையத் தகுந்த கண்ணனைப் பற்றியும் அவனை அடைவதற்கான வழி பற்றியும் குறிப்பிட்டாள். நீராடலின் உட்பொருள் இறைவன் குணத்தில் ஈடுபடுவதே என்பதைக் கண்டோம். இரண்டாவது பாசுரத்தில் நோன்புக்குச் செய்யத் தகுந்தன, தள்ளத் தகுந்தன ஆகியவை கூறப்பட்டன. மூன்றாவதில் நோன்பின் பயனான பால்-பசுச் செல்வ வளம் குறிப்பிடப்பட்டது. நான்காவதில் மழைக் கடவுளை அழைத்துப் பேசப்பட்டது. ஐந்தாம் பாசுரம் கண்ணன் திருநாமம் எத்தகைய பாவங்களையும் தொலைக்கும் என்பதைச் சுட்டியது.

முதற் பாசுரத்தில் நாராயணனான பரன் பேசப் பட்டான். இரண்டாவதில் அவனே கீழிறங்கிப் படுத்த நிலையில் காட்சி தந்த வியூகம் பேசப்பட்டது. மூன்றாவதில் விபவம் எனப்படும் அவதாரச் சிறப்பைத் தொடங்கித் திரிவிக்கிரமனாக இறைவன் வந்தது கூறப்பட்டது. நான்காவது பாசுரத்தில் இறைவன் எல்லா உயிர்களிலும் மறைந்து அந்தர்யாமியாக இருப்பான் என்பதை மழைக்கும் கண்ணனுக்கும் உள்ள தொடர்பால் அறிந்தார்கள். ஐந்தாவது பாசுரம், ஆண்டாளின் மனதுக்குகந்த நாயகன்

கண்ணன் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. இவ்வாறு இந்தத் திருப்பாவையின் கோபுர வாசல் தோற்றம் அளிக்கிறது.

கோபுர வாசலைக் கடந்து சென்றால், கொடிக் கம்பம் தோன்றுகிறதல்லவா! கம்பத்தின் கீழே வணங்கியபடி நிற்கிற அடியார்களைக் காண்கிறோம். ஆண்டாளும் அவர்கள் துணையை அல்லவா நாடுகிறாள்! தோழியர்களை அழைத்துக் கொண்ட பிறகே கண்ணன் இல்லம் செல்ல வேண்டும் என்பது அவள் எடுத்துக் கொண்ட விரதத்தில் இன்றியமையாத ஒன்றாகும். தான் மட்டும் கண்ணன் அனுபவத்தில் ஈடுபடல் சுயநலமாகவே முடியும்; தன்னுடன் ஒத்த யாவரையும் அழைத்துக் கொண்டு பொதுவாகக் கண்ணன் அனுபவத்தில் திளைக்க வேண்டும் என்ற காரணத்தால் அனைவரையும் அழைக்கக் கூவுகிறாள். அவர்களில் சிலரோ முற்பட எழுந்து வந்து விட்டனர்; இன்னும் சிலரோ துயிலில் ஆழ்ந்துள்ளனர். ஆகவே முற்பட எழுந்த பெண்கள் எழுந்திராதவர்களை எழுப்ப வேண்டி உள்ளது. இவ்வாறு எழுப்புகிற பாவனையில் உள்ள பாசுரங்கள் திருப்பள்ளி எழுச்சி போலவே அமைந்துள்ளன.

எல்லாப் பெண்களும் கண்ணனிடத்தில் ஒரு அளவிலே பேரன்பு கொண்டிருக்கும் பொழுது, சிலர் எழுப்பவும் இன்னும் சிலர் தூங்குவதுமாகவும் அமையலாமா என்னும் ஐயம் எழக்கூடும். இந்த ஐயம் தீர அமைவு உண்டு. அதாவது :

கண்ணனுடைய குணங்கள் சிலரை மயங்கச் செய்ததாலே அவர்கள் படுத்தபடியே தங்கள் தங்களுக்குள்ளேயே கண்ணனின் அனுபவத்தை மனத்தளவே பெற்றிருப்பது வெளியே இருப்பவர்க்கு அவர்கள் உறங்குவது போலத் தோன்றுகிறது. கண்ணன் குணங்களில் ஈடுபட்ட மற்றையோரோ அவனை அடைய வேண்டிப் படுகிற துடிப்பும் ஆவலும் உறங்க ஒட்டாமல் நிலை கலங்கச்

செய்ததாலே அவர்கள் உறங்காது விழித்திருப்பார் ஆயினர். ஆக மொத்தத்தில், துயில் உணர்ந்து எழுந்தவர் எழுந்திராதவர்களை எழுப்புவதாக அமைகிற பாசுரங்கள் மேலே வருபவை. ஆறாவது பாசுரம் தொடங்கிப் பதினைந்தாம் பாசுரம் வரை இந்தப் பாங்கினைக் காண்கிறோம்.

**புள்ளும் சிலம்பின :**

ஆண்டாளும் அவள் தோழியரும் தெரு வழியே வந்து கொண்டிருக்கிறபொழுது, அதோ அந்த இளம் பெண்ணின் வீட்டு வாயிலின் முன் நிற்கின்றனர். வீட்டினுள்ளே துயின்று கொண்டிருக்கும் பெண் இவர்களைப் போலே அவ்வளவு அனுபவம் இல்லாதவள் போலும்! அவளை விளித்து ஆண்டாள் குழுவினர் கேட்கிறார்கள். "அதிகாலையில் எழுந்திருப்பதாகக் கூறிய நீ இன்னும் உறங்குகிறாயே! எழுந்திருந்து வெளியே வந்து எங்களுடன் நோன்புக்குச் சேர்ந்துகொள்!" என்கிறார்கள்.

'பொழுது விடிந்து விட்டதா? அதற்கு ஏதாவது அடையாளம் உண்டா?' என்று அந்தச் சிறிய பெண் கேட்கவும் 'வெளியே உள்ளவர்கள்' 'பெண்ணே! இரை தேடப் பறவை கூவிக்கொண்டே தன் கூட்டை விட்டுப் புறப்பட்டு விட்டதம்மா!' என்று கூறுகிறார்கள். இதைக் கேட்டும்கூட அந்த இளம் பெண் பிள்ளை மறுமொழி கூறாமல் இருக்கிறாள். 'பறவையின் குரல்தான் உன் காதில் விழவில்லை என்றால் பறவை அரசன் கருடனின் தலைவனான திருமால் கோவிலில் ஊதப்படும் சங்கொலியையாவது நீ கேட்கவில்லையா' என்கின்றனர். 'அந்தச் சங்கொலி எல்லோரையும் 'கோயிலுக்கு வாருங்கள்! வாருங்கள்!' என்று கூப்பிடுகிற மாதிரி அல்லவா அதன் ஒலி விளியாக அமைந்துள்ளது. உன் காதில் விழவில்லையா?' என்று கேட்கின்றனர். வெளியே வந்தவர்கள் அப்பெண்ணிடத்தே

இரண்டு வகையான ஒலிகளைப் பற்றி எடுத்துக் கூறியும், இன்னும் அவள் செவி சாய்க்கவில்லை போலும்! மூன்றாவதாக ஒரு சான்றையும் எடுத்துக் கூறுகிறார்கள்.

"ஹரி! ஹரி!" என்னும் திருநாம சங்கீர்த்தனம் கூடவா உன் காதில் விழவில்லை? திருப்பாற்கடலில் ஆதிசேடன் மீது பள்ளி கொண்டுள்ள உலக வித்தான திருமாலைத் தம் மனத்தே ஊன்றிப் பதித்த வண்ணம் முனிவர்களும் யோகிகளும் மெதுவாக 'அரி! அரி!' என்று திருநாம சங்கீர்த்தனம் செய்கின்றனர். அந்தத் திருமால் நமக்காக அல்லவா இங்கே கோகுலம் வந்து மாயங்களைச் செய்து காட்டினான்! தாய் வடிவில் வஞ்சகமாக வந்த பேய் பூதனையின் மார்பில் சுரந்த நஞ்சைப் பருகி அதன் மூலம் அவள் உயிரையும் உண்டானே! சகட வடிவில் ஒளிந்திருந்த அசுரனைத் தன் காலால் உதைத்து வண்டியை இற்று விழச் செய்வதுபோல வதைத்தானே! இந்த எம்பெருமானின் திருநாமத்தைப் பாட நாங்கள் வந்துள்ளோம்! எழுந்திரு அம்மா!' என்று அந்தப் புதியவளான பெண் பிள்ளை இடத்தே பேசுகிறார்கள்.

*"புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்*
*வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ!*
*பிள்ளாய் எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு*
*கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி*
*வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை*
*உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்*
*மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்*
*உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்!"*

**தயிர் கடையும் ஓசை**

ஆண்டாளும் தோழியரும் கூறியதைக் கேட்டுத் துயில் உணர்ந்த அந்தப் பெண், அவர்களுடன் சேர்ந்து கொள்கிறாள்.

எல்லோருமாக மேலே பவனியைத் தொடர்கிறார்கள். இதோ இன்னொருத்தி வீட்டு வாசல் வந்தாயிற்று.

இவள் யார் தெரியுமா? முன்பு பார்த்த சிறுமி போல அல்ல ; பகவத் பக்தியிலே இவள் துறை போகியவள் போலும்! நாயகப் பெண் பிள்ளையாம் இவள்! கண்ணனுடைய நினைவிலே தன்னையே மறந்து அவன் காதல் மயக்கத்தில் படுக்கையில் கிடக்கும் இவளுக்குப் பொழுது விடிந்தது தெரியவில்லை. 'விடிந்ததற்கு என்ன அடையாளம்?' என்று இவள் ஆண்டாள் கூட்டத்தினரைக் கேட்கிறாள்.

அதிலே ஒரு பெண் இவளுக்குப் பதில் கூறுகிறாள். 'கீசு கீசு என்று ஆனைச் சாத்தான் பறவைகள் பேசுவதை நீ கேட்கவில்லையா? பொழுது விடிந்ததற்குச் சான்று இதுதான்!' என்கிறாள்.

*"கீசுகீசென்று எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து*
*பேசின பேச்சரவம் கேட்டிலையோ?"*

இந்தக் கீச்சாங் குருவிகளான ஆனைச் சாத்தான் பறவைகள் ஆணும் பெண்ணுமாய் உள்ளவை ; அவை பேசிய பேச்சு தனிப் பேச்சல்ல ; 'கலந்து பேசின பேச்சு' என்றல்லவா ஆண்டாள் கூறுகிறாள்! இரவெல்லாம் ஆண் பறவையும் பெண் பறவையும் கூடிக் கலந்து மகிழ்ந்த பிறகு, அதிகாலையில் பொழுது விடிகிறது. 'ஐயோ! நாம் இப்படியே கலந்தே வாழ முடியாதா? பொழுது விடிகிறதே! இரை தேடும் நிமித்தம் நாம் பிரிய வேண்டி உள்ளதே!' என்னும் எண்ணத்தால் தளர்ச்சி தோன்றப் பேசுகின்றனவாம். 'கலந்து பேசிய பேச்சு' என்ன தெரியுமா! 'பொழுது விடிந்தால் பிரியப் போகிறோம். மறுபடியும் நாம் பேச வாய்ப்பு அடுத்த இரவுதான் கிட்டும். அதுவரை நாம் கலந்து பேச முடியாதே! ஆகவே,

எவ்வளவு பேச முடியுமோ அவ்வளவு பேசுவோம்!' என்று ஆண் பறவையும் பெண் பறவையும் கலந்து பேசினவாம். இப்படிப் பறவைகளின் கீசுகீசுப் பேச்சை ஆண்டாள் அனுபவிக்கிறாள்.

'ஆனைச் சாத்தான் பேச்சரவம் நீ கேட்கவில்லையா?' என்று ஆண்டாள் குழுவினர் கேட்டது, உள்ளே கண்ணனின் நினைவில் ஆழ்ந்திருந்த அந்த நாயக் பெண்ணுக்குப் புரியவில்லையா? பதிலே கூறாமல் இருந்து விடுகிறாள். இவர்கள் தன்னைக் குத்தலாகப் பேசிக் குறை காண்கிறார்கள் என்று அவள் பேசாமல் கிடந்தாளாம். வெளியே நிற்பவர்கள் எளிதில் விட்டு விடுவதாக இல்லை. 'என்னடீ! நீ பதில் கூறாமல் பேய் பிடித்தவள் போல் மறதியும் மந்தமும் ஆகக் கிடக்கிறாயே!' என்று செல்லமாகக் கடிந்து கொள்கிறார்கள்.

"பேய்ப் பெண் ஆனால் என்ன? என் அறியாமை இருக்கட்டும்; பொழுது விடிந்ததற்கு வேறு அடையாளம் ஏதாவது இருந்தால் கூறுங்கள்!" என்றாள் உள்ளே இருந்த அந்த நாயகப்பெண்.

"காலை நேரத்தின் மௌனத்தைக் கலைத்துக் கொண்டு எழும் மத்தோசை கேட்கவில்லையா? ஆய்ப்பெண்கள் பானைகளில் தயிரை நிரப்பி மத்தை இழுத்துக் கடைகிற ஓசை எங்கும் கேட்கிறதே! மலையை வைத்துக் கடலைக் கலக்கினால் கேட்கப்படும் ஒலி போல இந்த இடைப்பெண்கள் தயிர் கடையும் ஓசை காதைப் பிளக்கிறதே!" என்கிறார்கள் வெளியே உள்ளவர்கள்.

***"காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து***
***வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்***
***ஓசைப்படுத்த தயிர் அரவம் கேட்டிலையோ?"***

இடைச்சிகள் தங்கள் கழுத்தில் அணியும் தாலிகள் அச்சுத் தாலி, ஆமைத் தாலி என இரு வகைப்படும். அச்சு வடிவம்

கொண்ட தாலி காசு எனப்படும். ஆமை வடிவில் உள்ள தாலி பிறப்பு எனப்படும். இவ்விருவகைத் தாலிகளை அணிந்துள்ள ஆய்ப் பெண்கள் அங்குமிங்குமாக முன்னும் பின்னுமாக மத்தின் கயிற்றை இழுத்துக் கடைகிற பொழுது அந்த அசைவால் ஓசை எழுகிறது. காசு, பிறப்பு இரண்டும் கலகவென்று சப்தம் எழுப்பவும் கைகளைப் பெயர்த்து ஆய்ச்சியர் மத்தைக் கயிற்றால் இழுத்துக் கடைகிறார்களாம். அந்தப் பெண்களின் கூந்தல் மணம்தான் என்னே! கமகம என்னும் படியான வாசனை அந்த மத்தொலியுடன் கலந்து எங்கும் வீசுகிறது. 'வாச நறுங்குழல் ஆய்ச்சியர், அவர்கள். இவ்வாறு தயிர் கடையும் ஓசை வெளி எங்கும் கேட்கிறது. ஆய்ச்சியர் தயிர் கடையும் பொழுது தங்கள் கூந்தல் அவிழவும் அதிலுள்ள நறுமணம் எல்லா இடமும் வெள்ளமிடுகிறதாம். ஓசை கேட்பது ஒருபுறமிக்க, இந்தக் கூந்தல் நறுமணம் கம்மென்று வீடு முழுக்க வெளியே வீசி ஊரைக்கூட உறங்க ஒட்டாதபடி செய்யுமே! "நீ எப்படி அம்மா மூக்கைப் பொத்திக் கொண்டு தூங்குகிறாய்? எழுந்திரு!" என்கிற பாவம் இந்தப் பேச்சில் தென்படுகிறது.

இவ்வாறு வெளியே உள்ளவர்கள் கேட்டதும், அந்தப் பெண், "நம் ஊரில் இரவு பகல் என்றிராமல் எப்பொழுதும்தான் மத்தோசை - தயிர் கடையும் ஓசை கேட்கும் பொழுது விடிந்ததற்கு இது அடையாளம் ஆகாதே!" என்றாள்.

"இந்த மாதிரி வேடிக்கை பேசியே பொழுதைக் கழிப்பாயடீ ; நீ எங்களுக்குத் தலைவியாக இருக்கிறேன் என்றுகூடக் கூறுவாய். உன்னைத் தலைமை தாங்கச் செய்து விட்டால் நோன்பு நோற்ற பாடுதான்! நல்ல தலைவிப் பெண்ணடீ நீ! நாயக பெண் பிள்ளையா நீ!" என்று மற்றைய பெண்கள் அவளைக் கேலி செய்கிறார்கள்.

அன்பின் மிகுதியால் ஏற்படும் செல்லக் கொஞ்சலில் உண்டாகும் ஒரு வகைக் கண்டிப்பும் இங்கே தெரிகிறதல்லவா?

ஆனாலும், இந்தப் பெண்ணை விட்டு விட அவர்களுக்கு விருப்பம் இல்லை. இவள் கண்ணனிடத்தே கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியை அவர்கள் நன்கு அறிவார்கள். ஆகவேதான், தங்களுக்குத் தலைமை தாங்க, நாயகப் பெண்ணாக இருக்க அவளை வேண்டுகிறார்கள். எப்படியாவது அவளைத் தங்களுடன் சேர்த்துக் கொண்டுதான் நகர வேண்டும் என்கிற உறுதி பிறந்து விடுகிறது. ஆகவே, அவளை நல்ல வார்த்தை கூறியே அழைக்கிறார்கள். 'தேசமுடையாய்' என்று அழைக்கிறார்கள்.

'நல்ல ஒளி மயமானவள் ஆயிற்றே நீ! இருண்டு கிடக்கிற எங்கள் மனத்துக்கு ஒளியை ஏற்றும் பக்த சிகாமணி நீ அம்மா!' என்று அழைக்கிறார்கள்.

"நாங்கள் கேசவனான கண்ணனின் பெருமையைப் பாடிக் கொண்டே வருகிறோம். அவன் என்ன சாதாரணமானவனா! குதிரை வடிவில் வந்த அசுரன் வாயைப் பிளந்து கொன்ற மாவீரன் அல்லவா! அந்தக் கண்ணனுடைய தலை மயிர் புரள்கிறபொழுது உள்ள அழகு, வேறு யாருக்கு உண்டு? கேசபாச அழகு மிகுந்தவன். ஆதலால் அல்லவோ கேசவன் என்கிறோம்! அப்படிப்பட்ட கேசவனை நாங்கள் பாடிக்கொண்டு வரவும், அந்தப் பாட்டொலி உன் காதில் பட்டும் நீ எழுந்து வராமல் இருக்கிறாயே! அவன் உன்னுடைய சொந்தக் கண்ணன் தானே என்று நினைத்துப் பேசாமல் இருக்கிறாய் போலும்! நம் எல்லோருக்கும் பொதுவான கண்ணன் அல்லவா அவன்! நமக்குக் கண்ணனாகத் தெரிந்தாலும் அவன் தான் உலகங்களுக்கெல்லாம் தலைவனாகிய நாராயணன் அம்மா! அந்த நாராயணனைக் கேசவனைப் பாடவும் நீ கேட்டுக் கொண்டே கிடக்கலாமா?"

இவ்வாறு பெண்கள் பேசுகிறார்கள். முதலிலே 'பேய்ப் பெண்ணே!' என்று அழைத்தவர்கள், பிறகு நாயகப் பெண் பிள்ளாய்!' என்று அவளை ஏத்திப் புகழ்ந்தார்கள். கடைசியிலே, 'நீதான் ஒளி உடையவள்; தேசமுடையாய்!" என்று தீர்ந்த முடிவாகப் புகழ்கிறார்கள்.

உள்ளும் புறமும் கிருஷ்ண பக்தி நிறைந்த ஒளி இவளிடத்தே இருப்பதால்தான் 'தேசமுடையாய்!' என்றனர்.

*"கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத்தன் கலந்து*
*பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே*
*காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து*
*வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்*
*ஓசைப்படுத்த தயிர்அரவம் கேட்டிலையோ?*
*நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி*
*கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?*
*தேசமுடையாய்! திறவேலோ ரெம்பாவாய்!"*

* * *

**எருமையும் சிறு வீடும் :**

வைகறைப் பொழுதாகிய அருணோதய காலத்தில் கிழக்குத் திசை ஒளி பெறத் தொடங்குகிறது. எருமை மாடுகளிடத்தே பால் கறக்க உரிய நேரம் அது. ஆயின் பால் கறப்பதற்கு முன் அம்மாடுகளைப் பனிப்புல் மேய அவிழ்த்து விடும் பழக்கம் அக்காலத்தில் உண்டு. வீடுகளின் பின்புறத்தில், எருமைகள் காலைப் பொழுதில் பனிப்புல் மேய்வதற்கு அமைக்கப்பட்ட புல்வெளி 'சிறு வீடு' என்று அழைக்கப்பட்டது. இந்தச் சிறு வீடாகிய புல் வெளியில் எருமைகள் மேய்ந்த பிறகு ஆயர் பால் கறப்பர். பகல் நேரங்களில் எருமைகள் வீட்டிற்கு வெளியே மேயச் சென்று

விடும். எருமை மேய்கை பற்றிய அக்கால அருமையான செய்தியை இவ்வாறு ஆண்டாள் தெரிவிக்கிறாள்.

*"கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்."*

ஆண்டாளின் கூட்டம் தொடர்ந்து செல்கையில், இந்த மூன்றாவது பெண் வீட்டு வாசலில் வந்ததும், அவளை எழுப்ப முனைகிறது. இந்தப் பெண்ணோ மிகவும் குதூகலம் உடையவள்தான்! கோதுகலம் உடைய பாவையாம். ஆயினும் இவளும் உறங்குகிறாளே! ஆகவே, வெளியே நின்று அழைக்கும் பெண்கள், "கீழ்வானம் வெள்ளென்று, புலர்ந்து விட்டதம்மா! எருமை மாடுகளும் பனிப்புல் மேயச் சிறு வீட்டின் பக்கம் பரந்து செல்கின்றன. ஆகவே, நீ எழுந்திருக்க வேண்டிய காலைப்பொழுது புலர்ந்து விட்டது!" என்று கூறுகிறார்கள்.

உள்ளே படுத்துக் கிடந்த அந்தப் பெண், "நீங்கள் கூறுவது சரியல்ல; அதற்குள் பொழுது விடிந்து விடுமா என்ன? நீங்கள் இரவெல்லாம் கண்ணன் நினைவிலையே இருப்பதால், பொழுது விடியாததை விடிந்ததாக எண்ணுகிறீர்கள். உங்கள் முகத்தின் ஒளிதான், கீழ்த்திசை வரை சென்று பிரதிபலித்துத் திரும்புகிறது. அதைப் பிரமையால் விபரீதமாக எண்ணிக் கிழக்கு வெளுப்பதாகக் கருதுகிறீர்கள். வேறு அடையாளம் இருந்தால் கூறுங்கள்," என்று பேசினாள்.

அந்தப் பெண்ணோ எழுந்திருக்காமலேயே இப்படிப் பதில் கூறிவிட்டாள். வெளியே காத்துக் கொண்டிருப்பவர்களுக்கு, அடையாளம் காட்ட வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. ஆகவே, தங்களுடன் சேர்ந்து வந்துள்ள பிற பெண்களையே எடுத்துக்காட்டாய்க் கூறுகிறார்கள். "நோன்பிற்கு எங்களுடன்

புறப்பட்டு வந்தவர்கள் பலரும் கூடவே மிகுதியாக வந்து சேர்ந்து விட்டார்கள். உன்னை அழைத்துக் கொண்ட பிறகே நோன்பிற்குச் செல்ல வேண்டும் என்று அவர்கள் நிற்கிறார்கள். உன்னை விட்டு விட்டுப் போவது சரியல்ல என்று நாங்கள் கூறி அவர்களைத் தனியே போக விடாமல் நிறுத்தி வைத்துள்ளோம். உன்னை அழைப்பதற்கென்றே அவர்களையும் உன் வீட்டு வாசல் பக்கம் நிறுத்தி உள்ளோம்!" என்று கூறினர்.

'நீ நல்ல உறக்கம் உடையவள் ஆனாயே! உன்னுடைய குதூகலம் எங்களை நன்றாகக் கவர்ந்துவிட்டதம்மா! பாவை போன்றவளே! எழுந்திரு!' என்று அவர்கள் உரிமையுடன் பேசுகிறார்கள். 'உறக்கம் தாம் குதூகலமா?' என்றல்லவா குத்திக் காட்டுகிறார்கள்!

"எதற்காக உன்னை இப்படி எழுப்புகிறோம், தெரியுமா! தேவர்களுக்கெல்லாம் தேவனாய் இருக்கும் நாராயணன் நமக்காகக் கண்ணனாக வந்திருக்கிறான். அவனைக் கொல்ல வந்த கொக்கு வடிவம் எடுத்த அசுரன் வாயைக் கிழித்து வதம் செய்தான். இப்படிப்பட்ட தேவாதி தேவனான கண்ணனை நாம் சென்று சேவித்தால், அவன், 'ஆ! ஆ! பெண்களே! நீங்கள் வந்த காரியம் என்ன? என்று கேட்பான். நமது வேண்டுகோளை அவனிடத்தே வைத்தால், அதனை ஆராய்ந்து நமக்கு அருள் காட்டுவான். ஆகவே, நீ படுக்கையை விட்டு எழுந்திருந்து வா! எங்களுடன் பாவைக் களம் போகச் சேர்ந்து கொள்!" என்று பேசுகிறார்கள். இத்தனையும் காட்டும் அருமையான சொல்லோவியம், இதோ!

*"கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு*
*மேய்வான் பரந்தன காண்! மிக்குள்ள பிள்ளைகளும்*
*போவான் போகின்றாரைப் போகாமல் காத்து உன்னைக்*
*கூவுவான் வந்து நின்றோம்; கோதுகலமுடைய*

*பாவாய் எழுந்திராய்! பாடிப் பறை கொண்டு*
*மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய*
*தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்*
*ஆவாவென்று ஆராய்ந்து அருளேலோ ரெம்பாவாய்."*

மேற்கண்ட பாசுரத்தில் 'போவான் போகின்றாரை' என்கிற தொடர் அருமையான உட்குறிப்பு ஒன்றைத் தெரிவிக்கிறது. போவதே பயனாகக் கருதிப் போனார்கள் என்று பொருள் படும். பயன் கருதிப் போவது என்றில்லாமல், போவதையே பயனாகக் கருதினார்கள் என்பது இதன் நுட்பம் ஆகும். திருவேங்கடமலைக்குப் பயணம் செய்வோர், அந்தப் பயணத்தையே பயனாகக் கருதிச் செல்கிறார்கள் அல்லவா! புண்ணிய இடங்களுக்குச் செல்லும் பயணிகளுக்கு இடங்களை அடைவது முடிவுப் பயனாக இருக்க, அவர்களுடைய பயணமே புனிதமானதென்று கருதி, அதையே பயனாக ஏற்கிறார்கள். அது போலவே இப்பெண்களும் நோன்புக் களத்துக்குப் போவதையே பயனாக எண்ணிப் போனார்கள் என்பது பொருளாகிறது.

* * *

**மாமன் மகளே!**

ஒரு செல்வத் திருமகள் வீட்டு வாசலில் வந்து நிற்கிறார்கள் அந்தப் பெண்கள். அந்த மாளிகையிலே மாடம் அழகாகக் கட்டப்பட்டுள்ளது ; உயர்ந்த தூய்மையான, இயல்பாகவே ஒளிக்கற்றைகளை வெளியே உமிழும் மணிகள் பதிக்கப்பட்ட மாடம் அது! தூமணி மாடமாம்; அந்த மாடத்தில் பள்ளியறை! நான்கு பக்கங்களிலும் விளக்குகள் ஒளி மயமாக எரிந்து கொண்டிருக்கின்றன. நல்ல, மனதுக்கு உகந்த சூழலிலே பள்ளியறை அமைந்துள்ளது. தூபம் எங்கும் கமழ்கிறது ; அகில்

புகையைப் பரவச் செய்திருக்கிறார்கள் போலும்! மெத்தென்று சுகம் கொடுக்கும் படுக்கை மீது அந்தப் பெண் படுத்து இனிதாகத் துயில் கொள்கிறாள்.

வெளியே நிற்கு ஆய்ப் பெண்களுக்கு இம்மாடத்தில் பள்ளியறையில் துயில் கொள்ளும் பெண் மீது பற்றும் பாசமும் எங்கிருந்தோ தோன்றிவிடுகின்றன! அவர்களுக்கு இவள் உறவு முறை கொண்டவளா என்ன! இல்லாவிட்டாலும்கூட நெருக்கத்தையும் பிணைப்பையும் வெளிப்படுத்த உறவு முறை வைத்து அழைத்தால்தானே ஏற்றதாகும்?

'மாமான் மகளே!' என்று அழைப்பதில்தான் எவ்வளவு சுகமும் இதமும் உள்ளன! ஆய்ப் பெண்கள் அவளை விளித்து, "மாமான் மகளே!' உறங்குகிறாயே! நோன்புக்குப் புறப்பட்டு வர வேண்டாமா? துயில் எழுந்து உன் அறை கதவைத் திற ; நாங்கள் உள்ளே வருகிறோம்!" என்று கூறுகிறார்கள்.

வெளியே இருந்தவர்கள் அந்த அறையின் சாளரங்கள் ஊடு பார்த்துத்தான் அவள் படுக்கைப் பாங்கைத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். "உன் மணிக் கதவின் தாழ்ப்பாளைத் திறக்கமாட்டாயா?" என்று அவர்கள் கேட்கிற பொழுது, வெறும் அறையின் கதவை மட்டுமா திறக்கக் கேட்கிறார்கள்? இல்லை ; இல்லை. இதயம் என்னும் அந்த மாய அறையின் கல்லான கதவைத் திறந்து, உள்ளே இடம் பிடிக்க அல்லவா, இறுக்கம் என்கிற தாழ்ப்பாளைத் திறக்கச் சொல்கிறார்கள்!

அவளுக்கு இவர்கள் பேசுவது காதில் விழுந்ததோ இல்லையோ? அவள் எழுந்திருக்கவே இல்லை; பின் எப்படித் தாழ்ப்பாளைத் திறப்பாள்? தோழிப் பெண்களுக்கு வேறு வழி புலப்படவில்லை. அந்தப் பெண் ஏன் பதிலே கூறாமல் கிடக்கிறாள்? வேண்டுமென்றுதான் மௌனமா? இருக்காதே! ஒருவேளை பேசும்

சக்தி இல்லாத ஊமையா? செவிடா? அல்லது உறக்கமா?' என்றெல்லாம் வெளியே நின்று கொண்டிருப்பவர்கள் நெஞ்சங்களிலே எண்ண அலைகள் பரவுகின்றன. தாங்கள் பனியிலே வெளியே கால் கடுக்க நின்று கொண்டிருக்க, உள்ளே இவள் மட்டும் சொகுசாக, தூபம் கமழும் துயிலணையில் கண்வளருகிற பாங்கைத்தான் பாரேன்!

'மாமீ!' என்று அந்தப் பெண்ணின் தாயை அழைக்கிறார்கள் பெண்கள். 'உன் மகள் என்ன ஊமையா? செவிடா? அல்லது மயக்கத்தில் ஆழ்ந்த உறக்கமா?' என்று கடிந்தவாறே கேட்கிறபொழுது, அவர்கள் ஆதங்கமும் ஆத்திரமும் பீறிட்டுக் கொண்டு வெளிப்படுகின்றன.

என்ன அதிசயமடா இது! எவ்வளவு பேசியும் இந்தப் பெண்ணுக்குக் காதில் விழவில்லையா? இவளுக்கு யாரோ இவ்வாறு மயங்கி உறங்கும்படி மந்திரம் போட்டுவிட்டார்களோ என்னவோ! பேச்சே காதில் விழாதபடியாக ஒரு மாயமந்திரத்தின் வசம் கட்டுப்பட்டு விட்டாள் போலும்!

*"ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?"*

இப்படி எல்லாம் வெளியே உள்ள பெண்கள் பேசுவதைத் தாய் கேட்கிறாள். அவள் இவர்களை நோக்கி, "நீங்கள் என் பெண்ணைப் பற்றி இவ்வளவு ஐயமும் கவலையும் கொள்ள வேண்டாம். கட்டாயம் அவள் எழுந்து வந்து வருவாள். அவளுக்குப் பிடித்தமான கண்ணன் திருநாமங்களைக் கூறி எழுப்புங்கள்" என்கிறாள்.

'அவளுக்குப் பிடித்த கண்ணன் திருநாமம் என்ன தெரியுமா? மாமாயன், மாதவன், வைகுந்தன் என்கிற மூன்று திருப்பெயர்களுடன் இன்னும் உகந்த நாமங்களையும் கூறுங்கள்'

என்கிறாள் தாய். அப்படியே அவர்களும் திருநாம சங்கீர்த்தனம் செய்யவும் அந்த மாமான் மகளும் துயில் உணர்ந்து எழுந்து வந்து விடுகிறாள். இப்படி ஒரு காட்சியைக் காட்டும் பாசுரம் இதோ!

*"தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்*
*தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்*
*மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்*
*மாமீர் அவளை எழுப்பீரோ உன்மகள்தான்*
*ஊமையோ அன்றிச் செவிடோ அனந்தலோ*
*ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ*
*மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று*
*நாமம் பலவும் நவின்றுஏலோர் எம்பாவாய்."*

இப்பாசுரத்தில் இறைவனை ஆண்டாள் அழைக்கும் பெயர்களான 'மாமாயன்', மாதவன் 'வைகுந்தன்' என்னும் மூன்று திருநாமங்களிலும் மூவகையான குணங்கள் குறிக்கப்படுகின்றன. பகவானுடைய ஆச்சரியமான விளையாடல்களை எண்ணிப் பேசுகிற திருநாமம் 'மாமாயன்' என்பதாகும். தன்னுடைய பெரு விந்தையான பல செயல்களாலே இந்த அபலைப் பெண்களைக் கவர்ந்துள்ளவன் என்பதை 'மாயன்' என்னும் சொல் குறிக்கிறதாம்.

"தன் சார்விலாத தனிப் பெருமூர்த்திதன் மாயம் செவ்வே நெஞ்சால்நினைப் பரிதால் வெண்ணெய் ஊண் என்னும் ஈனச் சொல்லே" என்னும் நம்மாழ்வார் திருவாக்கும் இந்தப் பெரு மாயத்தை அல்லவா குறிப்பிடுகிறது?

எத்தனை பெரிய ஞானியையும் நெஞ்சிழக்கச் செய்யும் அவன் மாயைகள் ஆச்சரியமானவை அன்றோ! இப்படி இவன் மாயம் செய்யக் காரணம் அவனுடைய எளிவந்த பெருந்தன்மையான

குணமாகும். தன் மேன்மை பாராமல் தண்ணீர் போலக் கலந்து பரிமாறும் இத்தன்மையை 'ஸௌலப்யம்' என்னும் வடமொழிச் சொல் குறிப்பிடும். இந்த ஸௌலப்யமாகிய நீர்மைக் குணத்தைத் திருமால் எவ்வாறு பெற்றான் என்பதை இரண்டாவது சொல்லான 'மாதவன்' குறிப்பிடுகிறது.

மா - இலக்குமி. தவன் - தாங்குகிறவன். இலக்குமியை மார்பிலை வைத்துக் கொண்டுள்ள இவன் உலகத் தாயான அவளிடத்தேதான் பாசம் கலந்த எளிமைக் குணமான ஸௌலப்யத்தைக் கற்றிருக்கிறான்.

மூன்றாவது திருநாமம் ஆன வைகுந்தன் என்பது அவனுடைய மேன்மையைக் குறிக்கிறது. மண் மகள், திருமகள் திருவடி வருட, திவ்விய வைகுந்தத்திலே வீற்றிருக்கிற பரமன் அவன் என்பதாம். மேன்மைக்கும் நீர்மைக்கும் இடையே அல்லவா திருமகள் நாதன் மாயம் செய்து காட்டுகிறான்! வைகுந்தனே மாயனாக வருவது மாதவன் என்கிற காரணத்தாலேயே ஆகும்.

இவ்வாறு இறைவன் திருநாமங்களை நவில்வதே அவன் அனுபவம் பெறச் சிறந்த வழி என்பதை ஆண்டாள் தன் நூலின் குறிக்கோளாக அமைத்துள்ளாள்.

**தேற்றமாய் வந்து திற :-**

பெண்கள்தான் கண்ணனைக் கண்டு மயங்குகிறார்கள் என்பது பொதுவான செய்தி என்றாலும், பெண்ணைக் கண்டு கண்ணனும் மயங்குகிறான் என்பதையும் காண்கிறோம்.

இந்தப் பெண் கண்ணனையே மயங்கும்படியாகச் செய்து தன் வசம் இழுத்துக் கொண்டுள்ள மகிமை உடையவள்! தான் செய்த தவத்தின் பயனாக காதலாகிய பக்தியிலே சொர்க்க அனுபவத்தையே இவள் அடைகிறாளாம். 'நோற்றுச் சுவர்க்கம்

புகுகின்ற அம்மனாய்!' என்று இவளைச் செல்லமாக வெளியே நிற்கிற பெண்கள் அழைக்கிறார்கள். 'பக்திக் காதலின் நோன்பில் நீ வெற்றி கண்டவள் அம்மா! சுவர்க்கமயமான இன்பம் வாய்க்கப்பட்டவள் ஆயிற்றே! உனக்கு மட்டுமே என்று அந்த இன்பம் இருக்கலாமா? எங்களையும் அதில் சிறிது பங்கு கொள்ளச் செய்யலாகாதா?' என்று கேட்கிறார்கள் பெண்கள்.

எவ்வளவுதான் கேட்டும் உள்ளே படுக்கையில் கிடக்கிற அந்த அருங்கலமான பெண் பதிலே பேசவில்லை. 'வாசல் கத்வைத் திறக்க எழுந்துதான் வரவில்லை. படுத்தபடியே வாயையாவது திறக்கக் கூடாதா? அப்படி என்னதான் ஆனந்தத்தில் மூழ்கி இருக்கிறாளோ?' என்று எண்ணுகிறார்கள் இவர்கள்.

"கண்ணனுடன் கலந்து உறவாடிய மகிழ்ச்சியிலே திளைத்திருக்கிறாள் இவள்! அவனுடன் அவள் கலந்திருக்கிறாள் என்பதைத்தான், நம் மூக்கில் வந்து படும் திருத்துழாய் வாசனை அறிவிக்கிறதே? நாராயணனுடைய துழாய் இவள் மேல் பட்டு உறவாடியதால் இவளுக்கும் அந்த மணம் நிலையாகக் குடிகொண்டு விட்டது போலும்! ஒரு குளிக்குப் போகாது, ஒன்பது குளியலுக்குத் தாங்கும் திருத்துழாய் மணம் ஆயிற்றே! அவனுடன் கலந்த மகிழ்ச்சியிலே பதிலே பேசாதிருந்தாள்.

"உடம்பைத்தான் நாராயணனுக்குத் தந்தாள்; மனத்தையும்கூட அவனுக்கே கொடுத்தாள் என்றாலும், பேச்சையாவது எங்களுக்குத் தரலாகாதா?"

இவ்வாறு மனம் இரங்கிப் பேசுகிறார்கள் வெளியே நிற்கும் பெண்கள்.

"நாற்றத் துழாய் முடி நாராயணன் நமக்குப் பறை தரப் போகிறான். அவனைப் போற்றிப் பாட நீயும் எங்களுடன் சேர்ந்து கொள்ள வெளியே வா!" என்றழைக்கிறார்கள்.

ஆயினும் இன்னும் அவள் படுக்கையை விட்டு எழுந்து வரவில்லை. பெண்களுக்கு, 'அவள் உறக்கத்தில் ஆழ்ந்து விட்டாள் போலும்!' என்று தோன்றுகிறது. "கும்பகர்ணன் தன் தூக்கம் முழுவதையும் உனக்குக் கொடுத்து விட்டானோ? யமன் வாயிலே தானே சென்று விழுந்த அந்தக் கும்பகர்ணன் தந்த தூக்கத்தில் நீ ஆழ்ந்து விட்டாய் போலும்! நீ எங்களுக்கு அருமையான அணிகலன் போன்றவள் அல்லவா! கொஞ்சம் தெளிவு கொண்டு எழுந்து வரலாகாதா? தேற்றமாய் வந்து கதவைத் திற!' என்று பெண்கள் பேசுகிறார்கள். இவர்கள் முடிவாகக் கூறுவது :

"தெளிவான தோற்றத்துடன் உறக்க மயக்கம் இல்லாமல், சோம்பல் இல்லாதவளாய் எழுந்து வந்து கதவைத் திறப்பாய்."

*"நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்*
*மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்*
*நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்*
*போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்*
*கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கருணனும்*
*தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ*
*ஆற்ற அனந்தல் உடையாய் அருங்கலமே!*
*தேற்றமாய் வந்து திறவேலோர் எம்பாவாய்!"*

## செல்வப் பெண்டாட்டி

ஆய்ப்பாடி முழுவதிலும் இந்தப் பெண்ணைப் போன்ற சிறந்த மங்கையைக் காண முடியாது. ஊருக்கெல்லாம் மிகச் சிறந்தவளாக இருக்கும் இப்பெண் உயர் குடிப்பிறப்பும், நிறைந்த பெண்மையும் உடையவள். கண்ணன் ஊருக்கு ஒரு பிள்ளையாகத் திகழ்வதைப் போலவே, அவனுக்கு ஏற்றவளாய் ஒப்பற்ற உத்தமியாக

வளர்ந்துள்ளாள் இப்பெண்? கோவலர்களுக்கு இவள் ஒரு பொற்கொடி ; குற்றம் ஒன்றுகூட இல்லாதவள்.

'அவனைப் பெற நான் நோன்பு நோற்க வேண்டுமா? அல்லது என்னைப் பெற அவன் நோன்பு நோற்க வேண்டுமா? வேண்டுமாகில் அந்தக் கண்ணனே நோன்பு நோற்று என்னை அடையட்டும்! என்ற அளவிலே முழு நம்பிக்கை வாய்ந்த நங்கை இவள். புனத்திலே திரியும் மயில் போன்ற இவள் ஆய்க் குலத்துக்கு ஏற்ற செல்வமாகச் செல்லமாக வளருகின்ற பெண் பிள்ளை.

'நான் கண்ணனைத் தேடிப் போக மாட்டேன். அவன் என்னைத் தேடி வரட்டும்!' என்று செருக்குடன் அந்தப் பெண் கண்ணன் நினைவாகவே படுக்கையில் கிடக்கிறாள். தோழிப் பெண்கள் சுற்றத்தாருடன் திரண்டு வந்து இவள் வீட்டு வாசலிலே நிற்கிறார்கள். சும்மா நிற்காமல் அவர்கள் கண்ணன் திருநாமப் பெருமைகளை வாய் விட்டுப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பாட்டைக் கேட்டும்கூட இந்தப் பெண் கொஞ்சமும் அசைவில்லை. படுத்தபடியே கிடக்கிறாள். வெளியே நிற்கிறவர்கள் இவளை விளித்துப் பேசுகிறார்கள்.

கன்றுகளோடு கூடிய பசுக் கூட்டங்களைக் கறக்கும் தொழில் தெரிந்த ஆயர்கள், பகைவர்களை விரட்டி அடிப்பதற்கான தோள் வலிமையும் உடையவர்கள். வலுச் சண்டைக்குப் போகாமல் வந்த போரை விடாமல் போர் செய்து வெற்றி பெறத் தெரிந்தவர்கள். இத்தகைய திறன் மிக்க அவர்களுக்கும் ஆய்க் குலத்துக்கும் பொற்கொடியாக இருக்கிறாளாம், இந்த உத்தமப் பக்த மணிப்பெண். கோவலர்களின் ஆய்க்குலம் இவள் பிறப்பால் மேன்மை உற்றது, ஜனகனுக்கு மகளாய் வந்த சீதையால் அப்பேரரசன் குலம் பெருமை பெற்றது போலே, இவள் பிறந்து

வளர்ந்ததாலே மாடு மேய்க்கும் கோவலர் குலப் பெருமை பெற்றதாம். இன்னும் இப்பெண் எப்படிப்பட்டவள் தெரியுமா?

புனத்திலே திரியும் மயிலைப் போன்ற சாயல் உடையவள்; இடையோ இல்லை என்கிற அளவுக்குச் சிறியது. புற்றிலிருந்து சீறிவரும் பாம்பின் படம் போன்ற இடைப்பகுதி அழகு வாய்க்கப் பெற்றவள். கோவலர்தம் பொற்கொடி, மற்றவர்க்கும் புனமயிலாக இருக்கிறாள். ஆகவேதான், இடையர்களுக்குச் செல்வமாக 'பெண் என்னும் இவள்' என்னும் செருக்குக் கொள்கிற அளவில் ஆண்மையை ஆள்கிறவளாக இருக்கிறாள்.

"கோவலர்தம் பொற்கொடியே! புற்றரவல்குல் புனமயிலே! செல்வப் பெண்டாட்டி! நீ ஏன் உறங்கிக் கொண்டு பொழுதைக் கழிக்கிறாய்? சுற்றத்தார்களும் தோழிமார்களும் எல்லோரும் சேர்ந்து நோன்பு நோற்கக் கூடிவிட்டார்கள். அந்த முகில்வண்ணன் பேர் பாடச் செல்கிறோம். உன்னுடைய வீட்டு முற்றத்தின் முன் பகுதியில் ஒன்றுபட்டு நாங்கள் நிற்கிறோம் மேகவண்ணனான அவன் பெயரைப் பாடுகிறோம். உன் காதில் விழவில்லையா? கொஞ்சம்கூட நீ அசையவில்லை போல் இருக்கிறது. இறைவன் திருநாமம் காதில் பட்டும் கூடவா நீ எழுந்திருக்காது படுத்துக் கிடக்கிறாய்?"

இவ்வாறு அப்பெண்கள் கேட்கிறார்கள்.

*"கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து*
*செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்*
*குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே*
*புற்றரவல்குல் புனமயிலே! போதராய்!*
*சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்துநின்*
*முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்*
*சிற்றாதே பேசாதே செல்வப்பெண்டாட்டி! நீ*
*எற்றுக்கு உறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்!"*

**நற்செல்வன் தங்கை :**

இராமபிரானைப் பிரியாமல் தொடர்ந்து அடிமை செய்த இளைய பெருமாளான இலக்குவனைப் போலே, கண்ணனைப் பிரியாமல் அவனுடன் சென்று எப்பொழுதும் தொண்டுகளே செய்து வரும் இடையன் ஒருவனைக் காண்கிறோம். தன் பசுக்களை வீட்டிலே கறந்து கவனிக்கும் கடமையாகிய அறத்தைக்கூட நழுவ விட்டு விட்டு, எப்பொழுதும் கண்ணன் பின்னாலேயே செல்லும் இந்த ஆயனின் தங்கை அவனுக்குச் செல்லமானவளாக இருக்கிறாளாம்.

இந்த ஆயனுடைய தொழுவத்தில் உள்ள எருமை மாடு தன் மடி நிறையப் பால் சேர்ந்ததும், கனம் தாளமாட்டாமல் திணறுகிறது. அதன் கன்றுக் குட்டியோ மற்றோர் புறம் கட்டி வைக்கப்பட்டுள்ளது. கன்றால் ஓடி வந்து, தாய் எருமையிடத்தே பால் குடிக்க முடியவில்லை. எருமையும் கன்றை எண்ணிய மாத்திரத்தே, பெரிய கனைப்பு ஒன்று செய்து தன் பாசத்தை வெளியிடுகிறதாம். தன் கன்றை நினைந்த மாத்திரத்தே முலைக் காம்புகள் வழியே பால் சோர்ந்து கீழே விழுகிறது. அந்தப் பால் மேலும் மேலும் கீழே விழுந்து கொட்டில், முற்றம் மற்றும் வீடு முற்றுமே ஓடிச் சேறாக ஆக்கி விடுகிறதாம். அவ்வளவு பால் சுரந்து வீணாகிறது !

கன்றைக் கொண்டு வந்து தாய் எருமையிடத்தே ஊட்ட அங்கு யாருமே இல்லை. இந்தக் கடமையைச் செய்ய வேண்டிய அந்த ஆயன் தன் தர்மத்தை மறந்து விட்டுக் கண்ணன் பின்னாலே சென்று சுற்றிக் கொண்டிருக்கிறான். இப்படிப்பட்டவனுடைய தங்கையாகிய ஒருத்தியை இங்கே காண்கிறோம்.

இவள் வீட்டிற்கு வெளியே வந்து நிற்கும் ஆய்ப்பெண்களின் கூட்டம் அவளை எழுப்ப வந்துள்ளது. "நற்செல்வன் தங்கையே!

நோன்பிற்கு உன்னை அழைத்துச் செல்ல நாங்கள் உன் வீட்டு வாசலில் பனித் துளிகள் எங்கள் தலைகளில் விழுவதையும் பொருட்படுத்தாமல் நின்று கொண்டு உன்னை அழைக்கிறோம். நீயோ நாங்கள் கூப்பிடுவதையும் பொருட்படுத்தாமல் உள்ளே படுத்துக் கிடக்கிறாயே! இது என்ன நியாயமடீ!" என்கிறார்கள்.

'பனித் தலை வீழ உன் வாசல் கடைபற்றி நாங்கள் நிற்கிறோம்!' என்கிறார்கள். 'வெளியே பனி வெள்ளம்! உள்ளே உன் இல்லத்திலேயோ பால் வெள்ளம்!' என்று நயம்படப் பேசுகிறார்கள்.

நற்செல்வன் தங்கையோ வாயே திறக்கவில்லை. கொஞ்சம்கூட லட்சியம் செய்யாமல் தன் மனத்துக்குள்ளேயே கண்ணனையே நினைத்த வண்ணம் மனோரதத்திலே கிடக்கிறாள்!

முன்வாசல் தண்டாயத்தைப் பற்றி நின்று கொண்டு பனி மேலே விழவும் கவனியாமல் இவர்களோ இறைவன் திருநாமத்தைப் பாடுகிறார்கள். யாரை எண்ணி யாரைப் பற்றிப் பாடுகிறார்கள் தெரியுமா? தங்கள் மனத்துக்கு இனியவனான, கனவிலும் பெண்களுக்குத் தீமை எண்ணாத இனியவனான இராமபிரானைப் பற்றிப் பாடுகிறார்கள். அந்த இராமன் பெயரை நேரே கூறாமல் அவனுக்கு அருமையான ஒரு பட்டம் சூட்டிப் பேசுகிறார்கள். 'மனத்துக்கு இனியான்' என்பது அப்பட்டம்.

***"மனத்துக் கினியானைப் பாடவும் நீ வாய்திறவாய் !***
***இனித்தான் எழுந்திராய்! ஈதென்னபேர் உறக்கம்?"***

என்று அப்பெண்கள் கேட்கிறார்கள்.

"நாங்கள் பேசுகிற பேச்சைக் கேட்டு நீ எழுந்திருந்து வராவிட்டாலும், மனத்துக்கு இனியான் ஆன இராமபிரான் பற்றிய பாடல்களைக் கேட்கவாவது எழுந்திருந்து வரக்கூடாதா?" என்பது

அவர்கள் கேள்வியின் பாவமாகத் தொனிக்கிறது. 'எல்லா வீடுகளில் உள்ளவர்களும் உறங்கி எழுந்து வந்த பிறகும் இவள் மட்டும் இப்படித் தூங்கலாமா! இதென்ன மிகப் பெரிய உறக்கமாக இருக்கிறதே!' என்று கேட்கிறார்கள்.

*"கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி*
*நினைத்து முலைவழியே நின்றுபால் சோர*
*நனைத்து இல்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!*
*பனித்தலை வீழ நின்வாசற் கடைபற்றிச்*
*சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற*
*மனத்துக் கினியானைப் பாடவும் நீ வாய்திறவாய்*
*இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேர்உறக்கம்*
*அனைத்தில் லத்தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்!"*

இந்தப் பாசுரத்தில் இராம பக்தி பேசப்படுகிறது. மூன்று வகையான வெள்ளப் பெருக்குகளைக் காண்கிறோம். வெளியே நிற்கிற பெண்கள் மேலே பனிவெள்ளம்; அவர்கள் மனத்திலோ இராமகிருஷ்ணன் பக்தி வெள்ளம்; இல்லத்திலோ பால் வெள்ளம். இப்படிப்பட்ட மூவகை வெள்ளப் பெருக்கிலே அகப்பட்ட பெண்கள் முடிவிலே கண்ணன் இருக்குமிடமே புகலாக அடைகிறார்களாம். ஆற்று வெள்ளம், கால்வாய் வெள்ளம், குளத்து வெள்ளம் ஆகிய மூவகை வெள்ளம் ஏற்பட்டு ஊர் துன்பப்படுகிற பொழுது, ஊரார் மேட்டு நிலத்தையே தஞ்சமாகக் கொள்வார்கள். அது போலே ஆய்ப் பெண்களும், தங்கள் தலைகள் மேலே பனி வெள்ளம், உள்ளத்தே பக்தி வெள்ளம், இல்லத்தே பால் வெள்ளம் ஆகியவை தாக்கவும், கண்ண பெருமானாகிய மேட்டு நிலத்தை அடைகிறார்களாம்.

ஆழ்வார்களின் அருளிச் செயல் அனுபவ வெள்ளம் ஒருபுறம், ஆசாரிய சீலர்களின் உரைகளால் ஏற்படும் பகவான் அனுபவவெள்ளம் மறுபுறம், அடியார்கள் இறைவன் குணங்களில்

ஈடுபட்டு வெளியிடும் அனுபவ வெள்ளம் இன்னொருபுறம் - ஆக, இம் மூவகை வெள்ளங்களையும் பனி, பால், பக்தி வெள்ளங்களாக உள்ளுறை பொருள் கொள்ளலாம் என்பர் உரைகாரர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.

**வெள்ளி எழுந்தது :**

மான் போல் மருண்டு நோக்கும் கண்ணழகு உடையவள் அவள்! ஆய்ப்பாடி எங்கும் இவளது கண்ணழகு பற்றிய பேச்சுநடக்கும். தாமரைபோல் மலர்ந்த கண்ணில் செவ்வரி படர்ந்துகாணப்படுவது ஒருவகைத் தனிஅழகாக மிளிர்கிறது. இவளை அழைக்கிற பெண்கள், 'போதரிக் கண்ணினாய்!' என்றே கூப்பிடுகிறார்கள். கண்ணின் வெளி விழிப்படலம் மலர்போல உள்ளது. அங்கே உள்ள கருமணி வண்டு போல உருள்கிறது. இரண்டு காட்சிகளையும் இணைத்துப் பார்க்கிறபொழுது, 'மலர் வண்டு' என்று கூறலாம் அல்லவா! அதையே 'போதரிக்கண்' என்கிறார்கள் ஆய்ப் பெண்கள். (போது - மலர்; அரி - வண்டு)

வழக்கம் போல் இங்கும் வெளியே நிற்கும் பெண்கள் இந்தக் கண்ணழகியை விளித்துப் பேசுகிறார்கள்.

"பறவைகள் எழுந்து இரை தேடக் கிளம்பும் காலை நேரம் புலர்ந்து விட்டது. நீ துயில் விட்டு எழுந்து வராமல் படுத்துக் கிடக்கிறாயே?" என்கிற பல்லவி முதலிலே கேட்கிறது. மேலே பேசுகிறார்கள் இவர்கள்.

"எதற்காக உன்னை எழுப்பி அழைக்கிறோம் தெரியுமா? கண்ணனைக் குறித்து நோன்பு நோற்கச் செல்லும் நாங்கள் உன்னையும் அதில் இணைத்துக் கொள்ளவே வந்தோம்.

"பறவை உருவில் வந்த பகாசுரன் வாயைக் கிழித்துக் கொன்றான் கண்ணன். பொல்லாத அரக்கனான இராவணனுடன் போரிட்டு, அவன் பத்துத் தலைகளையும் கிள்ளிக் களைந்தான்

இராமன். இந்த இருவரான இராம கிருஷ்ணர்களை எண்ணிப் பக்தி வெள்ளத்தில் நாம் நீராட வேண்டாமா? இவர்களுடைய குணங்களாகிய நீரிலே குள்ளக் குளிரக் குடைந்து முழுகுவோம். இந்த நீராட்டத்துக்கு நீயும் வா.

படுக்கைக்கே உறவு கொண்டு காலைப் பொழுதை வீணாக்காதே!"

இவ்வாறு பெண்கள் பேசுவதைக் கேட்ட அவள், 'நான் உங்களுடன் வருவது இருக்கட்டும். மற்றவர்கள் யாவரும் வந்து விட்டார்களா?' என்று கேட்டாள்.

உடனேயே வெளியே நிற்பவர்கள், "பிள்ளைகள் அனைவரும் பாவைக் களம் போய்விட்டார்கள். பாவை நோன்பு நோற்கும் இடத்துக்கு அவர்கள் சென்று நேரம் ஆகிவிட்டதம்மா! பொழுது விடிந்ததற்கு வேறு ஓர் அடையாளம் கூடக் கூறுகிறோம். கிழக்குத் திசையிலே வெள்ளியாகிய சுக்கிரன் தோன்றிவிட்டான். வியாழனும் அத்தமித்து விட்டான்!" என்கிறார்கள்.

சுக்கிரன் உதயமாவது பொழுது விடிவதற்கு அடையாளமாகும். வியாழன் அந்நேரம் அத்தமனமாகும் என்பர் சோதிடர்.

இங்கே இப்பாசுரத்தில் வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று என்று ஆண்டாள் குறிப்பிடுவது, அவள் வாழ்ந்த காலத்தில் அவ்வாறு நிகழ்ந்துள்ளதைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இதனையே சான்றாகக் கொண்டு ஆண்டாள் வாழ்ந்த கால நிர்ணயத்தை ஆராய்ச்சி வல்லுநர்கள் செய்துள்ளார்கள்.

'பொல்லா அரக்கனை' என்பது இராவணனைக் குறிப்பிட்டது எனக் கண்டோம். ஆயின் இங்கே ஓர் அருமையான உட்கிடக்கை மறைந்துள்ளதையும் காணலாம். இராவணன் பொல்லா அரக்கன் என்றால், வேறு யாரோ நல்ல அரக்கனாக இருந்திருக்கவேண்டும்

அல்லவா? அரக்கனாகப் பிறந்தும் அந்தணனாகவே வாழ்ந்த விபீடணன் நல்ல அரக்கன் அன்றோ! நிந்தனை நறவும் நெறியில் ஊன்களும் இல்லாமல் வந்தனை நீதி, தருமம், தானம், இவையே வாழ்வாகக் கொண்ட விபீடணன் நல்ல அரக்கன் ஆவான். அவனை இவ்வாறு நினைவு கூர்கிறார் உரைகாரர் பெரிய வாச்சான் பிள்ளை.

வெளியே உள்ளவர்கள் முடிவாக வேண்டுவதெல்லாம், இதுதான்.

'போது அரிக்கண்ணை உடைய பெண்ணே! நீ குள்ளக் குளிரக் குடைந்து நீராட வரவேண்டும். அப்படி வருவதிலும் ஒரு சிறப்பு உள்ளது. கண்ணனை நீ மட்டுமே அனுபவிக்க வேண்டும் என்கிற தனிப்பட்ட கள்ள மனப்பான்மையை விட்டு விடு. எங்களுடன் சேர்ந்துகொண்டு எல்லோருமாய்க் கலந்தே இறை அனுபவம் பெற வேண்டும். அதற்கு உன் தன்னலமான கள்ளத்தைத் தவிர்ந்தே ஆக வேண்டும். 'கள்ளம் தவிர்ந்து கல!'

இவ்வாறு பேசும் பெண்களின் பாசுரத்தை நாமும் வாய் விட்டுப் பாடுவோம்.

*"புள்ளின் வாய்கீண்டானைப் பொல்லா வரக்கனைக்*
*கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்*
*பிள்ளைகள் எல்லாரும் பாவைக்களம் புக்கார்;*
*வெள்ளி எழுந்து வியாழ முறங்கிற்று*
*புள்ளும் சிலம்பினகான் போதரிக் கண்ணினாய்!*
*குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே*
*பள்ளிக் கிடத்தியோ பாவாய்! நீ நன்னாளால்*
*கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்!"*

**வாய்ப் பேச்சுப் போதுமா?**

முந்துற முன்னம் தானே தூங்கி எழுந்து மற்றவர்களைத் துயில் எழுப்ப வருவதாகக் கூறி இருக்கிறாள் ஒரு பெண். ஆனால், தான் கூறியபடி அவள் முதலிலே எழுந்து பிறரை அழைக்க வரவில்லை. பேசியதை மறந்து விட்டுத் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டாள். ஆதலால், மற்றையோர் திரண்டு வந்தும்கூட இவள் மட்டும் வரவில்லை.

வைகறைப் பொழுது! எங்கும் வெளிச்சம் பரவத் தொடங்கி விட்டது. நோன்பிற்குப் புறப்பட்ட மற்றப் பெண்கள் ஒன்று திரண்டு இவள் வீட்டு வாசலுக்கு வந்து விட்டார்கள்.

'அடி வாயாடிப் பெண்ணே!' என்று அவளை இவர்கள் அழைக்கும்படி ஆகிவிட்டதல்லவா! "எங்களை எல்லாம், நீயே வந்து முன்னமேயே எழுப்புவதாக வாய் பேசினாயே! நீ வரவும் இல்லை; மாறாக நாங்கள் உன் வீடு தேடி வந்து விட்டோம்!" என்கிறார்கள்.

*"எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்*
*நங்காய் எழுந்திராய்!"*

"பேசிய பேச்சென்ன! இப்பொழுது நீ ஆழ்ந்திருக்கும் உறக்கம் என்ன! வெட்கமாக இல்லையா உனக்கு? நாக்கு என்ன வேண்டிக் கிடக்கிறது? பொழுது விடிந்துவிட்டது; எழுந்திரு!" என்கிறார்கள்.

உள்ளே படுக்கையில் கிடக்கிற அந்த வாயாடி கேட்கிறாள்: "பொழுது விடிந்துவிட்டதா? அதற்கு ஏதாவது சான்று கூறுவீர்களா?"

"சான்றா கேட்கிறாய்? உங்கள் வீட்டுப் புழக்கடைத் தோட்டத்தில் உள்ள குளத்திலே செங்கழு நீர்ப் பூக்கள் மலர்ந்து

விட்டன தெரியுமா?" என்கிறார்கள். அதற்குப் பதில் பேசுகிறாள் அந்த வாயாடிப் பெண்.

"அப்படி எல்லாம் இருக்காது. நீங்கள் என் மாளிகைக்கு வந்த மகிழ்ச்சியால் உங்களில் சிலர் கண்கள் மகிழ்ச்சியில் மலர்ந்துள்ளதை நீங்கள் செங்கழு நீர்ப் பூக்கள் மலர்ந்ததாகக் கூறுகிறீர்கள்."

"என்னடீ இப்படிப் பேசுகிறாய்? செங்கழு நீர்ப் பூ மலர்ந்ததை அடையாளம் என்றோம். அதை நீ ஏற்றுக் கொள்ளாவிட்டால், ஆம்பல் பூ மூடியுள்ளதையாவது ஏற்பாயா? அதோ, அங்கே ஆம்பல் பூக்கள் இதழ்கள் மூடிக் குவிந்து விட்டன!" என்றார்கள்.

"அதையும் ஏற்றுக்கொள்ள மாட்டேன். நான் பேசாமல் வாய் மூடிக் கிடந்ததைக் கண்டதும், அதையே ஆம்பலாக எண்ணிப் பிரமிக்கிறீர்கள்!" என்றாள் அந்தப் பெண்.

"போதும் போதும் உன் பேச்சு! வேறு ஓர் அடையாளம் கூறுகிறோம், கேள். பொழுது விடிந்தது என்பதால் தவசிகள் தங்கள் கோவில்களில் சங்கூதச் சென்றுவிட்டார்கள். செங்கல் பொடி தடவிய காஷாயம் அணிந்துள்ள அத் துறவிகள் நல்ல வெண் பற்களை உடையவர்கள். தங்கள் தங்கள் கோவில்களுக்கு இத் துறவிகள் சங்கொலி முழக்கம் செய்வதற்குச் செல்வது பொழுது விடிந்ததற்கு அடையாளம்தானே!" என்று கேட்டனர்.

"நாங்கள் சங்கு சங்கரம் ஏந்திய அகன்ற கைகள் உடைய திருமாலைப் பாடிப் பரவச் செல்கிறோம். தாமரைக் கண்களை உடைய அவனைத் தோத்திரம் செய்யப் புறப்பட்டு விட்டோம். நீயும் வா!" என்று அழைக்கிறார்கள்.

"நாணாதாய்! நாவுடையாய்!" என்று அந்தப் பெண்ணைக் குத்தலாகப் பேசிய இவர்களே, 'நங்காய்' என்றும் புகழ்ந்து

அழைக்கிறார்கள். அவளிடத்தே இவர்களுக்கு இருந்த தளராத பிணைப்பும், உறுதியான தோழமையும் தெரிய வருகின்றன. இதுவே பாசுரம்.

*"உங்கள் புழக்கடைத் தோட்டத்து வாவியுள்*
*செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்*
*செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்*
*தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்*
*எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்*
*நங்காய் எழுந்திராய் நாணாதாய் நாவுடையாய்*
*சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்*
*பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய்!"*

**நானேதான் ஆயிடுக :**

'பங்கயக் கண்ணானைப் பாடலோர் எம்பாவாய்' என்று பாடிக் கொண்டு போகிற பெண்களின் இசை அந்தப் பெண் காதில் விழுந்து விடுகிறது. இவள் எல்லாப் பெண்களும் தன்னை வந்து எழுப்பட்டும் என்று படுக்கையை விட்டு எழுந்திராமல் படுத்துக் கொண்டிருக்கிறாள். ஆனாலும் கண்ணனிடத்தே உள்ளத்தைப் பறிகொடுத்திருக்கிற இவள் அவர்கள் பாடலின் கடைசி அடியைக் கேட்டதும் உருகி விட்டாள். தானும் தொடர்ந்து அந்த அடியை மெல்ல முணுமுணுத்தவாறே பாடுகிறாள்.

அவள் குரல் மிக மிக இனியதாக இருக்கிறது. படுத்தவாறே பாடிக் கொண்டிருந்த இவள் இசையைக் கேட்ட வெளியே நின்றவர்கள், அதில் தங்களை இழந்து விடுகிறார்கள். இவள் குரலையும், இசையையும் பாராட்டி, இவளுடன் பேச வேண்டும் என்று அவர்களுக்குத் தோந்றுகிறது. 'அடி இளங்கிளியே!' என்று அழைக்கிறார்கள். இவளுக்கு அவர்கள் தன்னைக் கிளி என்று

அழைத்தது சரியாகப் புரியவில்லை. 'ஒரு சமயம் இவர்கள் என்னைக் கேலி செய்கிறார்களோ! இளங்கிளியே என்று கூப்பிடுகிறார்களே!' என்ற ஐயம் அவள் மனத்தே ஓடுகிறது. ஆகவே, எந்த வகையிலும் பதில் பேசாமல் இருந்து விடுகிறாள். புகழ்ச்சியா இகழ்ச்சியா என்று தெரியாத அளவில் மௌனம்தானே தக்க பதில்!

அவர்கள் இவள் பதில் பேசாததை எண்ணி, 'இன்னம் நீ உறங்குகிறாயா?' என்று கேட்கிறார்கள். 'மிகவும் இனிமையாகப் பாடிக் கொண்டிருந்ததைக் கேட்டோம். 'எல்லே! இளங்கிளியே!' என்று அன்பு ஒழுக வேறு அழைத்திருக்கிறோம். இருந்தும் இவள் வாய் திறந்து பதில் பேசவில்லையே!' - இவ்வாறு அவர்கள் எண்ணுகிறார்கள்.

இதற்குள் இந்த இளங்கிளியும் பதில் உரைத்து விடுகிறாள். 'சில்லென்றழையேன்மின்! நங்கைமீர் போதருகின்றேன்!' "இதோ எழுந்து வருகிறேனே! அதற்குள்ளே ஏன் சிலுசிலுவென்று கூப்பாடு போடுகிறீர்கள்? நீங்கள்தான் நல்ல நங்கைகள் என்று தெரியுமே!" என்று கிளி மொழியாள் சிறிது கோபமாகப் பேசி விடுகிறாள். 'நங்கைமீர்' என்று இவள் அழைத்ததை வெளியே நின்றவர்கள் தங்களைக் குத்தலாகக் கூப்பிட்டதாக எடுத்துக் கொண்டு விட்டனர்.

"எங்களுக்குத்தான் தெரியுமே! - நீ பெரிய வாயாடி என்பது! பழைய காலத்தே கூடத் தெரியுமே! நீ இட்டுக் கட்டிப் பேசுவதில் சமர்த்து ஆயிற்றே!" என்று அவர்கள் பதில் சூடாக விழுகிறது.

உண்மையிலேயே பாராட்டுகிறார்களா என்பது சந்தேகமாகப் பட்டு விடுகிறது, கிளி மொழியாளுக்கு. தானும் சுடச் சுடப் பதில் பேசிவிட வேண்டும் என்கிற ஆத்திரம் மேலிடவும் அவள்,

'வல்லீர்கள் நீங்களே!' என்று பளார் என்று அடித்தது போலே பதில் கூறுகிறாள். 'நீங்கள் மிகவும் சாமர்த்தியசாலிகள் அம்மா! நானா?' என்கிற ஒருவித அகம்பாவம் இவள் பேச்சில் தெரிகிறது.

இதைக் கேட்கும் வெளியே உள்ளவர்கள் தன்னைப்பற்றி என்ன எண்ணுவார்களோ என்கிற பயமும் அவளுக்குள்ளேயே பொறி போலத் தட்டி விடுகிறது. தன்னுடைய செருக்கு மிகுந்த சூடான பேச்சைத் தானே உணர்ந்து கொண்டதால் மனம் வருந்துகிறாள், அந்தப் பெண். தான் சிறந்த குணம் படைத்திருந்தும் தன்னை ஒத்த அந்தக் பக்த மணிகளிடத்தே கடுஞ்சொல் கூறி விட்டதை எண்ணிக் கழிவிரக்கம் கொண்டாள் போலும்! உடனேயே தன் பேச்சை மாற்றிப் பணிவு தோன்ற, "நானே சாமர்த்தியசாலி என்று நீங்கள் கூறியபடிதான் இருக்கட்டுமே! அதனால் என்ன?" என்று அடக்கமாகப் பேசுகிறாள்.

'நானேதான் ஆயிடுக! - இதுதான் அவள் தொடர்ந்து கூறிய பேச்சு. இதிலே முன்பு கூறிய செருக்கு மறைந்து பணிவு பளிச்சிடுகிறது.

இவளது பதிலின் பணிவை உணர்ந்த அந்தப் பெண்கள் தாங்களும் தவறு செய்ததை உணர்ந்துவிட்டார்கள். 'பணிவாகப் பேசுவதல்லவா நல்ல பக்தர்கள் அடையாளம்! என்ன காரியம் செய்து விட்டோம்?' என்று உணர்ந்த அவர்கள், 'ஒல்லை நீ போதாய்! உனக்கென்ன வேறுடையை?' என்று கூறுகிறார்கள். அதாவது, "சடக்கென வா, அம்மா! நீ மட்டும் தனியாக, வேறாகக் கண்ணன் அனுபவத்தில் ஈடுபடலாம்?" என்பது அவர்கள் கூறியது.

கிளி மொழியாளும் பணிவே தன் பக்தியின் இலக்கணம் என்பதை மேலும் அறுதியிட்டு விடுகிறாள். "தோழிகளே! உங்களுடன் சேர்ந்து நோன்பு நோற்க வருவதுதான் எனக்குச்

சிறந்தது. நானும் வருகிறேன். எல்லோரும் வந்து விட்டார்களா?" என்று கேட்கிறாள்.

'எல்லோரும் வந்து விட்டனர். நீ வேண்டுமென்றால் வந்து எண்ணிப் பார்த்துக் கொள்!' என்கின்றனர் அவர்கள். ஆக, இப்பொழுது கிளிமொழியாளும் அந்தப் பெண்களும் நிகழ்த்திய உரையாடல் முடிந்து விடுகிறது. அனைவரும் ஒன்று சேர்ந்து கண்ணனின் வீரச் செயல்களைப் பாடத் தொடங்குகின்றனர். 'அந்தக் கண்ணன் குவலயாபீடம் என்னும் யானையைக் கொன்றவன்; மாற்றார்களாக வந்த அசுரர்களைச் சாடி அழித்தவன். அந்த மாயப் பிரானைப் பாடுவோம்!' என்று ஒரே குரலில் இசையில் பாடுகிறார்கள். இதோ கேளுங்கள் :-

*"எல்லே! இளங்கிளியே! இன்ன முறங்குதியோ?*
*சில்லென் றழையேன்மின் நங்கைமீர் போதருகின்றேன்*
*வல்லை உன்கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்*
*வல்லீர்கள் நீங்களே; நானேதான் ஆயிடுக !*
*ஒல்லை நீபோதாய்; உனக்கென்ன வேறுடையை?*
*எல்லாரும் போந்தாரோ? போந்தார்*
*போந்தெண்ணிக்கொள்*
*வல்லானை கொன்றானை மாற்றானை மாற்றழிக்க*
*வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்!"*

மேற்கண்ட பாசுரம் திருப்பாவையின் மையப் பாசுரம் ஆகிறது. வைணவ அடியார்களின் 'ஈட்டம் கண்டிடக்கூடு மேல் அது காணும் கண் பயன் ஆவதே' என்னும் அடியார் பெருமை பேசப்படுகிற இறுதிப் பாசுரம் இது. ஆறாவது பாசுரம் தொடங்கி இந்தப் பதினைந்தாவது பாசுரம் ஈறாகப் பேசப்பட்ட பத்துப் பெண்களும் பத்து அடியார்களாகக் கருதப்படுகிறார்கள்.

இறைவனின் அடியார்களின் சிறப்பே, இறைவன் சிறப்பை விடவும் மேலானது என்னும் விழுமிய கொள்கை வைணவ

நெறியில் சாலச் சிறந்தது ஆகும். திருப்பாவை நூலில் இறைவனின் பெருமையும் அவன் திருவடிக் கீழ்க் குற்றேவலாகிய தொண்டும் எடுத்துக் கொண்டுள்ள தலைப்புகள் ஆயினும், இறைவன் அடியார்களுக்கு ஆட்படுதலே மேலானது என்பதும் குறிப்பிடப்படுகிறது. ஆகவேதான், இந்தப் பாசுரத்தைத் திருப்பாவையின் சாரமாகவே ஆசாரியர்கள் எடுத்துக்காட்டி விதந்து பேசி உள்ளார்கள். இப்பாசுரத்தின் உட்பொருள் அடியார்களுக்கு ஆட்படும் அருமைத் தன்மையே ஆகும்.

'எல்லே இளங்கிளியே!' என்பதால் பாகவதர்களைக் காண்பதும், அவர்கள் பேசுவதைக் கேட்பதும் விரும்பி வேண்டத் தக்கவை எனலாம். 'இன்னம் உறங்குதியோ?' என்பதால் அடியார்களுடன் சேராமல் இருப்பது கூடாது என்றாகிறது. 'சில்லென்றழையேன்மின்' என்னும் தொடர் வைணவ அடியார்களாகிய பாகவதர்கள் தங்களுக்குள்ளும் வெளியேயும் கடுமையான வாசகங்களைப் பயன்படுத்தலாகாது என்பதைக் குறிக்கிறது. 'நங்கைமீர்!' என்னும் கௌரவம் மிகுந்த சொல், பாகவதர்களிடம் கௌரவமான பேச்சே பயன்படுத்தவேண்டும் என்றாகிறது. 'வல்லை உன் கட்டுரைகள்' என்றதால், பாகவத அடியார்கள் ஒரே சமயம் உரிமையால் கடிந்து பேசலாம் என்பதாகிறது.

'நானேதான் ஆயிடுக' என்பது, பரமவைணவ நிலையைச் சுட்டுகிறது. பிறர் குற்றங்களைத் தம் தலையிலே ஏற்பர் வைணவர் என்பதாம். 'ஒல்லை நீ போதாய்' என்பதால்; நொடி நேரமும் கூட அடியார்கள் தங்களுக்குள் பிரியமாட்டார்கள் என்றாகிறது. 'உனக்கென்ன வேறுடையை?' என்பது, வைணவர்கள் தன்னலம் கொண்டு தனியாக எந்த நல்லதையும் அனுபவிக்க மாட்டார்கள்

என்பதாம். 'எல்லோரும் போந்தார்' என்பதால், ஸ்ரீ வைஷ்ணவர்கள் தங்களில் ஒருவர் குறைந்தாலும், அவரையும் விடாமலே சேர்த்துக் கொள்வர் என்பதாம்.

எனவே, இப்பாசுரம் பாகவத பக்தி பற்றிய திருப்பாவை ஆகிறது. இப்பாசுரத்தில் பெண்களின் உரையாடல் வெளிப்படையாகவே அமைந்துள்ளது. மற்றைய முந்தைய ஒன்பது பாசுரங்களிலும் உரையாடலை ஓரளவு ஊகித்துணர வேண்டி இருந்தது. இதன்கண், கிளி மொழியாளும் மற்றைய பெண்களும் மாற்றி மாற்றி உரையாடுவது ஆறு அடிகளிலே காட்டப்படுகிறது. ஆகவேதான் "திருப்பாவை ஆகிறது இப்பாட்டு" எனப் போற்றப்பட்டது.

# வெளி மண்டபம்

## நேசக் கதவைத் திற

ஆண்டாளும் அவளது தோழியரும் திரண்டு இனி, நந்தகோபன் திருமாளிகைக்குச் செல்கிறார்கள். அந்த அரண்மனையின் முன் வாசலிலே ஒரு வாசல் காப்பானும். உள்ளே தோரண வாசலிலே இன்னொரு காப்பானும் நிற்கின்றனர். அவர்களுடைய அனுமதி இல்லாதபடி இப்பெண்களால் உள்ளே புக இயலாது. பின்வரும்ஏழு பாடல்களில் இப்பெண்கள், வாயில் காப்பாளர்களையும், நந்தகோபரையும், யசோதை, பலராமன் நப்பின்னை, பிராட்டி ஆகியோரையும் முன்னிட்டுக் கொண்டு கண்ணனை எழுப்பினபடியை, ஆண்டாள் விவரிக்கிறாள்.

'செய்யாதன செய்யோம்' என்று முன்பே கூறி இருப்பதால், பாகவதர்களை முன்னிட்டே இறைவனை அடைய வேண்டும் என்னும் நெறியை இங்குப் பின்பற்றுகிறாள். 'வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து' என்று நம்மாழ்வார் கூறியதன் பொருளும் இதுவன்றோ! மேலும் பாஞ்சராத்திர ஆகமத்திலும் எம்பெருமான் கோவிலுக்குள் நுழையும்பொழுது வாயில் காப்பாளர்களை முன்னிட்டு அவர்கள் இசைவு பெற்றே இறைவனை வணங்கச் செல்ல வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. அதனை ஒட்டியே இப்பாசுரமும் வாயில்காப்பானின் இசைவையே வேண்டுவதாக அமைகிறது.

நந்தகோபன் அரண்மனையின் தொடக்கத்திலேயே அவனுடைய கொடி உயர்த்தப்பட்டிருக்கிறதாம். கோவில்களில்

கொடி உயர்த்தப்பட்டிருக்கும் கம்பத்தின் அருகே சென்று முதலில் அதை வணங்கிவிட்டே, உள்ளே செல்ல வேண்டும் என்னும் விதிமுறை உண்டு. அது போலவே நந்தன் அரண்மனையிலும் அவன் கொடியும் தோரணமும் அணி செய்கின்றன. மதில் கதவு மணிகள் பதிக்கப்பட்டதாக அழகுடன் விளங்குகிறது.

ஆண்டாளும் தோழியரும் அங்கே நந்தகோபன் அரண்மனையில் முதல் வாயில் காப்பானை அன்புடன் அழைக்கின்றனர். "அப்பா! வாயில் காவலனே! நீ அல்லவா இந்த அரண்மனையைக் காத்து வருகிற நாயகன்!" என்னும் பொருளிலே அன்புடன் வேண்டுகிறார்கள்.

'நாயகனாய் நீ இருப்பதால்தான் நந்தகோபன் சுகமாக வாழ்கிறான்' என்று அவனுக்கு மகிழ்ச்சி தோன்றப் பேசுகிறார்கள்.

***"நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய கோயில் காப்பானே!"***

இதைக் கேட்டவுடன், மிக்க மகிழ்ந்து அவன், 'பெண்களே! நீங்கள் உள்ளே செல்லலாம்! என்று வாயில் கதவைத் திறந்து விட்டு விடுகிறான். 'நந்தகோபன் நாயகனாய் எவர்க்கும் தலைவனாய் இருப்பவன். அத்தகைய நாயகனின் அரண்மனை வாயிலைக் காப்பவனே!' என்றும் பொருள்படும்.

அங்கிருந்து அப்பெண்கள் தோரண வாயிலுக்கு வந்து நிற்கிறார்கள். அங்கே நிற்கிற வாயிற் காவலனையும் முன்பு போலவே வேண்டுகோள் விடுத்துக் கதவைத் திறந்து விடுமாறு கேட்கிறார்கள். 'தோரண வாயிற் காப்பானே! மணிக்கதவம் தாள் திறவாய்!' என்று வேண்டுகிறார்கள்.

அவனா உடனே திறந்து விடுபவன்! அவன் இவர்களைச் சிறிது சந்தேகப்படுகிறான். "நீங்கள் யார்? ஏன் இங்கே வந்தீர்கள்?" என்று அவன் கேட்கிறான்.

"நாங்கள் ஆயர்ச் சிறுமியர். நேற்றே கண்ணன் பறை தருவதாகக் கருணையுடன் வாக்களித்திருக்கிறான். ஆகவே, வந்தோம்!" என்று கூறுகிறார்கள்.

'அவர்கள் ஏதாவது ஆபத்து விளைவிக்கலாகாதே! மேலும் புறச் சுத்தம் அகச் சுத்தத்துடன் வந்திருக்கிறார்களா?' என்கிற சந்தேகமும் அவனைப் பிடித்துக் கொள்கிறது. ஆகவே, மறுபடியும் அவர்களுடைய தன்மை பற்றிக் கேட்டான் போலும்! அதற்கும் அவர்கள் விடை தருகிறார்கள்.

"நாங்கள் அகத் தூய்மை, புறத் தூய்மை ஆகிய இரண்டும் கொண்டே வந்துள்ளோம். நாங்கள் வந்துள்ள காரணமும் எங்கள் நாயகன் கண்ணனைத் துயில் எழுப்பவேதான்!" என்கிறார்கள்.

இதனைக் கேட்ட காவலன் பாதிச் சம்மதமும் மீதி இல்லாதது போலவும் தலை சாய்த்தான் போல் தோன்றுகிறது, அவர்களுக்கு. தங்கள் காரியம் கைகூட வேண்டாமா? அவர்கள் மறுபடியும் வேண்டுகிறார்கள்.

'வாயால் முன்ன முன்னம் மாற்றாதே அம்மா!'

'அம்மா!' என்கிற அருமையான பாசம் மிகுந்த சொல்லை வீசி அவனைத் தங்கள் வலையில் விழச் செய்கிறார்கள். 'தாய் போன்றவன் ஆயிற்றே நீ! எங்களுக்கு மறுப்புக் கூற மாட்டாயே! முதல் முதலாக உன்னுடைய வாயாலே மறுத்துக் கூறி விடாதே!' என்று வேண்டிக் கொள்கிறார்கள். அவனுக்கும் மனம் இரங்கி விடுகிறது.

'நேய நிலைக் கதவம் நீக்கு!' என்று தங்கள் விண்ணப்பத்தை முடிக்கிறார்கள். 'ஒன்றோடொன்று பொருந்தி இருக்கும் இந்தக் கதவுகளைத் திற!' என்று வெளிப் பொருளாகத் தெரிகிறது.

ஆனால், அவர்கள் வேண்டுவது வெறும் மரக் கதவைத் திறக்கக் கேட்கும் வேண்டுதல் அல்ல. அதாவது, அவர்கள் மீது பரிவுற்றுள்ள பாங்கான இசைவு என்னும் பொருளிலே கதவு உருவகம் ஆகிறது.

நெஞ்சக் கதவல்லவா திறக்க வேண்டும்! நெஞ்சக் கதவு திறந்தால் அதனுள்ளே இறைவன் புகுந்து விடுகிறான். இந்த அற்புதமான இறை உணர்வை இங்கே சிறுமியர் பேச்சிலே காண்கிறோம்.

வாயிற் காப்பானும் கதவைத் திறந்து உள்ளே விடுகிறான். அவர்களும் உள்ளே சென்று விடுகிறார்கள். இக்காட்சியைக் கவிதையாகக் காண்கிறோம், இதோ!

*"நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய*
*கோயில் காப்பானே! கொடித்தோன்றும் தோரண*
*வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்*
*ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை*
*மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்*
*தூயோமாய் வந்தோம் துயிலெழப்பாடுவான்*
*வாயால் முன்னமுன்னம் மாற்றாதே அம்மா! நீ*
*நேய நிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய்!"*

## தம்பியும் தமையனும்

வாயிற் காப்போரின் இசைவு பெற்ற பிறகு, அப்பெண்கள் கண்ணனைத் துயில் எழுப்புவதற்கு முன், அவன் தந்தை தாயாரையும் தமையனையும் எழுப்புகிறார்கள்.

முதற்பகுதியில் நந்தகோபன் படுக்கை தென்படுகிறது, அவனைத் துயில் எழுப்ப வரும் பெண்கள் அவன் கொடைச் சிறப்பை எடுத்த எடுப்பில் புகழ்ந்து பேசுகிறார்கள். "உன்னுடைய

அரண்மனையில் ஆடைகள், உணவு, பானங்கள் ஆகியவை கணக்கில்லாமல் அங்கங்கே எல்லோருக்கும் வழங்கப்படுமே! நீ அல்லவா எங்களுக்குப் பெருமான்! எங்கள் பெருமானான கண்ணனுக்கும் பெருமான் அன்றோ! நந்தகோபாலா, எழுந்திரு!" என்று திருப்பள்ளி எழுச்சி பாடுகிறார்கள்.

*"அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும்*
*எம்பெருமான் நந்தகோபாலா! எழுந்திராய்"*

ஆடைகள் வழங்கப்படுகிற இடத்திலே ஆடைகளே வழங்கப் படுகின்றனவாம் ; அது போலவே சோறும் பானங்களும் கொடுக்கப்படும் இடங்களும் அப்படியே விளங்குகின்றன. இவ்வாறு கொடைவள்ளலாகத் திகழும் நந்தகோபனை 'எம் பெருமான்' என்பது மிகவும் பொருத்தம்தானே!

மேலே யசோதையின் கட்டிலைக் காண்கிறார்கள். கொம்பு போன்ற ஆய்ப் பெண்களுக்குக் கொழுந்து போன்றவளாம் யசோதை. ஒரு கொடியின் வேரில் தண்ணீர் இல்லை என்றால் வாட்டம் தெளிவாகத் தெரியும் அதன் பகுதி கொழுந்துதான். அது போலவே, ஆய்ப் பெண்களுக்கு ஏதாவது தீமை என்றால், இந்த யசோதை முகத்திலே வாட்டமாகத் தெரிந்து விடுமாம். ஆகவேதான், இவளைக் கொழுந்து என்கிறாள் ஆண்டாள். அவள் கண்ணனை வளர்க்கும் தாயல்லவா! நந்தகோபனை 'எம் பெருமான்' என்று அழைத்ததற்கு ஏற்ப, இவளை அப்பெண்கள் 'எம்பெருமாட்டி' என்று கூப்பிடுகிறார்கள். 'யசோதாய் அறிவுறாய்' என்று அவளையும் துயில் எழுப்புகிறார்கள்.

*"கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே குல விளக்கே!*
*எம்பெருமாட்டி யசோதாய் அறிவுறாய்!"*

அடுத்துக் கண்ணன் படுக்கையைக் காண்கிறார்கள் இப்பெண்கள். அந்தக் கண்ணன் யார் என்னும் நினைவு அவர்களுக்குத் தோன்றியதும், அவனுடைய உலகளந்த மாயமே

கண் முன்னே நிற்கிறது. "ஆகாயத்தை ஊடறுத்து ஓங்கி உலகளந்த தேவாதி தேவன் அன்றோ அவன்!" என்கிறார்கள்.

*"அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த*
*உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய்!"*

என்று கண்ணனைத் துயில் எழுப்புகிறார்கள்.

கண்ணன் எழுந்து வரவில்லை. ஆய்ப் பெண்களுக்கு அவன் பதில் பேசாததும், எழுந்து வராததும் ஏன் என்பது உடனேயே மனத்திலே புலப்பட்டு விடுகிறது. அவன் எங்குப் போனாலும், என்ன செய்தாலும், தன் அண்ணன் பலராமன் அனுமதி இன்று இயங்க மாட்டான். மேலும் அக் குடும்பத்திலே அவன் அல்லவா மூத்தவன்! 'மூத்த நம்பி' என்ற பெயர் பெற்றவன் ஆயிற்றே! ஆகவே, அவனையும் துயில் எழுப்பி அவனை முன்னிட்டுக் கொண்டுதான் கண்ணனைப் பெற இயலும் என்று முடிவு செய்கிறார்கள்.

காலிலே வீரக்கழல் அணிந்துள்ள செல்வன் அந்தப் பலராமன். அவனை விளித்து, 'பலராமா! நீயும் உன் தம்பியும் உறங்காமல் எழுந்திருங்கள்!' என்று இருவருக்கும் சேர்த்தே பள்ளி எழுச்சி பாடுகிறார்கள்.

இவ்வாறு நான்கு பேரையும் எழுப்பும் அப்பாசுரத்தைப் பாடுவோம்.

*"அம்பரமே தண்ணீரே சோறே அறம்செய்யும்*
*எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்!*
*கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே குல விளக்கே!*
*எம்பெருமாட்டி யசோதாய் அறிவுறாய்!*
*அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த*
*உம்பர் கோமானே உறங்கா தெழுந்திராய்!*
*செம்பொன் கழலடிச் செல்வா பல தேவா!*
*உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்!"*

**வளை குலுங்க வா**

வாசல் காப்பானையும், நந்த கோபனையும் நம்பி மூத்த பிரான் பலதேவனையும், யசோதையையும், எழுப்பி ஆயிற்று. 'அவர்கள் அனுமதி பெற்றதால் கண்ணன் வந்து விடுவான் என்று எண்ணுவது நடக்காதது என்பதைப் பெண்கள் நன்றாகவே தெரிந்தவர்கள்' இவர்கள் அழைப்பை ஏற்றுக் கண்ணன் நோன்பு நாயகனாக வர வேண்டுமானால், அவன் துணைவி நப்பின்னையின் இசைவல்லவா இன்றியமையாதது! இந்தப் பெண்கள், கண்ணன் தேவியான நப்பின்னையை முன்னிட்டுக் கொண்டே, அவள் இசைவின் மீதேயே கண்ணனை அவளுடனேயே அடைய வேண்டும் என்னும் விழுமிய கொள்கை உடையவர்கள் ஆவர்.

பிராட்டியை முன்னிட்டே - அதாவது, புருஷகாரமாக் கொண்டே பகவானைச் சரணம் அடைய வேண்டும் என்பது வைணவ சித்தாந்தம். அதன்படியே இப் பெண்களும் இப் பாசுரத்தில் நப்பின்னைப் பிராட்டியைத் துயில் எழுப்புகிறார்கள்.

நப்பின்னையை அழைக்கிற பொழுதே அவள் மனத்துக்கு உகப்பாக இருக்குமாறு இப்பெண்கள் கூப்பிடுகிறார்கள். நப்பின்னை தன் பிறந்த வீட்டுப் பெருமை பற்றிப் பேசவோ, கேட்கவோ கூசுவாளாம்; அதை விரும்ப மாட்டாள். ஆனால் தன் புகுந்த வீட்டுப் பெருமை பற்றிப் பேசத் தொடங்கிவிட்டால், அடங்காத ஆனந்தம் அடைவாளாம்; அதிலும் தன் மாமனின் வலிமை, கொடை, வெற்றி இவை பற்றிக் கூறினால், மகிழ்ச்சியிலே திளைத்து விடுவாள். இதை நன்கு அறிந்த பெண்கள் நப்பின்னையை விளியிட்டு அழைக்கிற பொழுதே, 'நந்தகோபன் மருமகளே!' என்று அழைக்கிறார்கள். அந்த நந்தகோபன் மிகுந்த வலிமை உடையவன்; யானை பலமும், புறமுதுகு காட்டாத தோள்

ஆற்றலும் மிகுந்தவனாம். ஆகவே, இவற்றைச் சுட்டிப் பேசுகிறார்கள் அப்பெண்கள்.

*"உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்*
*நந்த கோபாலன் மருமகளே நப்பின்னாய்!"*

என்று அழைத்தனர்.

அவள் கூந்தல் மணமோ எங்கும் பரந்து வீசுகிறது. அதைக் குறிப்பிட்டு நப்பின்னையை அழைத்துக் கதவைத் திறக்க வேண்டுகிறார்கள். 'கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்!' என்றனர்.

"எல்லாப் பக்கங்களிலும் கோழிகள் எழுந்து ஒன்று பட்டுக் கூவுகின்ற காலை நேரம் புலர்ந்து விட்டது. மாதவிப் பூப் பந்தலில் குயில்கள் அமர்ந்தபடி பலவிதமாய்க் கூவுகின்றன. பொழுது விடிந்து விட்டதம்மா! நப்பின்னையே, எழுந்துவா!" என்று அழைக்கிறார்கள்.

"நாங்கள் எதற்காக இங்கே வந்திருக்கிறோம், தெரியுமா? நப்பின்னாய்! உன் மணாளன் கண்ணன் புகழ் பாடவே வந்துள்ளோம். உனக்கு அவன் கணவன் ஆயிற்றே! அவன் அடி பணியவே வந்தோம்!" என்கிறார்கள்.

நப்பின்னையும் கண்ணனும் இரவெல்லாம் பந்து விளையாடிக் களைத்தனர் போலும்! பந்தைப் போட்டுப் போட்டு விளையாடிக் கடைசியில் படுக்கப் போகும் பொழுதுகூட நப்பின்னை தன் கையிலே பந்தைத் தாங்கிக் கொண்டே உறங்குகிறாளாம். படுக்கையிலே கண்ணன் பக்கத்தே படுத்திருக்கிறான். நப்பின்னையின் ஒரு கை கண்ணன் மீது கிடக்க, மறு கை அவர்கள் விளையாடிய பந்தைப் பற்றி இருக்கிறது. இப்படி ஓர் அற்புதமான காட்சியை ஓவியமாகக் காட்டுகிறாள், ஆண்டாள்.

'பந்தார் விரலி' என்னும் அருமையான தொடர் பொருள் பொதிந்த தத்துவம் ஒன்றினை விளக்குவதாக அமைகிறது.

இறைவனான திருமாலுக்கும் ஜீவர்களான ஆத்மாக்களுக்கும் இடையே திருமகளாகிய தாயே இணைப்புப் பாலமாக இருப்பவள். இறைவன் தந்தை; ஆத்மா புதல்வன்; இறைவியாகிய திருமகளே தாய். குழந்தையாகிய ஆத்மாவிடத்தே தாயாகிய திருமகள் காட்டும் அருள் இறைவனிடத்தே அதனைச் சேர்த்துவிட உதவுகிறது. ஆகவே, ஒருபுறம் உயிர்க் கூட்டங்கள்; மறுபுறம் தன் மணாளனான இறைவன்; நடுவே தான் என்ற முறையிலே தன் இரு கரங்களிலும் அவர்களைப் பற்றிக் கொள்கிறாளாம்.

இங்கே 'பந்து' உயிர்க் கூட்டத்தைக் குறிக்கிறது. கண்ணன் இறைவன். நப்பின்னை தன் ஒரு கரத்தே ஆத்மாக்களின் கூட்டமாகிய பந்தைப் பிடித்துக் கொண்டே, மறு கரத்தில் உலக நாதனான தன் கணவனைப் பற்றிக் கொள்கிறாளாம்.

*"சேதனன் ஒரு கையில் ஈசுவரன் மறுகையில்*
*விபூதி ஒரு கையில் விபூதிமான் மறுகையில்*
*நாரம் ஒருகையில் நாராயணன் மறுகையில்*
*சேஷி ஒருகையில் சேஷன் மறு கையில்!"*

என்று இவ்வாறெல்லாம் ஆசாரியர்கள் இதற்கு விளக்கங்கள் அருளி உள்ளார்கள்.

நப்பின்னையை அழைக்கும் இந்தப் பெண்கள் மேலே பேசுகிறார்கள். "அம்மா! நீ வெளியே வந்து கதவைத் திறந்து எங்களை அழைத்துக் கொண்டு கண்ணனிடத்தே அறிமுகம் செய்ய வேண்டும். சிவந்த தாமரை போன்ற உன் திருக்கரங்களில் வளையல்களின் ஒலி எங்கும் முழங்க வந்து கதவைத் திறக்கவேண்டும்!" என்கிறார்கள்.

*"செந்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப*
*வந்து திறவாய் மகிழந்தேலோ ரெம்பாவாய்!"*

என்று வேண்டுகிறார்கள்.

"நீ எழுந்து நடந்து வருகிற பொழுதேயே, உன் கைகளில் அணியப்பட்ட வளையல்களின் ஓசை கலகலவென்று எங்கும் கேட்கும்!" என்கிறார்கள்.

'வளை குலுங்க நீ வா!' என்று பெண்கள் பாடும் பாட்டில் ஏற்படும் வளை ஓசையைக் கேட்போமா?

*"உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்*
*நந்தகோபாலன் மருமகளே! நப்பின்னாய்!*
*கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்!*
*வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்*
*பந்தல்மேல் பல்காள் குயிலினங்கள் கூவினகான்*
*பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாடச்*
*செந்தாமரைக் கையால் சீரார் வளைஒலிப்ப*
*வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்!"*

இப்பாசுரம் எம்பெருமானார் உகந்த பாசுரம் எனப் பெருமையுடன் பேசப்படுவதாகும். அவர் வாழ்வில் நிகழ்ந்த இப்பாசுரத் தொடர்பான நிகழ்ச்சியைப் பற்றித் தெரிந்து கொள்வோமா?

இராமானுசர் தினமும் இல்லங்கள் தோறும் வாயிலில் நின்றே பிச்சை எடுத்து வயிறு வளர்க்கும் வழக்கத்தை மேற்கொண்டவர் ஆவார். துறவிகள் பிச்சை எடுத்தே அன்றாடம் உண்பது அவர்கள் கடமை ஆகும். இராமானுசரும் அம்முறைப்படியே வீதிகள் தோறும் 'மாதுகரம்' என்னும் பிச்சை எடுக்கச் செல்லுங்கால் திருப்பாவைப் பாசுரங்களை வாய்விட்டு ஓதிக்கொண்டே செல்வார்.

அவ்வாறு ஒரு நாள் நடந்து செல்லுங்கால், தம் ஆசிரியர் பெரிய நம்பி திருமாளிகை வாசல் பக்கம் நிற்கும்படி ஆயிற்று. இல்லக்கதவு மூடப்பட்டிருந்ததால் இராமாநுசர் தம் வழக்கம் போல் திருப்பாவைப் பாசுரங்களை ஓதியபடியே நின்று கொண்டிருந்தார். ஆண்டாளின் திருப்பாவைப் பாசுரங்களில் மெய்மறந்து ஒன்றிக் கலந்து பகவதனுபவத்தில் மூழ்கி விடுவார் அவர்.

அவர் பாடிய பாசுர இசை காதிற் பட்டதும் பெரிய நம்பியின் அருமைத் திருமகள் 'அத்துழாய்' உள்ளே இருந்து கையில் பிச்சை அளிக்க வேண்டிய அமுதுடன் வந்து, கதவைத் திறந்து அவர் முன்னே நின்றாள்.

அத்துழாயைக் கண்களால் கண்டார் இராமாநுசர்! ஆம்; அவருக்கு அத்துழாயாகவே அவள் தென்படவில்லை. அவள் நடந்து வந்த பொழுது கைகளில் அணிந்திருந்த வளையல்கள் ஒலி எழுப்பவும் அந்த ஓசை அவர் நெஞ்சைப் பிணித்தது. அங்கே அவர் முன்னே கண்ட காட்சி நப்பின்னையின் தோற்றம்தான்!

'செந்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப

வந்து திறவாய்' என்று இராமாநுசர் பாசுரம் முடிக்கவும், அத்துழாய் வந்ததும், அவருக்கு நப்பின்னை தரிசனமே கிடைத்தது. அந்தப் பெண் நப்பின்னையாக - ஆண்டாளாக அவருக்குக் காட்சி தந்தாள்!

முற்றும் துறந்த முனிவரான உடையவர் பேரானந்தத்தில் மூழ்கிப்போய் மூர்ச்சித்து, அத்துழாயின் திருவடிகளில் விழுந்து விட்டார்!!

அஞ்சினாள் அத்துழாய்! ஜீயருக்கு என்ன வந்து விட்டதோ என்பது அவள் அச்சம். உள்ளே இருந்த தந்தையின் காதில் விழும்படி உரக்க, 'ஜீயர் என் காலடியில் மூர்ச்சித்து விழுந்துவிட்டார்' என்று பதைபதைத்தவாறே குரல் கொடுத்தாள்.

ஆனால், பெரிய நம்பியோ சிறிதும் பதறவில்லை. மாறாக, 'அஞ்சாதே பெண்ணே! நம் இராமாநுசனுக்கு உந்து மதகளிற்றன் பாசுரம் அனுசந்தானம் ஆகி இருக்கும்!' என்று கூறினாராம். அத்துழாயும் அதன் உண்மையைத் தெரிந்து கொண்டு தெளிந்தாள்.

உடையவராகிய ஜீயர் தம் பக்தி முதிர்ச்சியால் அங்கே நப்பின்னையையே கண் முன்னால் கண்டு வணங்கிய உண்மையை அவள் தெரிந்து கொண்டாள். 'தான் கைவளை குலுங்கச் சென்று கதவைத் திறந்ததும், உடையவரும் 'சீரார் வளை ஒலிப்ப வந்து திறவாய்' என்னும் பாசுர அடியைப் பாடி முடித்ததும், ஒரே நேரத்தில் நேர்ந்ததால் வந்த விளைவல்லவா இது!' என்று அவள் உணர்ந்தாள்.

உடையவரும் தன் பழைய நிலை அடைந்த பின், உள்ளே வந்து, தம் ஆசிரியர் பெரிய நம்பிகள் திருவடி வணங்கி, "அடியேன் இன்று நப்பின்னைப் பிராட்டியைச் சேவிக்கப் பெற்றேன்!' என்றாராம்.

**தத்துவம் அன்று தகவு :**

'செந்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப வந்து திறவாய்' என்று பெண்கள் கூப்பிட்டவுடன் நப்பின்னைப் பிராட்டி எழுந்திருந்தாள். இதைக் கண்ட கண்ணன் தன்னை நம்பி இருக்கிற பெண்களுக்கு இவள் தனக்கு முன்னாலே சென்று உதவினால், அவர்கள் தன்னை என்ன கருதுவார்களோ என்ற எண்ணத்தால் அவளைத் தடுக்க விழைந்தான். இந்தப் பெண்களுக்கு அருள் செய்வதில் நப்பின்னையும் கண்ணனும் ஒருவருக்கொருவர் முந்திச் செல்ல விரும்பினர்.

இப்படியும் ஓர் ஊடல் அந்தத் தெய்வத் தம்பதியர்க்கு ஏற்பட்டது. பிராட்டியும் பெருமானும் அன்பர்களுக்குக் கருணை

காட்டத் தங்களுக்குள் போட்டி இடுகின்றனர். உலகில் காணப்பெறும் இல்லங்களில் சாதாரணத் தாய் தந்தையர் குழந்தைகளைப் பராமரிப்பதில் அன்புப் போட்டி இடுகிறார்களே அது போலவே உலகத் தாய் திருமகளும் தந்தை திருமாலும் அதிசயமான போட்டி இடுகிறார்கள். இதனையே 'குத்து விளக்கு' என்று தொடங்கும் பாசுரம் எடுத்துக் காட்டுகிறது. உலக அனுபவம் ஒரு பக்கமும் வைணவ சமயத் தத்துவம் மறுபக்கமும் பிரதிபலிக்கும் அற்புதமான பாசுரம் இது.

அதோ கண்ணனும் நப்பின்னையும் படுத்துக் கொள்ளும் பெரிய கட்டில் நம் கண் முன்னே தெரிகிறது. யானைக் கொம்புகளையே கால்களாகக் கொண்ட கட்டிலாம் அது. கண்ணன் வதைத்த குவலயா பீடயானையின் கொம்புகளே இங்கே கட்டில் கால்கள்! அரச குல மகளிர் இப்படிக் கட்டில் கால்கள் தங்கள் கணவர் வீரத்தால் கொண்டு வரப்பட்டதாக இருந்தால்தான், பாராட்டுவார்களாம்! நப்பின்னைக்கும் இப்படிப்பட்ட மகிழ்ச்சியும் பெருமிதமும் அந்தக் கட்டில் காலால் உண்டாயிற்று.

அந்தக் கட்டிலிலே விரிக்கப்பட்டுள்ள மெத்தையும் மிகச் சிறப்புடையது. 'மெத்தென்ன பஞ்ச சயனம்' என்பது பாசுர அடி ஆகும். மென்மை, அழகு, குளிர்ச்சி, நறுமணம், வெண்மை ஆகிய ஐந்து குணங்களும் அந்தப் படுக்கையின் இயல்பாக உள்ளவை.

'கோட்டுக் கால் கட்டில்' 'மெத்தென்ன பஞ்ச சயனம்' என்று அருமையான பள்ளியறைக் காட்சியைக் காட்டுகிற ஆண்டாள் அங்கே இவை நமக்குப் பளிச்சென்று தெரிய ஒரு குத்து விளக்கையும் ஏற்றி வைத்துள்ளாள். நப்பின்னையாகிய குத்து விளக்கின் வெளிச்சம் நமக்குத் தெரியக் காட்டும், இன்னொரு குத்து விளக்கும் அங்கே உள்ளது.

வெளியே நின்று கொண்டிருக்கும் பெண்கள் சாளரங்கள் ஊடே இந்தப் பள்ளியறையைக் கண்டதைத் தெரிவிக்கிறார்கள்!

"குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ன பஞ்ச சயனத்தின்மேல் ஏறி"

என்கிறார்கள்.

மலர் மார்பனான கண்ணன் கொத்தாகப் பூச்சூடிய கூந்தலை உடைய நப்பின்னையுடன் இணைந்து படுத்திருக்கிறான். அம்மை அப்பனாக என்றும் இணைந்த திருமகள்-திருமால் நித்திய தத்துவத்தை இப்பெண்கள் வெளியே இருந்து காண்கிறார்கள்.

அந்த நப்பின்னை தன்னுடைய நித்தியமான அழகாலே அந்தப் பெருமான் கண்மனைக் கவர்ந்து விடுகிறாள். கொத்தாகப் பூக்கள் மலர்ந்த கூந்தல் அழகும் மை தீட்டப்பட்ட தன் கண்ணழகும், ஆக இரண்டும் சேர்ந்து, கரிய அழகான அந்தக் கண்ணனைக் கட்டிப் போட்டு விட்டனவாம்!

உலக அழகின் இருப்பிடமாய், உலக அழகுக்கெல்லாம் அழகாக என்றும் விளங்கும் பிராட்டியின் இயல்பை எப்படிச் சாதாரணச் சொற்களிலே வெளியிட இயலும்! அக உணர்வுக்கும் அப்பாலே எங்கோ இழுத்துச் செல்லும் சௌந்தரிய ரஸம் பொங்கித் ததும்பும் வடிவத்தைச் 'சொல்' என்கிற மிகச் சாதாரண ஊடகத்தின் மூலம் காட்ட முடியாதல்லவா! அகிலாண்ட கோடி ஜீவன்களின் தாயாகிய பிராட்டியை வெறும் பெண்ணின் வர்ணனையிலேதான் அடக்கிக் காட்ட வேண்டிய இக்கட்டு மிகச் சிறந்த கவிஞரான ஆண்டாளுக்கும் ஏற்பட்டது!

'கொத்தலர் பூங்குழல் நப்பின்னை!' 'மைத்தடங் கண்ணினாய்' என்பனவற்றில் பிராட்டியின் பேரழகைப் பார்க்கிறோம். கூந்தலில்

சூடுகிற மலரும் கண்ணிலே தீட்டுகிற மையும் இயற்கை அழகிற்கு மேலும் எழில் ஊட்டும் செயற்கை ஒப்பனைகள்தாம் என்றாலும், உலகியல் உவமை அன்றி வேறு எந்த உத்தியைக் கையாள முடியும்? இயல்பாக இயற்கையாக உள்ள நித்திய எழிலை வடித்துக் காட்ட வேறு வழியும் இல்லை. பிராட்டியும் சாதாரண ஒரு நங்கை போலே கொத்துக் கொத்தான மலரைக் கூந்தலிலே சூடி, கரிய மையைக் கண்ணிலே தீட்டிக்கொண்டு, அந்தக் கண்ணனை மோகிக்கச் செய்கிறாள்! அதனாலே அவன் அருள் நமக்குக் கிட்டுகிறது.

வெளியே உள்ள பெண்கள் கண்ணனை விளித்து, 'மலர் மார்பா! வாய் திறவாய்!' என்று கூப்பிடுகிறார்கள். அவனும் தன் வாய் திறந்து, 'வருகிறேன்!' என்று பதில் பேச முயலுகிறபொழுது, நப்பின்னை தன் கண்களின் பார்வையாலேயே அவனைக் கட்டிப் போட்டு விடுகிறாள். அவள் கண்ணழகில் சொக்கிப் போன அவன், அவள் குறிப்பின்படியே நடந்து கொள்ள வாயே திறக்கவில்லையாம். ஐயோ, பாவம்! இப்பெண்கள் மறுபடியும் நப்பின்னையையே அழைக்க வேண்டி உள்ளது. ஆகவே நப்பின்னையை விளித்துப் பேசுகிறார்கள்.

"மைத்தடங்கண்ணினாய்! நீ உன் மணாளனை
எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய் காண்!
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்!"

"மைதீட்டப்பட்ட கண்ணழகு உள்ள நப்பின்னைத் தாயே! ஏனம்மா, இப்படி உன் நாயகன் கண்ணனை எங்களிடம் வர ஒட்டாமல் தடுக்கிறாய்! ஒரு கண நேரமும் கூட அவன் படுக்கையை விட்டு எழுந்து செல்ல மறுக்கிறாயே!

கணப்பொழுதுகூட அவனைப் பிரிய முடியாதவளாய் இருக்கிறாயே!" என்று கேட்கிறார்கள்.

அவன் நினைவே நினைவாயிருக்கும் அவள்; அவள் நினைவு ஒழிய வேறு அறியாத அவன்! ஆக இருவரும் ஒருவரை விட்டு ஒருவர் நொடிப் பொழுதும் பிரிய இயலாதவர்களாய் உள்ளனர். அப்பெண்களோ இருவருடைய அருளையும் வேண்டி நிற்கிறார்கள். இப்படி ஒரு இக்கட்டான நிலையிலே பெண்களுக்கு வேறு வழி தெரியவில்லை. தாயின் அருளே அவர்கள் வேண்டுவதெல்லாம். முடிவாக ஒன்று கேட்கிறார்கள்.

"அம்மா! நீ என்னதான் அப்பனை விட்டு ஒரு நொடி கூடப் பிரியாதவள் ஆனாலும் அருள் என்பது உன் வடிவம் ஆயிற்றே! அதை எங்களுக்குத் தர நீ எப்படித் தூரத்தே இருப்பாய்?" என்று ஓர் அன்புச் சங்கிலியை வீசிக் கட்டி விடுகிறார்கள்.

'தத்துவம் அன்று தகவு' என்பதுதான் சூத்திர வடிவில் அமைந்த அந்த அன்புக் கட்டளை.

'உலகத் தாயாக இருக்கும் உன் இயற்கையான இயல்பு, அருள் ஆயிற்றே! அதல்லவா உன் தகவு? ஆயினும் எங்கள் தந்தையான அந்தக் கண்ணன் எங்களிடம் அருள் காட்டத் தூண்டுவது உன் அழகு வடிவத்தால் அன்றோ? எங்கள் பிழைகளைப் பொறுத்து ஏற்பதும் உன் அருள் அன்றோ? அவனை அழகாலே திருத்தி எங்களை அருளாலே திருத்தும் உன் வடிவமே அருள் தத்துவம் அல்லவா! மொத்தமாகப் பார்க்கிற பொழுது, உன் வடிவமான தத்துவப்படி பார்த்தாலும் சரி; அன்றி உன் இயல்பான அருளின்படி நோக்கினாலும் சரி; எப்படியும் நீ எங்களுக்கு இரங்கி வந்து எங்களை ஏற்றுத்தான் ஆகவேண்டும்!"

இதுதான் கோதை நாச்சியாரின் தீர்ந்த முடிவான வேண்டுகோள் ஆகும்.

அருளின் வடிவமாகவே இருக்கும் அன்னை, அருளை அடையக் காணப்படும் வழியாகவும் இருக்கிறாள் என்பது இங்கே பெறப்பட்டது. பாசுரம் இதோ :

*“குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்*
*மெத்தென்ன பஞ்ச சயனத்தின் மேல்ஏறிக்*
*கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்*
*வைத்துக் கிடந்த மலர்மார்ப! வாய்திறவாய்!*
*மைத்தடங் கண்ணினாய்! நீஉன் மணாளனை*
*எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய்காண்*
*எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்*
*தத்துவம் அன்று தகவேலோ ரெம்பாவாய்!”*

**இப்போதே நீராட்டு :**

ஆய்ப்பெண்கள் கூறிய ‘தத்துவம் அன்று தகவு’ என்பதைக் கேட்ட நப்பின்னை பேசாமல் கிடந்தாள். தகுந்த நேரத்தில் எம் பெருமானிடம் விண்ணப்பிக்கலாம் என்று அவள் இருந்த பொழுது அப் பெண்கள் பிராட்டிக்குச் ‘சீற்றமோ’? என்று மயங்கினார்கள் போலும்! கண்ணனையும் நப்பின்னையையும் சேர்த்தே அழைப்போம் என்று எண்ணியவர்களாய் முதலில் கண்ணனையும் அதன் பின்னே நப்பின்னையையும் குறித்துப் பேசினார்கள். இப் பாசுரத்தின் முற்பகுதி கண்ணனிடம் பேசுவதாகவும் பிற்பகுதி நப்பின்னையிடம் கூறுவதாகவும் அமைந்துள்ளது.

“பரிசுத்தமே வடிவமான எம் பெருமானே! நீ விமலன் அல்லவோ? முப்பத்து முக்கோடி தேவர்களுக்காக அவர்களுக்குத் துன்பம் வருவதற்கு முன்பேயே நீயாகவே சென்று காப்பாற்றுகிறவன் ஆயிற்றே! அவர்களுக்கு அசுரர் அரக்கர்களால் ஏற்படும் நடுக்கத்தைத் தீர்ப்பாய்! மிடுக்கான பலத்தை உடையவன் நீ! உன்னை அடைந்தவர்களைக் காப்பாற்றுவதில் நேர்மையையும், அவர்களை அழிக்க வரும் பகைவர்களிடத்தே உன் வீர

ஆற்றலையும் வெளிப்படுத்துவாய். அப் பகைவர்களுக்கு உன் வெப்பமான வலிமையைக் காட்டுவாய்!"

இவ்வாறு அப்பெண்கள் கண்ணனிடத்தே கூறினார்கள்.

*"முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று*
*கப்பம் தவிர்க்கும் கலியே துயில் எழாய்!"*

என்று கூறுகிறார்கள்.

தேவர்கள் முப்பத்து முக்கோடிக் கணக்கினர் என்பது, முப்பத்து மூன்று தேவர்களாகிய தலைவர்களை ஒட்டி வருவதால் ஆகும். பன்னிரண்டு சூரியர்கள், பதினோரு உருத்திரர்கள், எட்டு வசுக்கள், அச்வினி இரட்டையர் ஆக முப்பத்து மூன்று தேவர்கள் ஆவர். ஒவ்வொருவருக்கும் ஒரு கோடியாக முப்பத்து மூன்று கோடிக் கணக்கினர் எனப்படுவார்கள்.

இந்த முப்பத்து முக்கோடி தேவர்களின் நடுக்கத்தைப் போக்கி, அவர்களுக்கு அசுரர், அரக்கர் ஆகியோரிடம் இருந்து தீமைகள் வராவண்ணம் பகவான் காத்தான். அவர்கள் அழைக்காத பொழுதுகூடத் தானாகவே சென்று காத்தான் என்பதை 'முன் சென்று' என்பது குறிப்பிடுகிறதாம். கப்பம் என்பது 'கம்பம், என்னும் சொல்லின் திரிபு; நடுக்கம் என்று பொருள். தேவர்கள் நடுக்கத்தைத் தவிர்த்தவனே என்று பெண்கள் அழைக்கிறார்கள்.

அன்பர்களுக்கு இடம் தந்து ஆதரிக்கும் அருளுடைய பகவான் மாற்றார்களான பகைவர்களுக்குத் துன்பமான வெப்பத்தைக் கொடுப்பான்; தண்டனையால் அவர்களைத் திருத்தி ஆட்கொள்வான். இவ்வாறு அன்பர்களையும் பகைவர்களையும் ஆட்கொள்வதால் இவன் 'விமலன்' ஆகிறான். விமலன் என்பது குற்றமற்றவன் என்று பொருள்படும். கடவுளுக்கு எந்தக் குற்றமும் இல்லை. அவன் பரிசுத்தமானவன்.

இவ்வாறு கண்ணனை 'விமலா! துயிலெழாய்!' என்று அழைத்தார்கள்.

பிறகு நப்பின்னையை விளித்து அழைக்கிறார்கள். "பெண்மைக்கே இலக்கணமாக இருப்பவள் நீ. உன் மார்பழகு என்ன! சிவந்த செவ்வாயின் சிறப்புத்தான் என்ன! நுண்ணிய இடை அழகுதான் என்ன! நங்கைகளுக்குத் தலைவி நீயேதான்! பெரிய பிராட்டியாகிய திருமகளை ஒத்த நீ துயில் எழுந்து வந்து எங்களுக்கு அருள் செய்வாயாக! நோன்பிற்குத் தேவையான ஆலவட்டத்தையும் கண்ணாடியையும் தந்து உதவ வேண்டும். இவற்றுடன் உன் நாதனான கண்ணனையும் எங்களையும் நீ சேர்த்து வைத்து இப்பொழுதே நீராட்ட வேண்டும்!" என்று பேசுகிறார்கள்.

இப்போதே நீராட்டு என்பதால், அதை ஒத்திப் போடலாகாது. 'நன்றே செய்க, 'இன்றே செய்க, அதுவும் இன்னே செய்க' என்கிறார்கள்.

*"முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று*
*கப்பம் தவிர்க்கும் கலியே துயிலெழாய்!*
*செப்பமுடையாய் திறலுடையாய் செற்றார்க்கு*
*வெப்பம் கொடுக்கும் விமலா துயில்எழாய்!*
*செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறுமருங்குல்*
*நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்!*
*உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை*
*இப்போதே எம்மை நீராட்டேலோ ரெம்பாவாய்!"*

**ஆற்றாது வந்தோம்:**

நந்தகோபன் ஆட்சியில் பசுக்களின் எண்ணிக்கை இவ்வளவு என்று எண்ணி முடிக்க முடியாதவையாம். அளவற்ற பசுக்கள்

அவனிடம் உள்ளன என்பதை 'ஆற்றப் படைத்தான்' என்பதால் பாசுரம் குறிப்பிடுகிறது. இந்தப் பசுச் செல்வம் நந்தகோபருக்கு மகிழ்ச்சி தருவதை விடவும் கண்ணனுக்குத்தான் அதிகம் மகிழ்ச்சி கொடுக்குமாம். காரணம்: நந்தகோபர் சம்பாதித்துப் பெற்ற பசுக்களின் வளம் கண்ணன் பிள்ளையாகப் பிறந்து படைத்த செல்வமாம். நந்தகோபன் செல்வத்துக்கென்றே இட்டுப் பிறந்த பிள்ளை அன்றோ இவன் என்பதை 'ஆற்றப் படைத்தான் மகனே' என்பதால் குறிக்கிறார்கள்.

அவர் வளர்க்கிற அந்தப் பசுக்களின் ஏற்றம்தான் என்னே! 'வள்ளல்' என்று ஏத்துகிற அளவுக்கு அவை பயன் எதிர்பாராமலே பாலைச் சொரிகின்றன.

> *"ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீதளிப்ப*
> *மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்!"*

பசுக்கள் தாங்களாகவே சுரக்கும் பாலை ஏந்துவதற்கு வைக்கும் குடங்களாகிய கலங்களின் எண்ணிக்கைக்கு அளவே கிடையாது. அவற்றை வைப்பதற்குள் பால் மிக விரைவாக வழிந்து கலங்கள் நிறைந்து எதிர்பொங்கி வழியுமாம். மடிக் காம்பின் ஒருபீறிலே ஒரு குடமே பொங்கி வழியுமோ என்னவோ? சிறிய கலம் பெரிய கலம் என்ற வேறுபாடில்லாமல் எத்தனை கலங்களாயினும் எந்தக் கலங்களாயினும் நிறைந்து விடும்.

'மாற்றாதே பால் சொரியும்' என்பதன் அருமையான குறிப்பு உணரத்தக்கது. வைத்த கலத்தை எடுத்து மாற்றி வைப்பதற்குள்ளேயே இடைவிடாமல் பால் பொழியும்; அன்றிப் பாலைச் சேகரிக்கும் கலத்தை வைக்காத பொழுது கூட முலைக் காம்பின் கடுப்பாலே இடைவிடாமல் பால் பொழியும் என்றும் பொருள்படும். இவ்வாறு பாலை வழங்கும் பசுவை 'வள்ளல்' என்றுதானே அழைக்க வேண்டும்!

இவ்வாறு பசுக்களின் பெருமையையும் நந்தகோபன் செல்வத்தையும் குறிப்பிட்டுக் கூறும் ஆய்ப் பெண்கள் கண்ணனை மறுபடியும் துயில் எழுப்புவதாக அமைந்துள்ளது இப்பாசுரம்.

மேலே கண்ணனின் சீர்மைகளை அவர்கள் எடுத்தோதுகிறார்கள்.

*"ஊற்றமுடையாய்; பெரியாய்; உலகினில்*
*தோற்றமாய் நின்ற சுடரே துயில் எழாய்!"*

என்றும் நின்று நிலைக்கும் நித்தியத் தன்மை உடையவன் அந்தக் கண்ணன். வேதங்களும் காண ஒண்ணாதபடி அவன் பெரியவனாய் இருக்கிறான். ஆயினும் தன் பெருமையையும் மேன்மையையும் பாராமல் உலகோர்கள் தன்னை இழந்து விடாத வண்ணம் அவர்கள் நடுவே வந்து தோன்றுகிறான். இருள் தருமா ஞாலத்தே இறங்கி வருகிற சுடர் அவன்.

ஊற்றம் உடைய அவன் பெரியவன் ஆயினும் உலகினில் தோற்றமுடையவனாக வரும் சுடர் அல்லவா! இம் மூன்றிலும் இழைபோலக் காணப்படும் பொருள் நயம் உண்டு. அதாவது :

அடியார்களைக் காப்பாற்றுகிற விஷயத்தில் அசைக்க முடியாத உறுதியாகிய ஊற்றம் உடையவன்; அடியார்களுக்கு எவ்வளவு அருள் செய்தாலும் ஒன்றும் செய்யவில்லையே என்று இருக்கும் பெருந்தன்மை உடையவன்; அவர்களுக்கு அருள் செய்வது தன் பேறே என்னும் பெருந்தன்மையும் உடையவனாம்.

'தோற்றமாய் நின்ற சுடரே' என்பது இன்னொரு பொருளும் உடையது. அடியார்களிடத்தே அன்பு காட்டி அவர்கள் பக்கம் ஒரு தலையாக நின்று உதவும்பொழுது அந்த அவனுடைய ஒருதலைப்படும் தன்மையை விரோதிகளும் தெரிந்து

கொள்ளும்படியாகவே தோன்றுகிறான் என்றும் பொருள்படும். பாரத யுத்தத்தில் சக்கராயுதம் எடுத்ததும், அர்ஜுனன் தேரைக் கீழே பூமியில் இறக்கியதும் ஆகிய அவனுடைய பொய்த் தொழில்கள் ஒரு தலைப்பட்சம் அல்லவா!

'கண்ணா! உன் பகைவர்களாகிய மாற்றார்கள் தங்கள் வலிமை தொலைந்து உன் திருவடிகளில் ஆற்றாது வந்து பணிவார்கள். நாங்களும் அவர்களைப் போலவே வந்து பணிகிறோம்' என்று பெண்கள் கூறுகிறார்கள். பகைவர்களுக்குத் தங்கள் தோல்வியாலே அடைக்கலம் வேண்டும் நிலை வந்தது. இந்தப் பெண்களுக்கு அடைக்கலம் வேண்ட என்ன தோல்வி ஏற்பட்டது?

ஆமாம்; இவர்களும்தான் தோற்று விட்டார்கள்; கண்ணனின் அழகுக்கும் குணங்களுக்கும் அல்லவா இவர்கள் தோற்றிருக்கிறார்கள்! 'அவர்கள் உன் வலிமைக்குத் தோற்றார்கள்; நாங்கள் உன் குணங்களுக்கும் அழகிற்கும் தோற்றோம்!' என்கிறார்கள்.

பெரியாழ்வாரைப் போலே நாங்களும் பல்லாண்டு பாட வந்துள்ளோம் என்பதைப் 'போற்றியாம் வந்தோம்' என்பதால் கூறுகிறார்கள். 'உன்னைப் புகழவும் வந்தோம் உன் அடைக்கலம் பெறவும் வந்தோம். இனி எங்களை; ஏற்றுக் கொள்வது உன் கடமை. எங்களை நீ அடைவதோ இழந்து விடுவதோ உன்னைப் பொறுத்தது!' என்று முடிக்கிறார்கள்.

*"ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப*
*மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்*
*ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்!*
*ஊற்றமுடையாய்! பெரியாய்! உலகினில்*

*தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்!*
*மாற்றார் உனக்கு வலிதொலைந்து உன்வாசற்கண்*
*ஆற்றாது வந்துஉன் அடிபணியுமா போலே*
*போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்!"*

**பார்வை ஒன்றே போதாதோ!**

ஆய்ப் பெண்கள் தங்களுடைய கதியின்மையை அறிவித்தும்கூடக் கண்ணன் வாய்திறவாமல் அவர்களைச் சோதித்தான். அவன் பதில் கிடைக்கப் பெறாத அவர்கள் தங்கள் புகலின்மையைத் தெரிவித்து, இறைவனாகிய அவன் திருக்கண்களால் விளையும் அருளின் நன்மையைப் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள். இதுவே இப்பாசுர விஷயம் ஆகும்.

'கண்ணா! எங்களுக்கு முன்பெல்லாம் ஏற்பட்ட அபிமானமான தன்னுணர்வு, உன்னைக் கண்ட பிறகு, போய்விட்டதப்பா! காரணம் உன் குணங்களும் அழகுமே ஆகும். உன் அழகான கண்களால் எங்களைக் குளிர நோக்கி அருள் பெய்வாய்!' என்று வேண்டுகிறார்கள்.

அகன்ற இடமுடைய அழகிய இந்தப் பூமியை ஆண்ட அரசர்கள் எல்லாம் தங்கள் மமதையான அபிமானத்துக்கு ஆட்பட்டு அழிந்தவர்கள் ஆயிற்றே! 'என் நாடு! என் அரசு!' என் பதவி! என்கிற அபிமானம் அரசர்களை எவ்வாறெல்லாம் ஆட்டுவிக்கும் என்கிறதைச் சரித்திர ஏடுகள் கூறத்தான் செய்கின்றன. எப்படிப்பட்ட மாமன்னன் ஆனாலும் அவனையும் தோற்கடித்து அடிமைப்படுத்துகிற இன்னொரு சக்கரவர்த்தி தோன்றி, முன்னவனை இருந்த இடம் தெரியாமல் அழித்து விடுவானே! இதன்றோ உலகியற்கை!

*'ஒரு நாயகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்*
*கருநாய் கவர்ந்த காலர்சிதைகிய பானையர்'*

என்கிற நம்மாழ்வார் திருவாக்கு இதைத்தானே விளக்குகிறது!

இப்படிப்பட்ட மன்னர்கள் கண்ணன் தனி ஆளுமைக்கும் தனித்துவ இறைமைக்கும் தோற்று முன்னே நிற்க முடியாதபடி முடிவிலே தங்கள் 'அபிமானம்' தொலையப் பெற்றார்களாம், 'தங்கள்', 'தாம்' என்கிற அபிமானம் அழிந்ததும் அவர்கள் கண்ணன் திருப்பள்ளி அறை வாசலிலே கூடி வந்து, 'கண்ணா! அபிமானம் பங்கப்பட்டு வந்து நாங்கள் உன் அடிபணிகின்றோம். அடைக்கலம் தரவேண்டும்!' என்று வேண்டுகிறார்கள். அகப்பற்று புறப்பற்று ஆகிய இரண்டையும் நீக்கிவிட்டு வந்துள்ள அவர்கள் கண்ணன் பள்ளிக்கட்டில் கீழே கூட்டமாக அமர்ந்திருக்கிறார்கள். இதைக் கண்ட ஆய்ப் பெண்கள் அதிசயித்துப் பேசுகிறார்கள்.

"அவர்கள் உன் வலிமைக்குத் தோற்று வந்து அடிபணிந்தது போலே, நாங்கள் உன் குணத்துக்கும் அழகுக்கும் தோற்று வந்து அடிபணிகிறோம்!'

***"அம் கண் மா ஞாலத்து அரசர் அபிமான***
***பங்கமாய் வந்து நின் பள்ளிக் கட்டிற் கீழே***
***சங்கமிருப்பார் போல் வந்து தலைப் பெய்தோம்!"***

என்கிறார்கள்.

இதைக் கேட்ட கண்ணன். 'நீங்கள் வந்தது சரி; இனி ஒரு குறையும் இல்லையே! என்னைப் பார்த்தாயிற்றல்லவா! வேறு எதற்காகக் காத்திருக்கிறீர்கள்?' என்று கேட்டான் எனில் என்ன செய்வது? ஆகவே, அப்பெண்கள் தங்கள் உண்மையான வேண்டுகோளை மேலே விண்ணப்பிக்கிறார்கள்.

"உன்னுடைய சிவந்த தாமரைப் பூப் போன்ற கண்களின் அருள் எங்கள் மேல் பட வேண்டும், அப்பா! அன்புடன் எங்களை உன் கண்கள் இரண்டாலும் நோக்கி, எங்கள் வருத்தத்தை நீக்க வேண்டும்!" என்று கேட்கிறார்கள்.

*"கிண்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?"*

கண்ணனின் கண்ணுக்கு இங்கே ஆண்டாள் காட்டுகிற உவமானம் 'கிண்கிணி' என்னும் ஆபரணம். வாய்ப்பக்கம் சிறிது திறந்து மற்றெங்கும் மூடியுள்ள ஒருவகைச் சதங்கை 'கிண்கிணி' எனப்படும். அதைப் போன்ற முறையில் பாதி திறந்தும் மீதி மூடியும் உள்ளதாகத் தாமரைப் பூப் போன்றதாயும் உள்ள அழகான கண்கள் அவனுடையன ஆவன. அந்தக் கண்களைத் திறந்தும் திறக்காமலும் சிறிதுசிறிதாக அவற்றின் வழியே அருளைப் பொழியலாகாதா என்று பெண்கள் கேட்கிறார்கள்.

ஒரே அடியாய் முழுதுமாகத் திறந்தபடி கண்ணன் பார்த்தால் அவனுடைய அருள் வெள்ளத்தில் திக்கு முக்காடித் திணறிப்போய் விடுவார்களாம். ஆகையாலே, 'சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ' என்று கேட்கிறார்கள்.

அவனுடைய இரு கண்களும் சந்திர சூரியர்களைப் போன்றவை. பகைவர்களுக்கு வெப்பத்தையும் அன்பர்களுக்கு அருளையும் வழங்குகிறவை. ஆகையாலே, ஒன்று சூரியனாகவும் மற்றது சந்திரனாகவும் உள்ளனவாம்.

பொதுவாகத் தாமரை சூரியன் உதித்ததும் மலரும் ; சந்திரனோ மூடும். இங்கோ சந்திர சூரியர் இருவருமே உதிக்கிறபொழுது தாமரை பாதி மூடியும் மீதி திறந்தும் தானே இருப்பது இயல்பு! ஆகவே, இப்படிப் பாதி மூடிய பாதி திறந்த தாமரையைக் கற்பனை செய்கிறார்கள். ஆகவே 'கிண்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே' என்று உவமையை அருமையாகக் காட்டியுள்ளார்கள். கண்ணழகை ஓவியமாகத் தீட்டிக் காட்டியுள்ள ஆண்டாள், 'அவனுடைய அழகு ததும்பும்

அன்பு நிறைந்த அருள் பார்வை ஒன்று போதுமே கால காலத்துக்கு! என்கிறாள்.

*"அங்கண் மாஞாலத் தரசர் அபிமான*
*பங்கமாய் வந்து நின்பள்ளிக் கட்டிற்கீழே*
*சங்க மிருப்பார் போல்வந்து தலைப்பெய்தோம்*
*கிண்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே*
*செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?*
*திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற் போல்*
*அங்கண் இரண்டும் கொண்டு எங்கள்மேல்*
*நோக்குதியேல்*
*எங்கள் மேல்சாபம் இழிந்தேலோ ரொம்பவாய்!"*

# 5. அத்தாணி மண்டபம்

'சங்கமிருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம்' என்று ஆய்ப் பெண்கள் விண்ணப்பித்ததைக் கேட்ட கண்ணன், 'நப்பின்னைப் பிராட்டியைச் சேர்ந்த இவர்களை இப்படி அலைக்கழித்து விட்டோம்' என்று எண்ணினான். "பெண்களே! உங்களைத் தேடி நான் வரவேண்டியதிருக்க, நீங்கள் என்னைத் தேடி வரும்படி செய்து அல்லல் விளைவித்து விட்டேனே! இது என் தத்துவமும் இல்லை ; தகவும் இல்லை. இதோ, நான் உங்களுக்குச் செய்ய வேண்டியது என்ன? கேளுங்கள் ; தருகிறேன்!" என்றான்.

அப்பெண்களுக்கோ தங்கள் காரியத்தை விண்ணப்பம் செய்ய எண்ணம்தான் என்றாலும், அவர்கள் நோக்கமெல்லாம் அவன் நடை அழகைக் காண்பதே ஆகும். ஆகவே, அத்தாணி மண்டபத்துக்கு அவனை நடந்து வரச்செய்து சீரிய சிங்காசனத்தில் அமர்த்திப் பல்லாண்டுகள் பாடிய பிறகே தங்கள் விண்ணப்பத்தைக் கூற வேண்டும் என்று முடிவு செய்து விட்டார்கள்.

"கண்ணா! இரகசியமாக அவசர அவசரமாக எதையாவது கேட்டு வாங்கிக்கொண்டு போக நாங்கள் வரவில்லை. யசோதை இளஞ்சிங்கமாகிய நீ பள்ளியறையை விட்டு எழுந்து திருமேனி நிமிர்ந்து கம்பீரமாகப் பார்த்துக் கொண்டு நடந்து, அத்தாணி மண்டபத்தே சீரிய சிங்காதனத்தில் எழுந்தருளி நாங்கள் விடுக்கும் விண்ணப்பத்தைக் கேட்க வேண்டும்!" என்கிறார்கள்.

**யாதவ சிங்கம்**

பக்தியுடன் தன்னடி பணிந்த பிரகலாதனைக் காக்கவும், தன்னை இல்லை என்று மறுத்துத் தாக்கிய இரணியனை அழிக்கவும், திருமால் எடுத்த முதற்சிங்கவடிவம் நரசிங்கம் ஆகும். பாதி மனித வடிவமும் மீதிச் சிங்க வடிவமும் கலந்த அந்த நரசிங்கம் இரணியனை அழிக்கிற பொழுது வீரசிங்கமாகவும், பிரகலாதனுக்கு அருள்கிற பொழுது தெள்ளிய சிங்கமாகவும் தோற்றம் அளித்தது.

கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் தீர்க்க வந்த அந்தக் கழல் வேந்தன் இராமன் இராவணனுடன் போர் செய்யச் சென்ற பொழுது தோன்றிய வீரத் தோற்றமும் சிங்க நடை ஏற்றம் கொண்டதுதான் ஆகும். இந்த வீரசிங்கம் இராகவ சிங்கம் ஆவான்.

இங்கே ஆய்ப் பெண்களுக்காகப் பள்ளி அறையிலிருந்து எழுந்து அத்தாணி மண்டபம் புகுந்து அரியணை அமர நடந்தவன் யாதவ சிங்கம் ஆகிறான்.

எனவே, திருமால் நரசிங்கமாகத் தோன்றினான்; இராகவ சிங்கமாகப் போரிட்டான்; யாதவ சிங்கமாக நடை அழகு காட்டினான். இப்பாசுரம் யாதவ சிங்கத்தின் கம்பீரத் தோற்றத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது. கண்ணன் நடையழகைக் காட்டும் பாசுரமாக அமைந்துள்ள இது திருப்பாவையின் நடையழகையும் நமக்குக் காட்டுகிறது. இந்தச் சிங்கப் பாட்டிலே ஆண்டாள் பெண் சிங்கம் போலே கர்ஜனை செய்கிறாள். கவிதை மணம் பொங்கக் காட்சி அழகு எப்பாடும் பேர்ந்து உதற, மூரி நிமிர்ந்து முழக்கத்தைச் செய்திருக்கிறாள்.

வில்லிப்புத்தூரிலே வாழ்ந்த ஆண்டாள் நிச்சயம் காட்டுப் பக்கம் சிங்கம் கர்ஜனை செய்துகொண்டு ஓடுவதைப்

பார்த்திருந்தாள் போலும்! கண்ணாலே காணாத எதனையும் கவிதையிலே உயிரோட்டத்துடன் காட்ட இயலாதன்றோ! இந்தச் சிங்கப் பாட்டு திருப்பாவையிலே காணப்படும் கவிதைகளுள் காட்சி எழில் வாய்ந்த ஒரு சிறந்த சித்திரம் ஆகிறது. இதோ, அந்தச் சித்திரத்தைக் காண்கிறோம்.

மழைக் காலம்! காட்டுப் பகுதியிலே மலையின்கண் குகையிலே படுத்துறங்குகிறது அந்தச் சிங்கம். தன் துணையான பெண் சிங்கத்துடன் ஒட்டிப் படுத்திருக்கும் அந்த ஆண் சிங்கம், மலையிலே மலைச்சிகரம் ஒன்றி இருப்பதைப்போல மன்னிக் கிடக்கிறது. உறக்கம் தீர்ந்த பிறகு பசி எழுந்தவுடன் அது தன் சீர்மையை வெளியே காட்டிய வண்ணம் கண் திறந்தது. கண்ணைத் திறந்து பார்க்கிற பொழுது அதிலிருந்து தீக்கொழுந்து எங்கும் பரவுகிறதாம்! தன் நெடிய உடம்பை முறித்துக்கொண்டு கண்களிலிருந்து கனல் பரக்க, நாலா புறங்களிலும் கூர்மையாகப் பார்த்தபடி புறப்படத் தொடங்குகிறது. இவ்வாறு அது புறப்படும் பொழுது அதன் பிடரி மயிரிலிருந்து மணம் வீசுகிறது. தான் புறப்படுவதை அறிவிக்கிற மாதிரி ஒரு வீர கர்ஜனை செய்கிறது! அதன் அந்த முழக்கம் திசைகளை எல்லாம் நடுங்க வைக்கிறதாம்.

*"மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்*
*சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து*
*வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி*
*மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு"*

இவ்வாறு ஆண்டாள் அந்தச் சிங்கத்தின் புறப்பாட்டை வர்ணிக்கிறாள்.

ஆய்ப் பெண்கள் இப்படிச் சிங்க வர்ணனை செய்து கண்ணனை வேண்டுவது என்ன?

"சிற்றாயர் சிங்கமே! நீயும் இந்தச் சிங்கம் போலே உன் பள்ளிக் கட்டிலிலிருந்து எழுந்து நடந்து, அத்தாணி மண்டபம் அடைந்து,

சிங்காதனம் ஏறி வீற்றிருந்து அருள வேண்டும்!" என்று வேண்டுகிறார்கள்.

"பெண்களே! என்னைச் சிங்கத்தோடு ஒப்பிட்டுக் காட்டி விட்டீர்கள்! என்னை நேராகப் பாருங்கள். என் கண் முன்னே நின்று கண்ணூடே பாருங்கள்! என் பார்வை என்ன சிங்கம் போலக் கொடூரமாகவும் அச்சம் தருவதுமாகவா உள்ளது?" என்று கண்ணன் கேட்பது போலப் பெண்களுக்குப் படுகிறது.

'ஐயோ! அவன் நடையைத்தான் சிங்க நடைக்கு ஒப்பிடலாமே ஒழிய, அன்பு பொழியும் அவன் திருக்கண் பார்வையைத் தீ விழிப் பார்வையாகக் கூறலாகாதே!' என்று மனம் வருந்துகிறார்கள்.

'மலர்க்கண்களைப் பெற்றுள்ள கண்ணா! உன் திருப்பார்வை அழகு மட்டும் அல்லாமல் உன் திருமேனி அழகும் அல்லவா எங்களைக் கவர்ந்துள்ளது! காயாம் பூப்போல் கருநீல வண்ணம் உடைய உன் திருமேனி அழகிலே நாங்கள் எங்களை இழந்து விட்டோம், அப்பா! உன் காயாம் பூமேனி அழகிலேதான் இந்தச் சீரிய சிங்கத்தின் திறல் மறைந்திருக்கிறது. அதற்குள்ளே நீறுபூத்த நெருப்பாக மறைந்துள்ள உன் சக்தியையும் நாங்கள் வியக்கிறோம். அதையும் காண ஆசைப் பட்டோம்!' என்று பெண்கள் விண்ணப்பிக்கிறார்கள்.

"பூவைப் பூ வண்ணா!' என்று செல்லமாகத் தங்கள் அன்பு வெள்ளம் வெளிப்பட அழைக்கிறார்கள். 'உன் கோயில் நின்றும் இங்ஙனே போந்தருளிச் சீரிய சிங்காதனத்தே வீற்றிருந்து நாங்கள் வந்த காரியத்தை ஆராய்ந்து அருள வேண்டும்! என்கிறார்கள். "படுக்கையிலே எழுந்தருளி இருந்த அழகை ரசித்து விட்டோம். இனி உன் நடையழகையும் சிங்காதனத்திலே வீற்றிருக்கும் அழகையும் காண வேண்டும்!" என்று வேண்டுகிறார்கள்.

'போந்தருளி' என்கிற சொல்லிலே, 'நான்கு வகை நடையையும் காட்டி வர வேண்டும்' என்கிற உட்பொருளைக் காணலாம். காளையின் செருக்கும், யானையின் கம்பீரமும், புலியின் சிவிட்கும், சிங்கத்தின் ஆளுமையும் தோன்ற நடக்கும் நடை அழகாம் அது. திருவரங்கநாதன் நம் பெருமாளிடத்தே அவன் புறப்பாட்டில் இந்த நான்கு வகை நடை அழகினைக் கண்டு மகிழலாம் என்று ஆசாரியர்கள் அருள்வார்கள்.

'யாம் வந்த' என்ற தொடரிலும் பெண்கள் தங்கள் மனக் குறிப்பை வெளியிடுகிறார்கள். 'கண்ணா! நீ எங்களை நோக்கி வராமல் இருக்க, நாங்கள் ஆற்றாமையே துணையாக, உன்னைத்தேடி வரும்படி ஆயிற்றே!' என்கிறார்கள். 'காரியம் இன்னதென்பதை நீ வந்து அரியாசனத்தில் வீற்றிருந்த பிறகேதான் வெளிப்படுத்துவோம். நீ எங்களைப் பற்றித் தெரிந்து கொண்ட பிறகேதான் கூறுவோம். எங்களைப்பற்றி நீ ஆராய்ந்துள்ளாயா? ஆகவே, ஆராய்ந்து அருள் செய். அதாவது எங்களுடைய துன்பங்கள் என்னவென்று தெரிந்த பிறகு அவற்றை நீக்கு!' என்கிறார்கள்.

"ஒருவரை ஒருவர் எழுப்புவது, வாசல் காப்பானையும் கோயில் காப்பானையும் எழுப்புவது, ஐயரை எழுப்புவது, ஆய்ச்சியை எழுப்புவது, உன்னையும் உம்பியையும் எழுப்புவது நப்பின்னையை எழுப்புவது, மறுபடி உன்னை எழுப்புவது, ஆக, இப்படிப்படாதன படும்படி நாங்கள் அலைகிறோம். இவற்றை நீ நினைத்து, 'பெண்களே! என்ன பாடு பட்டு விட்டீர்கள்?' என்று விசாரித்து அருள் பாலிக்க வேண்டும்!" என்று கூறுகிறார்கள்.

இதோ அந்தச் சிங்கப் பாட்டு :

*"மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்*
*சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து*
*வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி*
*மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்*

*போதருமா போலே நீ பூவைப் பூவண்ணா! உன்*
*கோயில் நின்றும் இங்ஙனே போந்தருளிக் கோப்புடைய*
*சீரிய சிங்கா தனத்திருந்து யாம்வந்த*
*காரியம் ஆராய்ந்தருள் ஏல்ஓர் எம்பாவாய்!"*

**போற்றி! போற்றி!!**

அடியார்களைத் தன் உடைமையாக எண்ணி, அவர்கள் ஏற்றத்திலே எப்பொழுதும் பரிவு கொள்கிற இறைவன் அவர்கள் வேண்டுகிறபடி தன்னையே கூடத் தந்து விடுகிறான். 'அணிவகுக்கப்பட்ட போர்ப் படைகள் நடுவே என் தேரை நிறுத்து! என்று ஆணையிட்ட அர்ச்சுனன் சொல்லைத் தட்டாமல் கேட்டு, அப்படியே செய்தான் கண்ணன். தோழனுக்காகத் தன் மேன்மையைத் தாழவிட்டுக் கொண்டு, அவனுக்குத் தேர் ஓட்டியாகக் கையில் கோல் பிடித்துக் குதிரைக்காரன் ஆனான்.

இப்படிப்பட்ட கண்ணன் தன்னிடத்தே உயிரையே வைத்துள்ள ஆய்ப் பெண்களின் பேச்சைத் தட்டுவானா? மாட்டான் அன்றோ! ஆகவே, அவர்கள் வேண்டிக் கொண்டபடியே தன் பள்ளியறையை விட்டு, எழுந்து நடந்து வரத் தொடங்கினான்.

க்ண்ணன் நடந்து வருகிற அழகைப் பெண்கள் கண்டார்கள்! அவனுடைய வடிவழகும் நடை அழகும் அவர்களைச் சொக்க வைத்தன! தாங்கள் வேண்டியதற்காகத் தானே அவன் நடந்து வருகிறான் என்பதை மறந்து விட்டனர்.

அவனுடைய வடிவமும் நடை அழகும் அவர்களை நீர்ப் பண்டமாக உருகச் செய்து விட்டன. அவன் மென்மையான திருவடித் தாமரைகள் அவர்கள் கண்களில் பட்டன. துடிதுடித்துப் போனார்கள் அப்பெண்கள்.

"ஐயோ! இந்தத் திருவடிகளை நாம் நடக்கச் செய்து விட்டோமே! மலர்ப் பாதங்கள் பஞ்சினும் மெல்லியவை ஆயிற்றே!

நடையினால் அவை நொந்து போகுமே! தாமரைப் பூக்களாக உள்ள இவற்றை நம் கண்களில் அல்லவா ஒற்றிக் கொள்ள வேண்டும்! நம் தலை முடியில் வைத்துப் போற்ற வேண்டிய அவை நோகும்படி நடக்கச் சொன்னோமே!" என்று வருந்தினார்கள். ஆகவே, அந்தக் கண்ணன் பாதங்களுக்கு வாழ்த்துப் பாடுகிறார்கள்.

"உலகம் அளந்த அந்தத் திருவடிகள் காடுமேடெல்லாம் நடந்து நொந்தனவே! அவைதானே சகடம் உதைத்த திருவடிகள்! இவை நொந்து போகலாமா? வாழ்க அவை! அவற்றிற்குத் தீங்கு உண்டாகல் ஆகாது. போற்றிப் பாடுவோம் அவற்றை! போற்றி! போற்றி!" என்று பெண்கள் பாடத் தொடங்குகின்றனர்.

"அந்த மாவலிச் சக்கரவர்த்தி வாழ்ந்த காலத்தில் நாம் வாழப் பெறாது போய்விட்டோம். குள்ள வடிவில் மெள்ள நடந்து வந்த அத்திருமால், மாவலியின் முன்னே உலகளாவிய பெரிய வடிவம் எடுத்தான். ஒரு கால் மண் தோய, மறுகால் விண் தோய எடுத்த அந்தப் பெரிய வடிவில் இரு கால்களுக்கும் எவ்வளவு நோவு வந்திருக்கும்! அவற்றுக்கு வாழ்த்துப் பாட அன்றே நாம் பிறக்காமல் போய் விட்டோம். அன்று உலகளந்த அத்திருவடிகளுக்கு இன்று நாம் பல்லாண்டு பாடுவோம்!"

இவ்வாறு பெண்களின் மன நிலை மங்களா சாசன வழியிலே செல்கிறது.

கடவுளின் தனித்துவத் தலைமைத் தன்மையை மறந்து அவன் மீது கொண்ட எல்லையற்ற அன்பால் அவனைக் குழந்தையாகக் கருதிக் காப்பாற்ற விழையும் பாங்கு 'மங்களா சாசனம்' எனப்படும். பிரேமையிலே தட்டுமாற்றம்; அன்பிலே இடமாற்றம். அதாவது காப்பவன் காப்பாற்றப்படுபவன் ஆகிறான்; காப்பாற்றப்படுபவன் காப்பவன் போல் வாழ்த்துகிறான். உடைமை உடையவன் போலே

உரிமை பாராட்டுகிறது; உடையவனோ உடைமை போலத் தாழ்ந்து அடிமைப் படுகிறான். இந்தத் தட்டு மாறிய நிலையிலே பிறக்கும் வாழ்த்தே 'பல்லாண்டு' எனப் பாடப்படுகிறது. சிறியவன் பெரியவனை வாழ்த்துகிறான்; ஜீவன் பரமனை வாழ்த்துகிறது.

தந்தை பெரியாழ்வார் சென்ற இந்தப் பல்லாண்டு நெறியை ஆண்டாளும் இங்கே பின்பற்றுகிறாள். நதியிலே வெள்ளம் சென்ற காலத்து அணை கட்டுவதற்கு வாய்ப்பில்லாதவர், வெள்ளம் வடிந்து நதி வற்றிய காலத்தே அணை கட்ட விழைவது போன்றது இது. இழந்த காலத்தின் இழவை எண்ணி நடக்கிற காலத்தே வயிறு பிடிக்கிற அன்புப் பிணைப்பு இப்பல்லாண்டாகும். தாயன்பின் தனி முத்திரை பல்லாண்டு நெறியில் பளிச்சிடும்.

'அன்றிவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி!' என்று ஆண்டாள் தன் பல்லாண்டைத் தொடங்குகிறாள்.

"உலகம் மாவலியால் கவரப்பட்டுக் கிடந்தது அன்று; உன்னைப் பிரிந்த வருத்தத்தாலே நாங்கள் நோவுபட்டுக் கிடக்கும் இன்று; ஆக இரண்டுக்கும் எத்தனை வாசி!"

"நீ உலகை மாவலியிடமிருந்து உன் கால்கள் நோக அளந்து மீட்டாய் அன்று! அதுபோலே எங்கள் தன்னபிமானம் மிகுந்த பெண்மையை மீட்டாய் இன்று!"

"நாட்டுக்கெல்லாம் அன்று திருவடிகளைத் தானம் செய்தாய். இன்றோ உன் அழகையும் குணத்தையும் எங்களுக்குத் தானம் செய்தாய் நீ யார் நோன்பு நோற்க அன்று வாமனனாய் வந்தாயோ? இன்றோ எங்கள் நோன்பு முடிக்க இவ்வாறு நடந்தாய்! உன்னை வணங்காதவர் தலைகளில் உன் பூப்போன்ற பாதங்களை வைத்தாய். உன் திருவடிகளுக்கென்றே நோன்பு நோற்று வருந்தும் எங்கள் தலைகளிலே அவற்றை வைக்கலாகாதா?"

இப்படிப்பட்ட ஆதங்கங்கள் எல்லாம் அந்த ஓரடி 'அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி!' என்பதிலே தெரிகிறதாம்.

உலகளந்த சரிதத்தை நினைவு கொண்ட அப்பெண்கள் திருமால் இராமனாகக் காடு மேடெல்லாம் நடந்த செயலை எண்ணிக் கலங்குகிறார்கள். 'இலங்கையை நோக்கி நடந்த அந்தப் பாதங்கள் எவ்வளவு புண்பட்டிருக்கும்!' என்று வருந்துகிறார்கள். இலங்கையை நோக்கி நடப்பதாலே மட்டும் இராவணனை அழிக்க இயலுமா? அங்குச் சென்று அவனுடன் போரிட்டு, அவன் தலைகள் வீழச் செய்து வதம் செய்ததிறல் எத்துணைப் பெரியது! காலுக்குப் பாடிய பல்லாண்டை அவன் வலிமைக்கல்லவா பாட வேண்டும்! இதோ பாடுகிறார்கள்.

'சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி!' திருவடிகளுக்கு வாழ்த்துப் போலே திருக்கைகளுக்கல்லவா இந்தப் பல்லாண்டு! அம்புமாரி பொழிந்த திறல் அவன் திருக்கரங்களில் தானே கிடந்தது!

மறுபடியும் கண்ணனுடைய பாதங்களுக்குப் பல்லாண்டு பாடத் தொடங்குகிறார்கள் பெண்கள். அளந்த பாதம், நடந்த பாதம் இவற்றுக்குப் பல்லாண்டு ஆயிற்று, எனவே, வளைந்த பாதத்துக்கு வாழ்த்து வருகிறது!

'பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றி!'

அளந்த பாதத்தால் மாவலி வாழ்ச்சி பெற்றான்; நடந்த பாதத்தால் முனிவர்கள் வாழ்ச்சி பெற்றார்கள். கண்ணனான அவன் தன் பாதத்தால் சகடத்தை உதைத்து அசுரனைக் கொன்றதால் அவனே புகழ் பெற்றான். அந்தப் புகழுக்குப் போற்றி பாடுவோம்! பெற்ற தாயும் கூட உதவாத நிலையிலே விளையாட்டாகச் சகடா சுரனைக் கொன்ற மாபெரும் புகழ் அது!

சகடாசுர வதம் கண்ணன் மிக்க சிறு குழந்தையாய் இருந்த பருவம் ஆகும். ஆயின் பருவம் வளர்ந்து சிறுவனாக ஓடி ஆடி விளையாடுகிற பொழுது கண்ணன் செய்த மாயங்கள் எண்ணில் அடங்கா.

கம்சன் ஏவலால் இரண்டு அசுரர்கள் கண்ணனைக் கொல்ல வந்தனர். ஒருவன் விளாமரமாய் நின்றான்; இன்னொருவன் பசுங்கன்றாக வடிவெடுத்தான். இதை அறிந்த கண்ணனாகிய அந்தப் பாலன் கன்றுக்குட்டியைக் கையால் தூக்கி விளாமரத்தின் மீது, கைத்தடியை வீசுவது போல, வீசி ஒரே தாக்குதலில் இரண்டு அசுரர்களையும் கொன்று தீர்த்தான்.

இதனை எண்ணிப் பார்க்கிற ஆண்டாள் இதற்கும் பல்லாண்டு பாடுகிறாள்.

'கன்றுகுணிலா எறிந்தாய் கழல் போற்றி!'

இங்கே திருவடிக்குப் பல்லாண்டு பாட வந்த ஆண்டாள் அத்திருவடியில் அணியப்பட்ட வீரக் கழலுக்குப் போற்றி பாடுகிறாள். கழல், வெறும் பாதத்தைக் காட்டாமல் மடக்கிய பாதத்தைக் காட்டுகிறதாம். அளந்த பாதம், நடந்த பாதம், உதைத்த பாதம் போலே இங்கே வளைந்த பாதத்துக்குப் பல்லாண்டு பாடியாயிற்று.

மேலே பல்லாண்டு தொடர்கிறது. கன்றுகளைக் காக்கக் கண்ணன் மலையையே குடையாகப் பிடித்தான் அன்றோ! பசுக்களிடத்தும் ஆய்க்குலத்திடத்தும் அவன் கொண்ட பேரன்பின் விளைவன்றோ மலையையும் குடையாகத் தூக்கிப் பிடித்துக் காப்பாற்றிய பாங்கு! அந்த வலிமையை எண்ணி அதற்குக் காரணமான குணத்துக்குப் பல்லாண்டு பாடுகிறாள்.

'குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி!'

கடைசியில் கண்ணன் கையிலே பிடித்துள்ள வேலின் வலிமைக்கும் பல்லாண்டு பாடுகிறாள். தந்தை நந்தகோபனைப் போலவே, மாடு மேய்க்கும் கண்ணன் வேலாயுதம் தாங்கியே காட்டிற் செல்வான் அன்றோ! பகைவர்களை வெல்லும் அந்த வீர வேலுக்குப் பல்லாண்டு என்கிறாள்.

பாடுகிற பெண்களின் கவிதைச் சுவை அறுவகைப்பட்ட உணவுச் சுவை போல அமைந்துள்ளதாம். “அடி போற்றி! திறல்போற்றி! புகழ் போற்றி! கழல் போற்றி! குணம் போற்றி! வேல் போற்றி!” என்று இவர்கள் அறுசுவை உணவு படைத்து மகிழ்கிறார்கள்.

கண்ணனின் வடிவழகும் நடையழகும் இப்பெண்களைப் படுத்திய பாட்டால் உண்டான பல்லாண்டுப் பாசுரத்தைப் பாடி நாமும் 'போற்றி! போற்றி!' என்போம்.

*“அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி*
*சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி*
*பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி*
*கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி*
*குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி*
*வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி*
*என்றென்றுன் சேவகமே ஏற்றிப் பறைகொள்வான்*
*இன்றுயாம் வந்தோம் இரங்கேலோர் எம்பாவாய்!”*

**நெருப்பென்ன நின்றவன் :**

பெண்கள் கண்ணனுக்குப் பல்லாண்டு பாடவும், அதைக் கேட்ட அவன், “பறைகொள்ள வந்தோம் என்று கூறிய நீங்கள் பல்லாண்டு பாடினீர்கள். இது என்ன சேராச் சேர்த்தியாக இருக்கிறதே!” என்று வினவினான்.

அதற்குப் பதில் கூறினார்கள் பெண்கள். "கண்ணா! நாங்கள் பறை என்று கேட்க வந்தது ஒப்புக்காகவே. உண்மையில் உன்னைத்தான் நாங்கள் விரும்பி வேண்டுகிறோம்!" இவ்வாறு அவனிடம் பேசும்பொழுது, அவனுடைய குணாதிசயங்களையும் எடுத்துக் கூறிப் போற்றுகிறார்கள்.

கண்ணன் பிறந்த கதையும் வளர்ந்த விதமும் ஆச்சரியமானவை ஆயிற்றே! சிறையிலே கண்ணனைப் பெற்றாள் தேவகி. நந்தகோகுலத்திலே அவனை வளர்த்தாள் யசோதை! பிறந்தது ஓரிடம், வளர்ந்தது வேறிடம். இப்படிப்பட்ட திருவிளையாடலைப் புரிந்த கண்ணனைப் பாடுகிறார்கள்.

***"ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்***
***ஒருத்தி மகனாய் ஒளித்து வளர..."***

இப்படி இரவிலே ஒளிந்து ஓட வேண்டிய கட்டாயம் ஏன்? கண்ணன் பிறப்பதைச் சிறிதும் விரும்பாத பிறவிப் பகைவன் கம்சன், அவனை எப்படியாவது கொன்றுவிடவேண்டும் என்று துடித்தான். கண்ணன் பிறந்ததைத் தரித்துக்கொள்ள முடியாத கம்சன் நெஞ்சில் எப்பொழுதும் அவன், நெருப்பாக நின்றான். இதைப் பெண்கள் பாடுகிறார்கள்.

***'தரிக்கிலான் ஆகித் தான் தீங்கு நினைந்த***
***கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்***
***நெருப்பென்ன நின்ற நெடுமாலே!'***

கம்சனுடைய கொடுங்கோல் தன்மை அந்நாட்டு மக்கள் வயிற்றெரிச்சலை வளர்த்தது. அந்த வயிற்றெரிச்சல்தான் கண்ணன் வடிவத்தில் கம்சன் நெஞ்சினில் நெருப்பாக நின்று தகித்தது. 'தான் தீங்கு நினைந்த' என்பதிலே ஒரு பேருண்மை காணக் கிடக்கிறது. கம்சனுக்குத் தீமை கண்ணனால் விளைந்தது

அல்ல; கம்சனே கண்ணனுக்குத் தீமை எண்ணி, அவனைக் கொல்லச் சூழ்ச்சிகள் மேற்கொண்டான். தானே தன் கற்பனையில் கண்ணனைத் தன் பிறவிப் பகைவனாக எண்ணிக் கொண்டு வெறுப்பை அவன் பிறப்பதற்கு முன்பேயே வளர்த்துக் கொண்டு தீமை சூழத் தொடங்கினான். தீமையைத் தானே வரவழைத்துக் கொண்டானே தவிர, பிறராலே தீமை அவனுக்கு வரவில்லை.

இவ்வாறு கண்ணனை விளித்துப் பேசிய பெண்கள் "உன்னை நாங்கள் வேண்டுவதெல்லாம் உனக்கு அடிமை செய்ய நீ எங்களுக்கு அனுமதி தர வேண்டும். நாங்கள் விரும்பும் செல்வம், திருமகளும் வேண்டும் கைங்கர்யமாகிற தொண்டே ஆகும். அந்தச் சேவகம் செய்ய வாய்ப்புத் தரவேண்டும். நேற்றுவரை உன் பெயரைக் கூடச் சொல்லப் பேறில்லாத நாங்கள், இன்று உன் குணங்களைப் பாடப் பெற வேண்டும். உன் கல்யாண குணங்களைப் பாடி மகிழ்ச்சி பெறுவோம். அதனாலே உன்னைப் பிரிந்த பிரிவுத் துன்பமும் நீங்கப் பெற்றோம். இதுதான் நாங்கள் வேண்டுகிற பறை!" என்றனர்.

*"ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்*
*ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்*
*தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த*
*கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்*
*நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை*
*அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்*
*திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி*
*வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்!"*

## ஆலின் இலையாய் அருள்

'பறை தருதியாகில்' என்று சென்ற பாசுரத்தில் பெண்கள் கேட்டதைக் கண்ணன் நெஞ்சில் நன்றாகப் பதித்துக் கொண்டான்

போலும்! 'பறை கேட்கிற நீங்கள் எந்த வகையான நோன்பு நோற்கப் போகிறீர்கள்? அதற்கு உங்களுக்குத் தேவையானவை என்ன?' என்று கண்ணன் பெண்களிடத்தே கேட்டான்.

பெண்களும் பின்வருமாறு பதில் கூறினார்கள். "கண்ணா! உன்னைக் காண்பதற்கான காரணமான நோன்பைக் கொண்டு மழை வேண்டி அதைச் செய்யச் சொன்னார்கள். மேலையார்களான முன்னோர்கள் அமைத்த இந்நோன்பு மார்கழி மாதம் நீராடுதலே ஆகும். நீராட்டமாகிய அக்கருமத்தை முடிக்க, நீ எங்களுக்குச் சங்குகள், பறைகள், தீபம், கொடி, பல்லாண்டு பாடுவோர், விதானம் ஆகிய உபகரணங்களைத் தந்து அருள வேண்டும்!" என்றனர்.

*'மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்*
*மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்'*

என்று தொடங்குகிறது இப்பாசுரம். கண்ணன் தங்களை மயக்கிய மோகச் செயலைக் குறித்த பெண்கள் 'மாலே!' என்றனர் 'மால்' என்பது மயக்கத்தைக் குறிப்பது. தன்னுடைய அழகு, குணம், செயல் இவற்றால் தன்மேல் பெண்கள் ஆசை கொள்ளுமாறு செய்ததால் 'மால்' எனப்பட்டானாம். இந்த அபலைகளான ஆய்ச்சிகளிடத்தே அவன் கொண்டுள்ள மோகம் எல்லையற்ற தாகையாலே 'மால்' எனப் பட்டான். அடியார்களிடத்தே அளவற்ற மோகம் கொண்டவன் என்னும் பொருளினைக் கொண்ட சொல் 'மால்' ஆகும்.

அவன் 'மால்' ஆன விதம் எப்படித் தெரியுமா? மணிவண்ணன் ஆனதாலே மால் ஆனான் என்கிறது பாசுரம். விலை மதிப்பற்ற தன்மையும் ஒளியும் அழகும் உடைய மணி போன்ற வடிவம் உடையவன் அவன். மணியின் மென்மை, ஒளி, குளிர்ச்சி யாவுமேதான் இவன் வடிவம். மணிவண்ணனாகத்

தோன்றுவதால் பிறருக்கு இவன் மேல் மயக்கம் உண்டாயிற்று. ஆகவே 'மால்' ஆகிவிட்டான்.

இந்தப் பெண்கள் முன்பெல்லாம் அவனுடைய மேன்மையையும் பரத்துவத்தையும் குறிப்பிடும்படியாக, 'நாராயணனே!', 'தேவாதி தேவா!' என்றெல்லாம் அழைத்தார்கள். ஆனால், இப்போதோ அவனுடைய எளிமையும் காதலும் தங்களை மோகிக்கச் செய்து விட்டதாலே, 'மாலே! மணிவண்ணா!' என்று அழைக்கிறார்களாம்.

பிறகு இப்பெண்கள் தாங்கள் வேண்டுகின்ற கருவிகள் பற்றி ஒன்றன் பின் ஒன்றாகக் குறிப்பிட்டுக் கேட்கிறார்கள்.

*"ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன*
*பாலன்ன வண்ணத்து உன்பாஞ்சசன்னியமே*
*போல்வன சங்கங்கள் போய்ப் பாடுடையனவே"*

உலகங்களை நடுங்கச் செய்த சங்கு, திருமால் பாரதப் போரில் எடுத்து ஊதிய பாஞ்ச சன்னியம் ஆகும். அதைப் போன்ற பால் நிறம் உள்ள சங்குகள் பல நோன்புக்குத் தேவை என்கிறார்கள் பெண்கள். பிறரை நடுங்க வைக்க இவற்றைக் கேட்கவில்லையாம்; தோழியர்களைத் துயில் எழுப்பவே இவற்றைக் கேட்கிறார்களாம்.

இன்னும் என்னென்ன கேட்கிறார்கள்? மிகவும் பெரிய பெரிய பறைகள் வேண்டும். நோன்பிற்குச் செல்லும் பொழுது எதிரே நின்று 'பல்லாண்டு பாடுவோர் வேண்டும். இருள் பிரியாத காலைப் பொழுதாகையாலே, முகங்களைத் தெரிந்து கொள்ளக் கைவிளக்குகள் தேவையாம்! தாங்கள் ஒன்று சேர்ந்து செல்கிறபொழுது கூட்டத்துக்கு அடையாளம் காட்டக் கொடி தேவையாம். நடந்து போகிற பொழுது பனித்துளி விழாதவாறு காக்க, நான்கு புறமும் இழுத்துப் பிடித்துக் கொள்ளும் மேற்கட்டியாகிய விதானம் தேவையாம். ஆக இவற்றை வரிசையாக அடுக்கிக் கேட்கிறார்கள் ஆய்ப் பெண்கள்.

*"சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே*
*கோல விளக்கே கொடியே விதானமே!"*

என்று கேட்கிறார்கள்.

இவற்றை எல்லாம் அந்தக் கண்ணன் அருள்கூர்ந்து தர வேண்டும். அவனுக்கு இவற்றை எல்லாம் அருளும் சக்தி நிறைய உண்டென்பதைப் பாசுர இறுதி வரி குறிப்பிடுகிறது.

"கண்ணா! இவற்றை எல்லாம் அளிப்பது உனக்க மிகஎளிய செயல்தான். அரிய செயல் என்று ஒன்றுமே உனக்கு இல்லையே! ஆதாரமற்ற ஆலந்தளிரிலே சிறு குழந்தையாகப் பள்ளி கொண்டு உலகம் அனைத்தையும் உண்டு வயிற்றிலே வைத்துக் காக்கும் பெரிய சக்திமான் அன்றோ நீ!" என்கிறார்கள்.

*"ஆலின் இலையாய் அருள்"*

பாசுரம் முழுவதையும் காண்போம்.

*"மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்*
*மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்*
*ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன*
*பாலன்ன வண்ணத்து உன்பாஞ்ச சன்னியமே*
*போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே*
*சாலப் பெரும்பறையே பல்லாண்டு இசைப்பாரே!*
*கோல விளக்கே கொடியே விதானமே*
*ஆலினிலையாய் அருளேலோ ரெம்பாவாய்!"*

**கூடி இருந்து குளிர வேண்டும்**

நோன்பிற்கு வேண்டிய உபகரணங்களைக் கேட்ட பெண்களிடத்தே கண்ணன், 'இவைதானா உங்கள் தேவை? அவற்றைத் தருகிறேனே!" என்று கூறினான். பாஞ்ச

சன்னியத்துக்கு ஈடான வெள்ளை விளிசங்கைக் கொடுத்தான்; பாரோர் மகிழக்கறங்கின பறையைக் கொடுத்தான் ; பல்லாண்டு பாடப் பெரியாழ்வாரை அனுப்பினான். கோல விளக்குக்கு எங்கே போவான்? ஆகையால் நப்பின்னையையே விடுத்தான். தனக்கே உரிய கருடக் கொடியையும் தந்தான். மேற்கட்டியாகப் பிடித்துக் கொள்ளத் தன்னுடைய அத்தவாளம் என்னும் மேற்போர்வையைக் கொடுத்தான். இவ்வாறு விரதத்துக்கு வேண்டிய எல்லாம் அளித்தான். இவற்றை எல்லாம் பெற்றும் பெண்கள் இன்னும் அவனிடமிருந்த நகரவில்லை.

“எம்பெருமானே! மார்கழி நோன்புக்கு வேண்டிய சாதனங்களைப் பற்றிக் கூறியது போலவே, நோன்பு முடிந்த பிறகு உன்னிடம் பெற வேண்டிய பரிசுகளும் உள்ளன. அவற்றைப் பற்றிக் கூறலாமா?” என்று கேட்டனர். ‘சன்மானங்களைப் பெற்று நாங்கள் மகிழ வேண்டும்!’ என்றனர்.

இவ்வாறு சன்மானங்களைக் கேட்கிற பெண்கள் அந்தக் கண்ணனை அவனுக்குகந்த பெயரிட்டு அழைத்தே கூப்பிட எண்ணினர். கேசவன், நாராயணன் என்றெல்லாம் நாமங்களை இட்டு அழைத்தாலும் அவை அவனுக்கு நிறைவு தரமாட்டா. அவனுக்கே உரித்தான ஆய்ச்சிகளுக்கு உகந்த திருநாமம் ‘கோவிந்தா’ என்பது. பெரிய மழையினின்று தங்களைக் காப்பாற்றிய தெய்வம் அல்லவா கோவிந்தன்! அவனைக் கோவிந்தா என்றழைப்பதிலே தங்களுக்கு மகிழ்ச்சி; அவனுக்கும் மகிழ்ச்சி. ஆகவே, ஆய்ப் பெண்கள் அவனை விளித்து,

*“கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா!”*

என்கின்றனர்.

இதிலே அருமையான சொற்சுவை காணப்படுகிறது. கண்ணன் தன் அடி பணியாத பகைவர்களை வெல்லுகின்ற சீர்மை

உடையவன் என்பதைக் கூறுகிறது இவ்வரி. அவனைக் கூடாத எதிரிகளை வெல்கிறான் என்பதாலே அவனுடன் கூடிய அன்பர்களுக்குத் தோற்கிறான் என்றாகிறதல்லவா! இந்தக் கண்ணன் தன்பால் அன்பு கொண்டார்க்கு அடியவன் ஆகையாலே தோற்று விடுகிறான். அன்பெனும் பிடியில் அகப்படும் மலை அவன்; அன்பெனும் குடிலில்புகும் அரசும்கூட; 'கூடினார்க்குத் தோற்கும் சீர்க்கோவிந்தன்' என்றும் அழைக்கலாம் போலும்!

கூடாதவர்களை வலிமையால் தோற்கச் செய்கிறான். கூடினவர்களைக் குணத்தாலும் அழகாலும் தோற்கச் செய்கிறான். பகைவர்கள் அவன் அம்புக்குத் தோற்கிறார்கள் ; அடியார்களின் அன்பிற்கு அவன் தோற்கிறான். இறைவனுடைய எளிவந்த இந்தச் சீலகுணத்தை இவ்வாறு புகழ்ந்த பெண்கள் மேலே "உன்தன்னைப் பாடிப் பறை கொண்டு யாம் பெறு சம்மானம்' என்று தங்கள் வேண்டுகோளை நீட்டி முழக்குகிறார்கள்.

இவை என்ன வேண்டுகோள்களா? எம்பெருமான் இவர்களுக்குத் தோற்ற பின் இவர்கள் வேண்டுதல் ஏது? அவனிடம் சர்வ உரிமையும் கொண்டாடும் மிடுக்குத் தோன்ற 'யாம்பெறு சம்மானம்' என்கின்றனர். 'யாம்' என்கிற அந்தச் சொல்லிலே இறைவனுக்கு ஆட்பட்ட அனுபூதி அல்லவா தொனிக்கிறது? இறைவனுக்கு ஆட்பட்ட மகிழ்ச்சியிலே 'யாம்' என்பது அபிமான துங்கம் ஆகிறது. இப்படி அபிமானம் பாராட்டுவது உகந்ததுதானாம்.

நாடு புகழும்படியான சம்மானம் வேண்டுமாம். என்னென்ன தெரியுமா?

பெண்ணியல்புக் கேற்ப இவர்கள் தங்களுக்குத் தேவையான ஆபரணங்களைப் பட்டியல் இடுகிறார்கள். முன்கையிலே அணியும் காப்பு, மேல் தோளிலே அணியும் தோள் வளை, காதில் இடும்

தோடு, அதிலே மேலே அணியும் செவிப்பூ, பாதங்களில் அணியும் பாதசரம் ஆகியவற்றைக் கேட்கிறார்கள்.

"இவ்வாறு ஆபரணங்களை நீ கொடுக்க, நாங்கள் அணிவோம்; அல்லது நீயே எங்களுக்கு அணிவிக்கவும் அணிவோம். நீ தரப் போகிற புத்தாடை உடுப்போம். அதன் பிறகு எங்கள் முழங்கைகள்வரை வழியும்படியாக அக்கார அடிசிலை உண்போம். எல்லோருமாகச் சேர்ந்து உண்டு மகிழ்ந்து குளிர்வோம்." இவ்வாறு தங்களுடைய ஆசையை அப்பெண்கள் வெளியிட்டார்கள்.

பரிசுப் பொருள்களைப் பெறுவதும், ஆடையை உடுப்பதும் போகக் கடைசியில் கூறியுள்ளது மிகவும் சுவையானதல்லவா!

*"ஆடை உடுப்போம் அதன்பின்னே பாற்சோறு*
*மூட நெய்பெய்து முழங்கை வழிவாரக்*
*கூடி இருந்து குளிர்ந்து"*

என்பது சர்க்கரைப் பொங்கல் பற்றிய செய்தி அல்லவா !

சிங்கப்பாட்டு முன்னமே கண்டோம்; இங்கே பொங்கற்பாட்டைச் சுவைக்கிறோம்.

இந்தச் சர்க்கரைப் பொங்கல் வெறும் சாதமும் சர்க்கரையும் கலந்தது மட்டுமே என்று எண்ணலாகாது. 'பாற்சோறு', 'நெய்பெய்து', 'வழிய' என்கிற மூன்று சொற்களையும் கூட்டிப் பார்த்தால்தான் இந்த இனிய அடிசிலின் சுவை தெரிய வரும். பாலிலே சாதத்தைக் கொதிக்கச் செய்து நெய்யிலே அதனைப் பெய்து, அதாவது நெய்யை அதிலே பெய்து பாகுபாகாக, வழியும் அளவு வேகச் செய்து தயாரிக்க வேண்டும் என்னும் நுட்பம் இங்கே தெரிகிறது.

பால், சர்க்கரை, நெய், சாதம் - நான்கும் கலந்து கொதித்த பின் ஒன்றிற்கொன்று வேறுபாடு தெரியாதபடி கலந்திருக்க

வேண்டுமாம். நெய் எடைச் சோறாம்; நெய்யும் சாதமும் சரிக்குச் சரியாகக் கூட்ட வேண்டுமாம். நெய், சோற்றின் இடையிலே இல்லாமல், சாதம் நெய்யின் இடையிலே கலந்து இருக்க வேண்டுமாம். இப்படி ஒரு அக்கார அடிசில் தயாரிக்கச் சொல்கிறாள், ஆண்டாள்.

'நெய் உண்ணோம்; பால் உண்ணோம்' என்றெல்லாம் நோன்பு மேற்கொண்டவர்கள் இப்பொழுது விரதம் முடிந்ததாகையாலே பால் சோறு மூட நெய் பெய்து உண்ண விரும்புகிறார்கள். மையிட்டு எழுதோம்; மலரிட்டு முடிவோம்' என்று முன்பு கூறியவர்கள் இப்பொழுது கண்ணனை அடையப் பெற்றதாலே கடகம், பாடகம் அணிய ஆசைப்படுகிறார்கள்.

'முழங்கை வழிவார' என்பதில் சர்க்கரைப் பொங்கலின் சுவை முழுவதும் வழிகிறதல்லவா! முழங்கைவரை நெய் வழிகிறதென்றால் இந்தப் பொங்கலில் அதன் மிகுதிதான் என்னே!

இந்தப் பாசுரத்தைத் திருவரங்கத்திலே கூரத்து ஆழ்வானின் குமாரர் பட்டர் விளக்கி உரை ஆற்றுங்கால், அங்கே இருந்த நம்பி திருவழுதி வளநாடு தாசர் என்பவர் ஒரு வினா விடுத்தாராம்.

'முழங்கை வழியாக வழிந்து விட்டது என்றால் ஆய்ப்பெண்கள் வாயிலே நெய் படாதோ?' என்று கேட்டார்.

அதற்குப் பட்டர், 'கண்ணனிடத்தில் தங்கள் கண்களையும் நெஞ்சையும் பறிகொடுத்திருக்கிற பெண்களுக்குச் சோறு வாயில் பட்டால் அன்றோ நெய் வாயில் படப் போகிறது!' என்று நயம்படப் பேசினாராம்.

'இப்படி எல்லாம் பால் சோறு உண்டு சுவைப்பதும் பரிசுகள் பெறுவதும் தனியாக அனுபவிக்க அல்ல; எல்லோருமாகக் கூடி இருந்து சுவைப்பதற்கே!' என்பதைப் பாசுர இறுதி அடி

வலியுறுத்துகிறது. 'கூடி இருந்து குளிர்ந்து' என்பது அது. 'மதி நிறைந்த நன்னாளில், கூடி இருந்து, உன்தன்னைப் பாடிக் குளிர வேண்டும்' என்று கூட்டிப் பார்த்தால் திருப்பாவைச் செய்தி பளிச்செனத் தெரியும். 'உன்னைப் பாடவேண்டும்; உடம்பு கூட வேண்டும்; நெஞ்சு குளிர வேண்டும்!' என்கிற மூவகை மகிழ்ச்சிகள் ஒன்றி விட்டன இங்கு. இதோ பாசுரம் :

*"கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா உன்தன்னைப்*
*பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்*
*நாடு புகழும் பரிசினால் நன்றாகச்*
*சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே*
*பாடகமே என்றனையப் பல்கலனும் யாமணிவோம்*
*ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு*
*மூட நெய்பெய்து முழங்கை வழிவாரக்*
*கூடி இருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்!"*

# 6. கருவறை

## உன் உறவு ஒழிக்க ஒழியாது

கீழ் இரண்டு பாசுரங்களில் ஆய்ப் பெண்கள் நோன்பிற்குத் தேவையானவற்றையும் தாங்கள் பெற விரும்பிய சம்மானங்கள் பற்றியும் கூறினார்கள். கண்ணனும் அவர்கள் இன்னும் தன்னை விட்டு அகலாமல் இருக்கும் காரணத்தை மனக் கண்ணில் கண்டு கொண்டான், "இப் பெண்கள் ஊராருக்காக ஒரு பறையையும் தங்களுக்காக இன்னொரு பறையையும் விரும்புவதாகக் கூறுகிறார்கள். நோன்பிற்கு வேண்டியது போலப் பறையைக் கேட்டாயிற்று. இனி இவர்கள் தங்களுக்குத் தேவையான உள்ளார்ந்த வேண்டுகோளை விடுப்பார்கள் போல் தோன்றுகிறதே!" என்று எண்ணினான்.

ஆகவே, இவர்களிடம் சில வினாக்களை விடுத்துப் பதில்கள் பெற்ற பின்னரே எதையும் செய்யலாம் என்று முடிவு செய்தானாம்.

'நீங்கள் இனிமேல் எதைக் கேட்டாலும் உங்கள் நிலைமை தெரியாமல் நான் தரலாகாது. 'என்னிடம் நீங்கள் விரும்புவதைப் பெற்றுக் கொள்ள உங்களுக்குத் தகுதிகள் வேண்டும். அத் தகுதிகளைப் பெற நீங்கள் மேற்கொண்ட நெறிமுறைகள் ஏதேனும் உண்டா? என்ன உபாயம் அல்லது சாதனம் நீங்கள் செய்திருக்கிறீர்கள்?' என்ற கேள்விகளையும் போட்டு அவர்களைத் திணறச் செய்தான்.

இக்கேள்விகளுக்கு அவர்கள் கூறுகிற பதில்தான் இந்த இருபத்தெட்டாவது பாசுரம் ஆகிறது. 'என்னென்ன முயற்சிகள்

மேற்கொண்டு உங்கள் தகுதியை நிலைநிறுத்துகிறீர்கள்?' என்று அவன் கேட்டதற்கு அவர்கள், 'முயற்சிகள் மேற்கொள்ளாமல், தகுதிகளே இல்லாமல், உன்னை மட்டுமே நம்பி இருக்கிற ஒரு பெரிய தகுதி உள்ளதே!' என்று கண்ணனையும் மடக்கி விடுகிறார்கள்.

ஆத்மாவின் உய்வுக்குத் திறவு கோலாக இருக்கும் அடைக்கல நெறியின் உயிர்நாடியை இந்தப் பாசுரத்திலே ஆண்டாள் மிகத் தெளிவாக வெளியிட்டுள்ளாள். கைம் முதல் இல்லாமை, இறைவனை அன்றி வேறு கதி இல்லாமை, அவனுக்கே ஆட்படல் அன்றி வேறு எவர்க்கும் ஆட்படாமை ஆகிய மூன்று தகுதிகளே இறைவனை அடைய உதவுவன என்பது வைணவ சமயத் தத்துவம். இவற்றை இப்பாசுரத்தில் ஆண்டாள் ஆய்ப் பெண்கள் பேச்சிலே வெளியிட்டுள்ளாள்.

கண்ணன் பெண்களை நோக்கி "நீங்கள் விரும்பும் பறை என்ன என்று எனக்குத் தெரிந்து விட்டது. அதை நீங்கள் பெறுவதற்கு ஏதாவது உபாயத்தைப் பயின்று பின்பற்றி இருக்கிறீர்களா?" என்று கேட்கிறான்.

ஒரு சாதனத்தைப் பற்றி அனுட்டானம் மேற்கொள்ளல் உறுதிப் பொருளைப் பெற உபாயம் ஆகும். நெறிப் பயிற்சியில் தலை நின்றால் உறுதிப் பொருள் கைகூடும். இவர்கள் எந்த நெறி வழியே நின்றார்கள்? செயல்முறை யோகம், அறிவுணர்வு யோகம், அன்பு நிறை பக்தி யோகம் ஆகிய கர்ம, ஞான, பக்தி யோகங்களை மேற்கொண்டார்களா?

ஆய்ப் பெண்கள், "எங்களுடைய ஆகாரத்தையும் அறிவையும் பார்த்தால் நாங்கள் இந்த உபாய முறைப் பயிற்சிகளுக்குத் தகுதி அற்றவர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளலாமே! இடக்கைக்கும் வலக்கைக்கும் கூட வித்தியாசம் தெரியாத அறிவற்ற எங்களுடைய குறைகளை எல்லாம், நிரப்ப வல்ல, நிறையான உன்னை எங்கள்

குலத்திலே எங்களோடு ஒருவனாகப் பெற்று விட்டோமே! உன்னுடைய முழுமையில் குறை இருந்தால் அன்றோ நாங்கள் இந்த முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும்! உன்னை எங்கள் உறவாக, நாயகனாகப் பெற்று விட்ட பிறகு, அது ஒன்றேதான் எங்கள் கைம்முதல். இந்தத் தகுதி ஒன்றை வைத்தே நீ எங்களுக்கு நாங்கள் விரும்பும் பறையை அருளலாம்!" என்று பதில் பேசுகிறார்கள்.

'கண்ணா! எங்களுடைய பழக்க வழக்கங்களையும் அறிவில்லாத தன்மையையும் கூடவே இருக்கும் நீ நன்றாகத் தெரிந்து கொண்டிருப்பாயே! நாங்கள் கூறியா இதை நீ அறியப் போகிறாய்?' என்று எடுத்த எடுப்பிலேயே தாங்கள் யாவர் என்பதைத் தெளிவு படப் பேசுகிறார்கள்.

*"கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம்*
*அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம்!"*

'அறிவு கேட்டுக்கு எல்லை நிலமாய் ஆசாரமே இல்லாத, பசுக்களுக்குப் பின்னே சென்று மேய்ப்பதுதான் எங்கள் தொழில்' என்று கூறினார்கள்.

"பசு, எருது, கன்று, எருமை ஆகிய கூட்டமான காலிக்ளை மேய்ப்பது கூட ஒருவகையிலே குலத் தொழில் ஆகும். அதனால் கர்ம யோகம் செய்கிறவர்களாய் எங்களை எண்ணலாம் என்று கருதாதே! இவற்றை மேய்ப்பதைத் தொழிலாக நாங்கள் கொள்ளவில்லை. கறந்து பால் குடிப்பதற்காகத்தான் பசுக்களை மேய்க்கிறோம். கர்ம யோகத்திலே இது அடங்காது!" என்று பெண்கள் பேசுகிறார்கள்.

உடனே கண்ணனும், 'சரி, கறவைகள் பின் நீங்கள் போகும் பொழுது புண்ணிய இடங்களுக்கும் போய் வாழ்ந்திருப்பீர்கள் அல்லவா! அந்தப் புண்ணியத்தைக் கணக்கில் எடுத்துக்கொண்டு உங்களுக்கு அருள் தரலாம் அல்லவா?' என்று கேட்டான் போலும்!

ஆகவே, அவர்கள், 'பசுக்கள் புல்மேயும் இடம்தான் நாங்கள் கண்ட புண்ணிய பூமி. வேறு புண்ணிய இடவாசம் செய்ததில்லை!' என்றார்கள்.

'கானம் சேர்ந்து' என்று இவர்கள் கூறியதைக் கேட்ட கண்ணன், கானம் சேர்ந்து நீங்கள் வாழ்ந்ததைத் துறவிகள் நிலையில் கொள்ளலாம் அல்லவா? அதுவும் அறம்தானே!' என்று கேட்டானாம். அதற்கு அவர்கள், 'நாங்கள் காட்டில் ஒன்று சேர்ந்து வாழ்ந்த பொழுது எந்த நியமங்களையும் பின் பற்றியதில்லை. உண்பது கூட எங்களுக்கு முறையாகத் தெரியாது. தனித் தனியாக சுத்தமாக உண்பது கிடையாது. ஒரே கலத்தில்தான் எச்சில் துப்பல் பாராமல், கூட்டாகச் சேர்ந்து கையிட்டு உணவு உண்போம். அதுவும்கூட உட்கார்ந்து முறைப்படி சாப்பிடுவது கிடையாது. பசுக்கள் பின்னே போவதால் அவை நின்றால் நிற்பது, சென்றால் செல்வது இப்படியாக முறையின்றிச் சாப்பிடுவோம்!' என்றனர்.

'சரி, உங்களுக்கு அறிவு உண்டல்லவா? ஞானயோகம் உள்ளவர்களாகக் கொள்ளலாமா?' என்று கண்ணன் கேட்டான். அதற்கு அவர்கள் கூறும் பதில் இதோ :

*'அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து'*

"அறிவு ஒன்று கூட இல்லாதவர்கள் நாங்கள்!" என்று தங்கள் அறியாமையை வெளிட்டார்கள். 'மாடுமேய்க்கும் எங்களுக்கு ஏது அறிவு? எங்களுக்கேது ஞானம்?" என்றனர்.

'அப்படியானால் உங்களைக் கைவிட வேண்டியதுதான். வேறுவழியில்லை!' என்றான் கண்ணன்.

'என்ன பேசுகிறாய், கண்ணா? எங்கள் அறியாமையை நோக்கினால் நீ சொல்வது சரியானாலும் நாங்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டோம். அறிவொன்றும் இல்லாத குலம்தான் எங்கள் ஆய்க்குலம்; நாங்களும் அறிவில்லாதவர்கள்தான் என்றாலும்,

இந்த இழிந்த குலத்திலே உன்னைப் பெற்று விட்ட புண்ணியம் அல்லவா எங்களுக்கு வந்து விட்டது!"

*"அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து உன்றன்னைப்*
*பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்!"*

"எங்களுக்கு ஏற்பட்டுள்ள புண்ணியம் நீ எங்கள் நடுவே பிறந்தது எங்களுக்காக உள்ள ஏற்றம் அல்லவா?" என்கிறார்கள் அப்பெண்கள்.

'என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? அறிவொன்றுமில்லாத என்று உங்களைப் பற்றிக் கூறிக்கொண்டே, நீங்கள் புண்ணியம் உடையவர்களாகவும் பேசுகிறீர்களே! இரண்டும் பொருந்தாதே!' என்று கேட்டான், கண்ணன்.

இதற்கும் பதில் கூறுகிறார்கள் அந்த ஆய்ப்பெண்கள். 'நாங்கள் இவ்வாறு பொருந்தாதவற்றைப் பேசுவதாலேயே எங்கள் அறியாமை தெரிகிறதல்லவா!" என்றார்கள்.

'ஆகவேதான், நான் உங்களைக் கைவிட வேண்டியதுதான்! என்று மறுபடியும் கூறினான் கண்ணன்.

பெண்கள் பேச்சை விடுவதாக இல்லை. தொடர்ந்து கூறுகிறார்கள். "கண்ணா! நீ குறைவொன்றும் இல்லாதிருக்க, நாங்கள் அறிவொன்றும் இல்லாதிருக்க, இரண்டும் பொருத்தம் ஆயிற்றே. குறைவொன்றும் இல்லாத கோவிந்தன் நீ. அறிவு ஒன்று கூட இல்லாத எங்களுக்கு நீ அன்றோ அரண். எங்கள் பள்ளத்தை மூட உன்னுடைய மேடு போதாதோ? எங்கள் இல்லாமையாகிய குறை அல்லவா நிறையாய் இருக்கிற உன் அருளுக்கு இலக்காகும் வழி ஆகிவிட்டது! ஆகவே நீ எங்களை ஏற்றுக்கொள்ள வேண்டும்!" என்றனர்.

"சரி; நான் குறைவொன்றும் இல்லாதவன்தான் நீங்களும் அறிவொன்றும் இல்லாதவர்கள்தான். இந்த இரண்டிற்காக உங்கள்

குறையை நான் நிறைவு செய்ய வேண்டும் என்று எங்கே எனக்குக் கட்டாயம் உள்ளது?" என்று கண்ணன் பதில் அளித்தான்.

அதற்கும் ஆய்ப் பெண்கள் சாதுரியமாகப் பதில் கூறுகிறார்கள்.

'உனக்கும் எங்களுக்கும் உள்ள தொடர்பைப் பார்த்தால் எங்கள் காரியத்தை நீயே செய்ய வேண்டும் என்னும் கட்டாயம் மிகத் தெளிவாகி விடுகிறது. உன்னுடைய பொருளாக இருக்கும் நாங்கள் எப்படி எங்களைக் காத்துக் கொள்ள முடியும்? உடைமையாக இருக்கும் நாங்கள் உடையவனான உன்னை அல்லவா நோக்க வேண்டும்? முழுமையைக் குலைத்துக் கொண்டாலும் தொடர்பை அறுத்து விட முடியாதப்பா! உன்னுடைய தொடர்பு எங்களுக்குக் குடல் தொடக்கு!' என்கிறார்கள்.

'ஒரு குடம் நீருடன் போகும் உறவான மனித சம்பந்தத்தை இட்டா நீங்கள் காரியம் கொள்ள நினைக்கிறீர்கள்?' என்று கண்ணன் அவர்களிடத்தே கேட்டான்.

அதற்கும் அவர்கள் பதில் தருகிறார்கள்:-

'கண்ணா! உனக்கும் எங்களுக்கும் உள்ள உறவு ஒழிக்க ஒழியாதது. உன்னாலும் ஒழிக்க முடியாது; எங்களாலும் ஒழிக்க முடியாது நீயும் நாங்களும் சேர்ந்தாலும் நம் உறவை ஒழிக்க முடியாது. உன்னை விட்டுத் தனி இருப்பு எங்களுக்கில்லை. தனி இருப்பு இல்லாத ஒன்றைச் சர்வ சக்தி கொண்ட உன்னாலும் அழிக்க முடியுமோ?" என்கிறார்கள்.

முடிவிலே "கோவிந்தா" என்று அப்பெண்கள் கூப்பிடுகிற பொழுது அச் சொல்லிலே அகப்பட்டுக் கொண்டு விட்டானாம், கண்ணன் பரமபத நிலையிலே உள்ள இறைவனாக எண்ணினால் தன் சுய ஆற்றல் தனித்துவ ஆளுமையாலே இந்த ஜீவர்களை ஒழித்தாலும் ஒழிக்கலாம். ஆனால், ஆய்க்குலத்திலே பிறந்து ஆயர்கள் நடுவே வளர்ந்து அவர்களைக் காப்பாற்ற மலையைத்

தூக்கிப் பிடித்த கோவிந்தனாலே எவ்வாறு அவர்களை ஒதுக்கித் தள்ள முடியும்?

ஆகவே, ஆய்ப் பெண்கள் மிகவும் உரிமையுடன் 'கோவிந்தா! நீ இங்கு ஆய்க்குலத்துக்கு வந்து எங்கள் கைகால்களைப் பிடித்து ஏற்படுத்திக் கொண்ட உறவை உன்னால் ஒழிக்க இயலாது!' என்கிறார்கள். "இன்னும் கூறுகிறோம் கேள். நாங்கள் அறிவொன்றுமில்லாத காரணத்தாலே இதுவரை உன்னைப் பல சிறிய சிறிய பெயர்களை வைத்து அழைத்து விட்டோம். அதற்குச் சீற்றம் கொள்ளாதே! 'நாராயணா! பற்பநாபா! மாதவா!' என்கிற பெயர்கள் எல்லாம் உனக்குச் சிறிய நாமங்கள். நீயே விரும்புகிற, எங்களைக் காப்பாற்றிய எங்களுக்கே விருப்பமான திருநாமம் மூன்றெழுத்து மந்திரமான 'கோவிந்தா' என்பதுதான். ஆகவே, அந்த நாமத்தை இட்டே அழைக்கிறோம்!" என்று பேசி முடித்தார்கள். 'இறைவா! நீ தாராய் பறை!" என்று பேசி முடித்தார்கள். 'இறைவா! நீ தாராய் பறை!' என்று தங்கள் விண்ணப்பத்தை இறுதியிலே வைக்கிறார்கள்.

பகவத் கீதையில் உள்ள சரம சுலோகத்துக்கு ஈடான இப்பாசுரத்தைப் பாடுவோம்!

*"கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம்*
*அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்*
*பிறவிபெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்*
*குறைவொன்று மில்லாத கோவிந்தா! உன்தன்னோடு*
*உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது*
*அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்*
*சிறுபேர் அழைத்தனவும் சீறிஅருளாதே!*
*இறைவா! நீ தாராய் பறை! ஏலோ ரெம்பாவாய்"*

### குற்றவேல் எங்களைக் கொல்லாமல் போகாது

திருப்பாவையின் உயிர்நிலைப் பாட்டாக இருப்பது இந்த இருப்பத்தொன்பதாவது பாசுரம்.

ஆய்ப் பெண்கள் பேச்சிலே ஆண்டாள் திருப்பாவைச் செய்தியாகக் கூறும் முடிந்த மெய்ப் பொருளின் பிழிவு இங்கே காணக் கிடக்கிறது.

'பறை பறை' என்று வேண்டிவந்த அந்தக் கொட்டுகிற கருவியின் மறைந்த பொருள் இங்கு வெளிப்படையாகப் பறை அடிக்கப்படுகிறது. தொடக்கத்தில் காணப்படும் முதல் தொடர் 'மார்கழித் திங்கள்' என்பதுடன் இந்தப் பாசுர முதல் தொடரைச் சேர்த்துப் பார்த்தால் நூலின் முழுத் தொடர்பும் தெளிவாகி விடுகிறது. அதாவது, 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில் சிற்றம் சிறுகாலை வந்து உன்னைச் சேவித்து' என்று கொண்டால், நோன்பின் ஆழ்ந்த குறிக்கோள் புலப்பட்டு விடுகிறது.

சிற்றம் சிறுகாலை என்பது காலையிலும் சிறிய காலை, மிகச் சிறிய காலைப் பொழுது எனப் பொருள் படுகிறது. சிற்றம்+சிறு+காலை.

இப்படிப்பட்ட நேரத்தில் வந்து கேட்பதெல்லாம் ஒரே வேண்டுகோள்தான்!

"நாங்களோ மாடு மேய்த்து வாழும் ஆய்க் குலத்தில் பிறந்தவர்கள்; என்றாலும் உன்னையே எங்களுடைய உறவாகப் பெறும் பெரிய புண்ணியம் பெற்றுவிட்டோம். ஆகவே, நீ எங்கள் நாயகன் ஆகிவிட்டாய் ஏதோ பறை என்று கேட்பது கொட்டும்பறை அல்ல. உனக்கே நாங்கள் ஆட்பட்டு, உனக்கே உற்றோமே ஆகி, எப்பொழுதும் குற்றேவல் புரிய நீ எங்களைக் கொள்ள வேண்டும். மற்றைய எங்களுடைய ஆசைகளையும் நீயே போக்க வேண்டும், இதுதான் நாங்கள் வேண்டுகிற பரம புருஷார்த்தம்; அதாவது தீர்ந்த முடிந்த உறுதிப் பொருள்!" என்கிறார்கள் பெண்கள்.

பிறப்பற்ற இறைவன் இந்த ஆய்ப் பெண்கள் நடுவே பிறந்து கலந்ததுதான் இவர்கள் நோக்கம் நிறைவேறத் துணை ஆயிற்று.

"நாங்கள் விரும்பும் பறை உன்னையே நாங்கள் பெறுவதுதான்!" என்கிறார்கள்.

"உன்னைப் பெற்ற பிறகு நாங்கள் எங்களுக்கு என்று இருக்கலாகாது. உன்னுடைய அடிமைகளாக உனக்கே தான் தொண்டு செய்ய வேண்டும்."

"ஆமாம்; அந்தத் தொண்டுகூட ஏதோ மிகப் பெரிய கைங்கரியம் என்று இருப்பது அல்ல. உன்னுடைய சின்னச் சின்னக் காரியங்களுக்கு - இன்னும் தெளிவாகக் கூறப் போனால் - உன்னுடைய அன்றாடச் சிறு தேவைகளுக்கு - உன் அந்தரங்கக் காரியங்களுக்கு ஏற்ற தொண்டுகளை நாங்கள் புரிய நீ ஏவல் செய்ய வேண்டும். பணி கொள்வதும் உன்உரிமையே! பணியைச் செய்விப்பதும் உன் பங்கே. அதில் எங்களுக்குச் சுயஉரிமை இல்லை!" என்கிறார்கள்.

மேலும் அவர்கள் தொடர்ந்து கூறுகிறார்கள் :

"உனக்குச் சிறப்புச் செய்யப் பிறந்த நாங்கள் உன்னுடைய மீதமான எச்சம்தான். செய்கை ஆணவம் சிறிதும் தலை காட்டாத முழு அடிமைத் தொண்டே நாங்கள் விரும்பி வேண்டுவது. எதைக் குற்றேவலாக நாங்கள் செய்தாலும் அது எங்கள் உகப்புக்கு அல்ல; உன்னுடைய உகப்புக்கே எங்கள் தொண்டு. நீயே, உனக்காக உன் மகிழ்ச்சியாக எங்களைப் பணி கொள்கிறாய்! உன் அருளாலே உன் தாள் வணங்கி உன் அடிமை செய்யப் பெறுவதே எங்களுக்கு உய்வு."

'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்கிறார்கள். "உனக்கன்றி வேறு எவர்க்கும் நாங்கள் ஆட்படோம்" என்னும் பொருள் இதிலே தோன்றினாலும், அதன் உள்ளார்ந்த நுட்பம், ஆட்படுவது இறைவன் உகப்புக்கே என்பதாகும். 'உனக்கே' என்பதில் 'ஏ'காரம், இறைவன் உகப்புக்காக மட்டுமே, ஜீவன் உகப்புக்காக அல்ல என்பதை வலியுறுத்தும்.

'இந்தக் குற்றேவல் விழைவில் அன்றி வேறு எங்கும் எங்கள் ஆசை செல்லல் ஆகாது!" என்பதை 'மற்றை நம் காமங்கள் மற்று' என்பதில் பெண்கள் குறிப்பிடுகிறார்கள்.

'இந்தப் பிறவியில் மட்டும் குற்றேவல் வாய்ப்புக் கிடைத்தால் போதுமா?' என்றால், 'இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றதால், ஏழேழ் பிறவிக்கும் இது வாய்க்க வேண்டும்!' என்றும் கேட்கிறார்கள்.

'உன் பொன்னான திருவடிகளை நாங்கள் பற்றக் காரணமும் இதுவேதான்!' என்று முடிக்கிறார்கள்.

இதோ திருப்பாவை முழுவதையும் இணைத்துப் பார்ப்போம். "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில், சிற்றம் சிறுகாலை வந்து உன்னைச் சேவித்து உன் பொற்றாமரை அடியே போற்றும் பொருள் குற்றேவல் எங்களைக் கொள்வதே. எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே ஆதலால் மற்றை நம்காமங்கள் மாற்று!"

ஆய்ப் பெண்கள் அனைவரும் சேர்ந்து முப்பது நாள்களாகப் பட்டபாட்டை ஒரே குரலில் இணைந்து பாடிப் பரவுகிறார்கள். அவர்கள் சாற்றும் இறுதியான உறுதியைக் கேட்போம். இதுவே நமக்கு அவர்கள் சாற்றும் மறையாகிறது; சாற்றும் முறையும் ஆகிறது.

*"சிற்றஞ் சிறுகாலை வந்துன்னைச் சேவித்துஉன்*
*பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்*
*பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்துநீ*
*குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது*
*இற்றைப்பறை கொள்வான் அன்றுகாண்கோவிந்தா!*
*எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு*
*உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்*
*மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்!"*

**எங்கும் திருவருள் பெறுக**

திருப்பாவையின் இறுதிப் பாசுரமான இம் முப்பதாவது இந்நூல் கற்றோர் அடையும் பயனைக் குறிப்பிடுகிறது.

ஆய்ப் பெண்கள் நோற்ற நோன்பை ஆண்டாள் தன் கற்பனை விழைவால் எண்ணி உருகி அந்தப் பாவனையிலே வாழ்ந்து கோவிந்தனுடன் கூடிய உணர்வு பெற்றாள் என்பது இப்பாட்டால் விளங்கத் தோன்றுகிறது.

எடுத்த எடுப்பிலேயே ஆண்டாள் கண்ணனின் மற்றைய இரு திரு நாமங்களை எடுத்தாண்டு அவற்றின் மூலம் அவன் குணங்களான நீர்மையையும் அழகையும் வெளிப்படுத்துகிறாள். திருப்பாற் கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதம் ஈந்த அவன் பேரருளை முதற்கண் குறிப்பிடுகிறாள். அவன் வாத்ஸல்யம் என்னும் தாயன்பின் உறைவிடமாக இருப்பவன். இந்தத் தாயன்பு அவனுக்குப் பிராட்டியின் தொடர்பாலே அன்றோ ஏற்பட்டது! அந்தப் பெரிய பிராட்டியாரைத் தன் மார்பிலே கொண்டவன், திருப்பாற்கடலைக் கடைந்த அப்பெருமான்தானே! இதனை ஆண்டாள்.

"வங்கக் கடல் கடைந்த மாதவனை' என்று குறிப்பிடுகிறாள்.

நம் கண்ணுக்கு முன் காட்சி அளிக்கும் கடலிலே மரக்கலங்கள் செல்வன. ஆகவே, அதையே குறிப்பிட்டு 'வங்கக் கடல்' என்றாள். அதுவே கலமே செல்லாத திருப் பாற்கடலையும் சுட்டுகிறது. அப் பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்தபொழுது பெரிய பிராட்டியார் அங்கே தோன்றினார். அவளைத் தன் மார்பில் ஏற்றான் பெருமான். ஆகவே, 'மாதவன்' ஆகிவிட்டான்.

அவள் அழகிலே ஈடுபட்ட அவன் அவளை மார்பிலே ஏற்றான். அவனை அவள் அடையக் காரணமாக இருந்த அவன் அழகு எதுவோ அதையே 'கேசவன்' என்ற திரு நாமத்தால் ஆண்டாள் குறிப்பிடுகிறாள்.

திருப்பாற்கடலைக் கடைந்த பொழுது, அலைந்த அவன் கேசபாசங்களின் அழகிலே அவள் தன்னை இழந்தாள். தலையழகைக் குறிப்பிடும் சொல் கேசவன் எனப்படும். இதற்கு வேறு ஒரு பொருளும் உண்டு. 'எவன் ஒருவன் தான் மற்றவர்களுக்கெல்லாம் ஈசன் எனப்படும் தலைமை உடையவனோ, அவனே கேசவன் என்பவன்.

'எனவே திருப்பாற் கடலைக் கடைந்த இறைவன் மாதவன் ஆனான்; மாதவன் ஆகக் காரணம் அவன் கேசவனாக இருந்ததாலே!' என்று இரு பொருளும் இயையப் பாசுர அடி அமைந்துள்ளது.

இப்படிப்பட்ட பெருமானைச் சந்திரனை ஒத்த அழகான முகம்கொண்ட ஆய்ப் பெண்கள் தாமே சென்று விரும்பி வேண்டிப் பறை என்னும் குற்றேவல் செய்யும் பணியைப் பெற்றார்களாம். அப்படி அவர்கள் பெற்ற குற்றேவல் பணி பற்றிய செய்தியைக் கூறும் பாசுரங்கள் முப்பது ஆகும்.

ஆண்டாளால் அருளப்பட்ட இப்பாசுரங்கள் முப்பதும் கூட்டமாக இருந்து பாடத் தக்கவை. தென் புதுவை நகர், மலர்மாலைத் தொண்டர், மலர் மாலை மார்பினர் திருமால் நினைவினரான விஷ்ணு சித்தர் ஆசியாலே கோதை என்னும் அவர் மகள் பாடிய பாசுரங்கள் இவை. சங்கமாக இருந்து பாடத்தக்க இப்பாசுரங்கள் சங்கத் தமிழுக்குப் பின்வந்த ஈரத்தமிழ்மாலை; இப் பாசுரங்கள் முப்பதையும் தவறாமல், பயின்று பாடுபவர் நான்கு தோளனான

தாமரைக் கண்ணன் திருமாலின் அருளால் என்றும் எங்கும் எப்பொழுதும் இன்புற்றே வாழ்வார்கள்.

திருப்பாவை நிறைவு பெறுகிறது, இதோ!

*"வங்கக்கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்*
*திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி*
*அங்கப்பறை கொண்ட ஆற்றை அணிபுதுவைப்*
*பைங்கமலத்தண் தெரியல்பட்டர் பிரான் கோதைசொன்ன*
*சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே*
*இங்கிப் பரிசுரைப்பார் ஈரிண்டு மால்வரைத் தோள்*
*செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்*
*எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய்!"*

ஸ்ரீ:



டாக்டர் மதி. சீனிவாசன் பேச்சாற்றல் நிறைந்த சொற்பொழிவாளராகவும் சிறந்த எழுத்தாளராகவும் ஐம்பது ஆண்டுகளாய், இலக்கியம், ஆன்மீகம் ஆகிய துறைகளில் பயனுடைய தொண்டு ஆற்றியவர். ஏழாண்டுகள் கணித, ஆங்கில ஆசிரியராக இருந்த இவர், முப்பது ஆண்டுகள் சென்னை வைணவக் கல்லூரியில் தமிழ் பேராசிரியராக பணி செய்தார். இவருடைய தமிழ், ஆங்கிலப் புலமைக்கு வித்து இட்டவர், பேராசிரிய முதல்வர் அ. சீனிவாச ராகவன் ஆவார். 1980ல் சென்னைப் பல்கலைக்கழக தத்துவத் துறையில் டாக்டர் V.A. தேவசேனாபதி அவர்கள் மேற்பார்வையில் திருவாய்மொழி ஆய்வுக்கான டாக்டர் பட்டம் பெற்றார். இருநூறுக்கும் மேற்பட்ட தரமான கட்டுரைகளையும் நூற்றுக்கணக்கான கவிதைகளையும் பல்வேறு இதழ்களிலும் பத்திரிகைகளிலும் எழுதி வெளியிட்டு புகழ்பெற்றார். இருபதுக்கும் மேற்பட்ட ஆய்வுரைகளைப் பல்கலைக்கழகக் கருத்தரங்குகளிலும் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்திலும் ஆற்றி உள்ளார். பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் மூன்று அமைவுகளில், ஆழ்வார்கள் கண்ட மெய்ப்பொருள் என்னும் தலைப்பில் திரு சந்தானம் அறக்கட்டளை மானியச் சொற்பொழிவு நிகழ்த்தினார். 'வைணவமணி', 'ஆழ்வார் அருட்செல்வர்', 'கவிமாமணி' ஆகிய விருதுகளைப் பெற்றுள்ள இவர், 1968 முதல் 2000 வரை அகில இந்திய வானொலியில் கவிதைகளையும் உரைகளையும் வழங்கி உள்ளார். பொதிகைத் தொலைக்காட்சி சான்றோர் சிந்தனை நிகழ்ச்சியிலும் பங்கேற்றுள்ளார்.

இவர் வாகம்ருதவர்ஷி ஸ்ரீ உ.வே. வேளுக்குடி வரதாசார்யர் ஸ்வாமியின் திருவடிவாரத்தில் அமர்ந்து ரஹஸ்ய க்ரந்தங்களையும் நம்பிள்ளையின் ஈட்டுரைகளையும் வரிஅடைவே சில ஆண்டுகள் தொடர்ந்து பயிலும் பேறு பெற்றார். நாற்பது ஆண்டுகளாக மார்கழி மாதம்தோறும் திருக்கோவில்களில் திருப்பாவைச் சொற்பொழிவு செய்துள்ளார். நம்மாழ்வார் அறக்கட்டளை சார்பில் ஏழாண்டுகள் பகவத்விஷயம் எனப்படும் ஈட்டுரையை விளக்கமாகப் பாடம் நடத்தி உள்ளார். ஸ்ரீமத் பரமஹம்ஸ எம்பார் ஜீயர் ஸ்வாமியின் அன்புக்குப் பாத்திரமாகிய இவர், அவருடைய நியமனத்தால் 'திருமால்' மாதஇதழின் பொறுப்பாசிரியராக பணிஆற்றுகிறார். ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, திருமலை நல்லான் ஸ்ரீ உ.வே. இராமகிருஷ்ண ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. புரிசை கிருஷ்ணமாச்சாரியர் ஸ்வாமி ஆகிய நால்வரின் திருவடிவாரங்களில் அமர்ந்து பயின்ற பேறு இவருடைய வேதாந்த ஞானத்துக்கு மிகவும் பயன் அளித்தது.

ஸ்ரீ:



டாக்டர் மதி. சீனிவாசன் பேச்சாற்றல் நிறைந்த சொற்பொழிவாளராகவும் சிறந்த எழுத்தாளராகவும் ஐம்பது ஆண்டுகளாய், இலக்கியம், ஆன்மீகம் ஆகிய துறைகளில் பயனுடைய தொண்டு ஆற்றியவர். ஏழாண்டுகள் கணித, ஆங்கில ஆசிரியராக இருந்த இவர், முப்பது ஆண்டுகள் சென்னை வைணவக் கல்லூரியில் தமிழ் பேராசிரியராக பணி செய்தார். இவருடைய தமிழ், ஆங்கிலப் புலமைக்கு வித்து இட்டவர், பேராசிரிய முதல்வர் அ. சீனிவாச ராகவன் ஆவார். 1980ல் சென்னைப் பல்கலைக்கழக தத்துவத் துறையில் டாக்டர் V.A. தேவசேனாபதி அவர்கள் மேற்பார்வையில் திருவாய்மொழி ஆய்வுக்கான டாக்டர் பட்டம் பெற்றார். இருநூறுக்கும் மேற்பட்ட தரமான கட்டுரைகளையும் நூற்றுக்கணக்கான கவிதைகளையும் பல்வேறு இதழ்களிலும் பத்திரிகைகளிலும் எழுதி வெளியிட்டு புகழ்பெற்றார். இருபதுக்கும் மேற்பட்ட ஆய்வுரைகளைப் பல்கலைக்கழகக் கருத்தரங்குகளிலும் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்திலும் ஆற்றி உள்ளார். பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் மூன்று அமைவுகளில், ஆழ்வார்கள் கண்ட மெய்ப்பொருள் என்னும் தலைப்பில் திரு சந்தானம் அறக்கட்டளை மானியச் சொற்பொழிவு நிகழ்த்தினார். 'வைணவமணி', 'ஆழ்வார் அருட்செல்வர்', 'கவிமாமணி' ஆகிய விருதுகளைப் பெற்றுள்ள இவர், 1968 முதல் 2000 வரை அகில இந்திய வானொலியில் கவிதைகளையும் உரைகளையும் வழங்கி உள்ளார். பொதிகைத் தொலைக்காட்சி சான்றோர் சிந்தனை நிகழ்ச்சியிலும் பங்கேற்றுள்ளார்.

இவர் வாகம்ருதவர்ஷி ஸ்ரீ உ.வே. வேளுக்குடி வரதாசார்யர் ஸ்வாமியின் திருவடிவாரத்தில் அமர்ந்து ரஹஸ்ய க்ரந்தங்களையும் நம்பிள்ளையின் ஈட்டுரைகளையும் வரிஅடைவே சில ஆண்டுகள் தொடர்ந்து பயிலும் பேறு பெற்றார். நாற்பது ஆண்டுகளாக மார்கழி மாதம்தோறும் திருக்கோவில்களில் திருப்பாவைச் சொற்பொழிவு செய்துள்ளார். நம்மாழ்வார் அறக்கட்டளை சார்பில் ஏழாண்டுகள் பகவத்விஷயம் எனப்படும் ஈட்டுரையை விளக்கமாகப் பாடம் நடத்தி உள்ளார். ஸ்ரீமத் பரமஹம்ஸ எம்பார் ஜீயர் ஸ்வாமியின் அன்புக்குப் பாத்திரமாகிய இவர், அவருடைய நியமனத்தால் 'திருமால்' மாதஇதழின் பொறுப்பாசிரியராக பணிஆற்றுகிறார். ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, திருமலை நல்லான் ஸ்ரீ உ.வே. இராமகிருஷ்ண ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. புரிசை கிருஷ்ணமாச்சாரியர் ஸ்வாமி ஆகிய நால்வரின் திருவடிவாரங்களில் அமர்ந்து பயின்ற பேறு இவருடைய வேதாந்த ஞானத்துக்கு மிகவும் பயன் அளித்தது.